உ

கணபதி துணை.

# சூளாமணிப் பதிப்புரை.

## குருவணக்கம்.

இறைவனே யுருவுகொண் டெழுந்தாங்கு வீற்று
மறைசையா தீனத்து மன்னுப் பதிந்த
கரணை யம்பதிக் கைலாச நாத
குரவன திருபத மருமலர்
சிரமிசை யிருத்திவெங் கருமுதல் களைவாம்.

## தமிழாசிரிய வணக்கம்.

தெள்ளுதமிழ்க் கடல்கடந்து செழியகலைத் துறைப்படிந்து
திரிபில் ஞானக்
கொள்ளைகொண்டு நுகர்ந்தமுத்துக் குமாரகவி மேகமிதைக்
கொடிச்சுன் ஞகை
வள்ளலெனு துள்ளமதி கொள்ளநறை விள்ளுதமிழ்
மணஞ்சற் றேறி
வெள்ளறிவின் முடைநாற்றம் வீவித்தான் விரைமலர்த்தாள்
மிலைவன் மாதோ.

தமிழுஞ் சம்ஸ்கிருதமும் ஈஸ்வரன்பால் உதித்த இரட்டைப் பிள்ளைகளாம். சம்ஸ்கிருதத்திற்குப் பாணினியுந் தமிழிற்கு அகத்தியருஞ் செவிலித்தாயராயினர். சம்ஸ்கிருதம் வடபாலில் நைமிசாரணியத்து ரிஷிகள் கோட்டத்திலுந் தமிழ் தென்பாலில் மதுரைப் பாண்டியர் அவைக்களத்திலும் வளர்ந்து முறையே வடமொழி தென்மொழியெனும் நாமம் வழங்கப்பெற்றன.

"இருமொழிக்குங் கண்ணுதலே முதற்குரவ ரியல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பும்
இருமொழியுந் தழீஇயினா ரான்றவரே யென்றாலிவ்
இருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ."

அகத்தியர்க்குத் தமிழிலக்கணம் அறிவுறுத்தியவர் சுப்பிரமணியக்கடவுளெனச் சைவர் கூறுவர். சமணர் அதனை மறுத்து அவர்க்கு அவ்வறிவுறுத்தினார் அவலோகிதனென்பர். அகத்தியர் சைவோத்தமராதலின் அது பொருந்தாது. அஃதெவ்வாறாயினும் ஆகுக. தமிழணங்கிற்குப் பாலருத்தி வளர்த்தவர் அகத்தியரென்பது அனைவருக்கும் உடம்பாடேயாம்.

வளர்ந்த இடம் மதுரையாயினுந் தமிழின் சனனபூமி கங்காதீரமேயென்பதூஉம், ஆரியர் வடமேற்றிசையினின்று வந்து கங்காதீரத்திற் குடியேறினபோது ஆண்டு இருந்த தமிழர் அவரோடு இணங்கியிராது பிரிந்து பற்பல இடங்களிற் சென்று சிதறுண்டு வதிந்தனரென்பதூஉம், அவர்களிற் தென்னாட்டிற்கு வந்தவர்களே ஈண்டுச் சேர சோழ பாண்டிய இராச்சியங்களை நாட்டினாரென்பதூஉம், மதுரைச்சங்கத்தில் வளர்ந்து விருத்தியடைந்து சிறப்புற்ற தமிழோடு அவ்வாறு சிறப்புறாதனவாய்க் காலவேற்றுமை சிறிதடைந்து வழங்குந் தென்மேற்கிற்புக்கு உறைந்த மலையாளரதும் மேற்கிற் புக்கு உறைந்த குடகரதும் உதகமண்டலத்துப் புக்கு உறைந்த தோடரதும வடக்கிற் புக்கு உறைந்த இமயமலைச் சாரலில் ஒருவகை வேடரதும் பாஷைகளுக்குள்ள ஒற்றுமையான் விளங்கும்

சம்ஸ்கிருதம் உச்சாரண வன்மையானும் வேதாகம அதிகாரத்தானும் மந்திரோபதேசப் பயிற்சியானும் ஆடூஉ லக்ஷணமுடையதாகத், தமிழ் தன் மிருதுத்தன்மையானுங் குயில் கிளி பூவைகள் தலைநாணும் ஓசையுங் கரும்பு தேன் பாகு பாலென்றிவற்றைவென்று தேவாமிர்தத்தோடொத்த இனிமையும் உண்டைமையானுந் தேவாரதிருவாசாதிகளினாற் சாக்ஷாத் ஈஸ்வரனையும் மயங்கச்செய்யும் வசீகரணத்தினா

னுஞ் சங்கீதசாகித்திய செய்யுள் விநோதங்களானும மகாஉ லக்ஷணம் மேற்பட்டது. இரண்டும் ஒன்றோடொன்று கல வாது விந்தகிரிக்கும் வேங்கடமலைக்கும் இடையே கிடந்த தோர் போாரணியத்தாற் காக்கப்பட்டுவந்தன. ஆயினும் மங்கைப்பருவமுற்ற கன்னித்தமிழ் பின்னர்த் தன் புராணே திகாசகாலத்திற் சம்ஸ்கிருதநாயகனை மாலை சூட்டிமணமட ர்ந்தது. ஆதலால் இஞ்ஞான்றைத் தமிழில் வழக்கினுஞ் செய்யுளினுஞ் சமஸ்க்கிருதம் எங்கணும் வியாபித்துக் கொண்டிருக்கின்றது. பண்டைத்தமிழோ அக்கலப்புடை தன்று. இஃது இரண்டுபாஷையின் இலக்கணவிதிகளாலு சங்கமரீஇய பழைய தனித் தமிழ்நூல்களாலும் உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெள்ளிதிற் புலப்படும்.

நைமிசாரணிய ரிஷீஸ்வரர்கள் காலத்தின் பின்ன சம்ஸ்கிருதம் ஆரியப் பிராமணாசிரியர்களாற் பராமரிக்கப்பட் டதுபோல மதுரைச் சங்கத்தார் காலத்தின்பின்னர்த் தமிழிற்குக் கைகொடுத்துப் பரிபாலனஞ்செய்தவர்கள் சமணரென்பதூஉம், இக்காலத்திற் தமிழ் கற்போர் இலக்கிய இலக்கணப் பயிற்சிக்காக ஓதிவருமநூல்களிற் பெரும்பான்மையன சமணர்காலத்திற் சமணாசிரியர்களால் எழுதப்பட்டன வென்பதூஉம் முன் வீரசோழியப் பதிப்புரையிற் கூறியிருக்கின்றேன். அவற்றுட் சீவகசிந்தாமணி முதலிய பெருங்காப்பியங்களொத்த சிறப்புடைய தமிழிற் சமணர் எழுதிவைத்த யசோதரகாவியம் உதயணகாவியம் நாககுமாரகாவியம் சூளாமணி நீலகேசியெனும் பெயரிய சிறுகாப்பியங்களும் உள. இன்னும் அனேக பிரபந்தங்கள் இதிகாசங்கள் புராணங்கள் சமயாசார தத்துவசாஸ்திரங்கள் உள. அவைகள் காலாந்தரத்தில் ஏடெழுதுவோராற் பெருகிய பிழைகளினாற் பேதப்பட்டு மிக விகாரமுற்றுக் கிடக்கின்றன.

“இற்றவர் தேவராய்ப் பிறப்பரீண்டுடல்
பற்றிய விசும்பிடைப் பரவுமாமுகி
றெற்றெண வீழ்ந்தெனச் சிதைந்துபோகுமான்
மற்றினி மக்கடம் வண்ணஞ் செப்புவாம்.”

என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளின் மூன்றும் அடி ஒரோ வொரு பிரதியில் "அற்றென முற்றிலு மழிந்து போகுமால்" எனவுந், "தெற்றென வீந்தென வீந்து போகுமால்" எனவும், "இற்றென விழிந்தென வீந்து போகுமால்" எனவுஞ் சிலபிரதிகளில் முதலடியொழித்து ஏனைமூன்றடியும் முற்றும் ரூபம் மாறி "அற்றமில் பறவைகளடையக் கொண்டு மீபாய்ச்—சுற்றிய பாற்கடறுளும்ப வீட்டிடும்—பொற்றிரள் பரையொடு மின்னுப்போலவே" எனவும் பிறழ்ந்து கிடப் அன் இவ்விகாரங்கள் இத்துணையவென்று கூறற்பாலவல்ல. வறேஞ்சுவடிகளை ஒப்பிட்டுப் பரிசோதனைசெய்பவர்களுக்கே பறைவைகளால் நேரிடும் வருத்தந் தெரியும்.

சூளாமணி இரண்டாவது காவியமென அதன்பிரதிகளி கிருக்குங் குறியீட்டினாற் றெரிபவருகின்றது. முதலாவது காவியம் எதுவென்றும் மற்றைய காவியங்களின் வரிசைக்கிரமம் இன்னதென்றும் விளங்கவில்லை. நீலகேசி என் கைக்கு அகப்படவில்லை. ஆயிரத்து நானூற்றுச்சொச்சஞ் செய்யுளுள்ள மேருமந்தரபுராணத்தில் முதற்பாகமும் யசோதரகாவியமுங் காஞ்சிபுரத்திலிருந்த ஸ்ரீ பாகுபலி நயினாரால் அச்சிடப்பட்டன. எஞ்சியன அச்சில் வரவில்லை. சுவிரதகாவியம் என்று ஒன்றுவடமொழியில் இருப்பினுந் தமிழிற் செய்யப்பட்டதாகத் தோற்றவில்லை.

யாப்பருங்கலவிருத்தியிலும் அதனை முதனூலாகக் கொண்டு அமுதசாகரர் இயற்றிய காரிகைக்குக் குணசாகரர் சகாப்தம் ௨௦௦-௩௦௦ அளவில் எழுதிய விரித்துரையிலுஞ் சூளாமணியிலிருந்து அநேகசெய்யுட்கள் இலக்கியமாக எடுத்துக் காட்டப்பட்டிருத்தலானுஞ், சூளாமணியின் காலஞ் சோழமண்டலத்திற் கார்வெட்டி நகரத்திலிருந்து அரசுபுரிந்த விசயராசன் காலமென்பது நூற்சிறப்பிற் "திக்கெட்டும் புகழ்படைத்த திறல்விசயன்" என்றற்றொடக்கத்துச் செய்யுளான் அறியக்கிடத்தலானும், கார்வெட்டிநகரின் காலம் உறந்தைக்கு முந்தியதாதலானும் இந்நூலின்வயது ஆயிரத்தைஞ்ஞூறு வருஷத்திற் குறையாது.

எவ்வெப்பாஷையினும் பெருங்காவியங்கள் தோற்றிய பின்னரும் ஆங்காங்குக் காலந்தோறுஞ் சிறுகாவியங்கள் உதித்து நடைபெறுதல் வழக்காயினும், சிலபல சிறுகாவியங்கள் ஜனித்தபின்னரே பெருங்காவியங்கள் பிறத்தல் இயல்பு. மேற்கூறிய சிறுகாவியங்களை ஒழித்தாற் சமணருக்குட் சிந்தாமணிக்கு முன்னர்த் தோற்றிய சிறுகாவியங்கள் வேறில்லை. இருந்து இறந்ததாகவுங் கேள்வியில்லை. அன்றியுங் குணசாகரர் காலத்திற் சிந்தாமணி முதலிய பெருங்காவியங்கள் இருந்தனவாகில் விசேஷமாக அவற்றினின்று உதாரணங்கள் காட்டியிருப்பர். ஆதலால் இந்நூல் ஆருதப் பெருங்காப்பியங்களுக்கு முந்தியதென்று கொள்ள தவறாகாது.

யகர ஆசெதுகைக்குக் "காய்மாண்ட" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுள் காட்டாக எடுத்து ஆளப்பட்டிருக்கின்றதாலோவெனின், ஆண்டு உரையாசிரியர்கள் காட்டியது * "வேய்காயு மென்பணைத் தோள்" என்னுஞ் சூளாமணிச் செய்யுளென்றும், அஃது ஆசிரியராற் சவலைவிருத்தத்திற்கு ஓர் இலக்கியமாதற்பொருட்டு வைக்கப்பட்டது உணராது, † கொகுடியென்பதோர் மரப்பெயருளதென்று அறியார் கோங்கமென்று மாற்றினாற்போல, அச்செய்யுளில் இரண்டாம் அடி சீர் குறைந்திருப்பது பிற்காலத்துச் சிதைவென்று கருதி, அதனை ஒழித்து, அதற்குப் பதிலாகக் "காய்மாண்ட" என்றற் றொடக்கத்துச் செய்யுளை இக்காலத்தில் யாரோ சொருகிவிட்டார்களென்றும், எழுபது எண்பது வருஷத்திற்கு முந்திய பழஞ் சுவடிகளில் "வேய்காயுமென் பணைத்தோள்" என்னும் உதாரணமே இன்னுங் காணலாமென்றும், ரகர ழகர ஆசெதுகை மூன்றாமெழுத்தெதுகை முதலியவைகட்குச் சூளாமணியிலக்கியங்கொண்ட உரையாசிரியர்கள் யகரமொன்றற்கு மாத்திரஞ் சிந்தாமணியிற்

* சூளாமணி அரசியற்சருக்கம் ௬௦௪-ம் செய்யுள்.
† ,, தூதுவிடுசருக்கம் ௪-ம், ,,
‡ சிந்தாமணி நாமகளிலம்பகம். ௨-ம் ,,

கைவைத்தற்கோர் அவசியம் இருக்கமாட்டாதென்றுஞ், சிந்தாமணியிற் புதிதாகத்தேடி எடுத்ததென்பதற்கு அஃது அக்காப்பியத்தின் முதலாவது இலம்பகத்தின் முதலிலே கிடப்பதே ஒரு சான்றென்றுங் கூறிவிடுக்க. நூல்முழுவதிலுஞ் சிந்தாமணி உதாரணம் வேறில்லையே.

நாலைந்து வருஷத்தின் முன் யான் ஸ்ரீகைலாசபரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துச் சற்குருநாதசுவாமிகள் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகளைத் தரிசிக்கப் போனபோது சுவாமிகள் சூளாமணி ஓர் அருமையானதென்றும அஃது இப்பொழுது மாரணதசை அடைந்திருப்பதால் அதனை அச்சிட்டுக் காப்பாற்றுதல் தக்கதென்றுந் தமிழ்ப்புராதன நூலகளை என்னால் இயன்றமட்டுந் தேடிப் பரிசோதித்து வெளியிடும் முயற்சியிற் கையிட்டிருப்பதால் யானே அதனைச் செய்தல்வேண்டுமென்றுங், கட்டளையிட்டதுமன்றிச், சென்னை மகாலிங்கையர் பிரதியொன்று தமது ஆதீனத்திலிருந்ததை எடுத்து என்வசம் அனுப்பியுமருளியது. அதனை வாங்கி வாசித்துப்பார்த்தபோது, காரிகையில் இலக்கியமாகக் காட்டப்பட்டுள்ளனவுஞ் சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்தனவாயினும் யாது நூலகத்திருந்து எடுக்கப்பட்டனவென இக்காலத்து அதனை ஓதுவார்க்குத் தெரியாதனவுமாகிய விருத்தங்கள் ஆங்காங்குக் கிடத்தல் கண்டு, அஃதோர் அரிய இலக்கியமேயெனத் தேறிச் சுவாமிகள் கட்டளையைச் சிரமேற்றாங்கி, வேறுபிரதிகள் தேட ஆரம்பித்தனன். அவ்வவ் இடங்களில் இருக்கும் எனது இஷ்டர்களான உத்தியோகஸ்தர்கள் வித்துவான்களுக்குப் பிரதிகள் விசாரித்துச் சம்பாதிக்க எழுதியதில், அப்பொழுது கருவூரிலிருந்த பண்டிதர் ஸ்ரீமத் வெங்கட்டராமையங்காரவர்கள் தம்மிடம் இருந்ததோர் பிரதியை அனுப்பினதுமன்றி மன்னார்குடியிற் சைனதெருவில் ஒருபிரதி இருப்பதாகவுந் தெரிவித்தார்கள். அந்தப் பிரதிக்காக ஆளனுப்பி, அது கும்பகோணத்துச் சாசனப்பதிவுசாலையில் உத்தியோகமாயிருந்த சைனமாணவகன் ஒருவர் எடுத்துப்போயிருப்பதை அறிந்து,

அவரிடம் நேரிலே சென்று கேட்டதற்கு, அவர் யான் அப்பொழுது கலித்தொகைப் பரிசோதனையிற் கையிட்டிருந்தமைபற்றித், தன்னிடம இருக்கும் புத்தகம எனக்கு எப்போதுவேண்டுமோ அப்போது அனுப்பிவைப்பதாக வாக்களித்தனர். மற்ற இடங்களிலிருந்து இப்பெயருள்ளதோர் நூலிருப்பதாகவும் அங்குள்ளவர்களுக்குத் தெரியவில்லையென்று பதில்வந்தது. இம்மூன்று பிரதிகள்தான் தமிழ்நாட்டிலுண்டென்று எண்ணிக்கொண்டு, அதுகாறும் பிரசுரஞ்செய்த நூல்களால் எனக்கு நேரிட்ட செலவைக்குறித்து ஆலோசித்து, இந்நூலைச் சென்னைச் சர்வகலாசங்கத்தார் தமது பொறுப்பில் அச்சிடுவித்து நாலைந்து வருஷத்திற்குப் பிர வசபரீக்ஷைக்கு ஏற்படுத்தினால உத்தமமாக இருக்குமென அச்சங்கத்தலைவர்களுக்கு விண்ணப்பஞ்செய்தேன். அ கள் தங்கள் உத்தியோகத் தவணையை அதிக்கிரமித்து நாலைந்து வருஷத்திற்குப் பாடநியமனம்பண்ணுதல் கிரமத் தாழ்வென்று உத்தேசித்துப் போலுஞ், சென்னைச் சமஸ்கிருத திராவிடக்கிரந்த பரிபாலனசபையாரால் என்விண்ணப்பங் கவனிக்கப்படும்படி அச்சங்கலிகிதருக்கு என் விண்ணப்பத்தை அனுப்பினார்கள். அச்சபையார் நூலை அச்சிடுதற்கு இசைந்து என் சங்கேதங்களைப் பூரணமாகத் தெரிவிக்கும்படி எனக்கு எழுதினர்.

இதற்குள் இந்நூற் பிரகடனதி செலவுகட் யான் காத்திராவணணம் ஒருவழி ஏற்பட்டது. தமிழ் கற்கும் மாணாக்கருக்குப் பஞ்சலக்ஷணப் பயிற்சி உண்டாதற்பொருட்டுத் திருவாரூர் வன்மீகநாததேசிகர் குமாரர் வைத்தியநாததேசிகர் இயற்றியருளிய இலக்கணவிளக்கம் மூலமும் உரையும் அச்சிட எண்ணி அதன் செலவிற்காக ஒரு விளம்பரஞ் செய்திருந்தேன். அப்பொழுது அச்செலவில் ஒரு பாதியைத் தாங்கள் பொறுத்துக்கொள்வதாக றங்கூன் டிப்டிக் கமிஷனராபீசில் மானேஜராக இருக்கும் எனது சகோதரன் செல்வச் சிரஞ்சீவி இளையதம்பிப்பிள்ளையும் அ இஷ்டர்கள் சிலருஞ் சேர்ந்து ருoo ரூபா அனுப்பிவைத்

கள். பின்பு அந்ூற பிரகடனச்செலவு முழுவதுந் தாமே தருவதாகப் போடிநாயக்கனூர் ஜமீன்தார் ம-ா-ா-ஸ்ரீ திருமலைபோடய காமராசபாண்டியநாயுக்கர் துரை தெரிவித்தினர். அதனை அவர்களுக்கு அறிவித்து அவர்கள் அனுப்பிய பணத்தை வேறொரு பூர்வக்கிரந்த பிரகடனத்திற்காகச் செலவு செய்யலாமா எனக் கேட்பித்தேன். அவர்கள் அனைவரும் அதற்குச் சம்மதி கொடுத்தார்கள்.

இஃதிவ்வாறிருக்க என் கலித்தொகைப் பதிப்பு வெளிப்பட்டது. அது சென்னைச் சர்வகலாசங்கப் பரீக்ஷைகளுக்கு உபயோகமாதற்பொருட்டு, அதன் பதிப்புரையில் யான் தெரிந்தவாறு அதிற் பதிஞேரிடத்திற் குஃறொடரன்மொழி வந்தவற்றை மாற்றியிருந்தனன். பற்பல சிரேஷ்டகனவான்கள் அச்செய்கையை மிகவுங் கண்டித்து எனக்குக் கடிதம் எழுதினார்கள். அதனால் அஃதன்ன இடக்கர் மொழிகளைச் சிதைத்து அச்சிடுதல தர்மமல்லவென்று தெளிந்தும், ஷைசபையார் அவற்றின் செறிவோடு நூலகளைப் பிரசரியாரெனத் துணிந்தும, அவ்வாறு பிரசரித்தல் எனக்குக் கட்டளையிட்டருளிய சுவாமிகளின் அனுமதிக்கு மாறாகுமென்று நினைந்துஞ், செலவிற்கு வேறுவழி ஏற்பட்டதைப் புகழ்ந்தும் யானே எவ்வாற்றானும இந்நூலை அச்சிடத் தீர்மானித்தேன். இறங்கூன் பணம் அதற்கு உபயோகமாயினது.

இப்பால் முன் தஞ்சாவூர்க் கீழ்க்கோர்ட் நீதிபதியாயிருந்த ம-ா-ா-ஸ்ரீ திரு. கனகசபைமுதலியாரவர்கள், என் முயற்சிக்கு எஞ்ஞான்றுந் தமது கஷ்டத்தைப் பாராமற் கையெழுத்துப் பிரதிகள் தேடி உபகரிப்பவர், அப்பொழுதும் பற்பல இடங்களினுந் தமதிஷ்டர்கள் மூலஞ் சூளாமணிப் பிரதிகள் தேடுவாராய், வேதாரணியம் ஸ்ரீ அருமைப்பெருமாள்முதலியார் மகன் அனந்தவிஜயமுதலியார் பிரதியொன்றும் பெருமண்டூரிலுள்ள ஒரு சைனவித்துவானுடைய பிரதியொன்றுமாக இரண்டு பிரதி தமக்கு அகப்பட்டு அனுப்பி வைத்தனர். அதன்மேல் விழுப்புரம் டிஸ்ற்றிக்ட் முன்சிப் ம-ா-ா-ஸ்ரீ இராமச்சந்திரையரவர்கள், வழி

யா  வீடூர்ச் சைனவித்துவசிரோமணி ஸ்ரீமான் அப்பாசாமி சாஸ்திரிகள் பிரதியொன்று அகப்பட்டது. மன்னார்குடிப் பிரதியை வேண்டியபோது தருவோமென்று வாக்குப்பண்ணிய மாணவகன் இதற்குள் இறந்து விட, அப்பிரதி யாவர் கையிற் சிக்குண்டதென்று எவ்வளவு தூரம் விசாரித்துந் தெரியவரவில்லை. கிடைத்த பிரதிகள் ஐந்தில் வேதாரணியப்பிரதியுங் கருவூர்ப்பிரதியும் வீடூர்ப்பிரதியைப் பார்த்து எழுதப்பட்டனவாதலாற் பரிசோதனைக்குப் பயன் படத் தக்க சுயபிரதிகளாகாமற்போய்விட எஞ்சிய மூன்றுபிரதிகளையுங்கொண்டே அச்சிட ஆரம்பித்தேன்.

நூறுபக்கம் அளவு அச்சானபின்பு, தென்றேசப்பிரதியொன்று, எனது நண்பரும் பண்டைத் தமிழ்நூல் ஆராய்ச்சியே தமக்குப் பொழுதுபோகும் விநோதமாக உடையவருஞ் சென்னைத் தபாலாபீசுகளின் மேல விசாரணைத்தலைவருமாகிய ம-ா-ா-ஸ்ரீ மலலாகம் வி. கனகசபைப்பிள்ளையவர்களுடையது, அவரிடந் திரிசிராப்பள்ளியிற் தமிழ் முனிஷி ஒருவர் வாங்கிவைத்திருந்து இறந்துபோகக், கும்பகோணத்தில் ஒரு ஹெட் கனஸ்டேபிலகையிற் சேர்ந்திருந்ததை அறிந்து, அதனை அவ்விடத்திற் போலீஸ் மேல்விசாரணையிலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ கிருஸ்ணசாமிநாயுடு அவர்கள் சகாயத்தாற் தருவித்தேன். அதற்கும் முதன் மூன்று பிரதிகளுக்கும் அனேக வேறுபாடுகள் இருந்தமையால் இன்னுஞ் சிலபிரதி எவ்விடத்தாயினும் இருக்குமாயின் அவற்றையுந் தேடி ஒத்துப்பார்த்துக்கொண்டே அச்சிடுதல் அத்திவசியகமென்று உட்கொண்டு, அங்கங்கே சமணர்கள் குடிக்கும் இடங்களுக்கெல்லாம் நேரிலே ஒரு சுற்றுப் பிரயாணம் பண்ணிக் காஞ்சிபுரத்தில் மாத்திரம் ஒரு ம பிரதி கண்டு அதனை வாங்கிவந்தேன். இவ்விரண்டே ஒத்துப்பார்த்ததில் முன்பு அச்சிட்ட அவ்வளவும் ம திருத்தி அச்சிடவேண்டியதாயிற்று. வேறுபிரதி அகப்படவில்லை. கும்பகோணத்தி
ன்னர்ச் சொன்ன மன்னார்

யையே பார்த்தெழுதப்பட்டதென்று அதன்சொந்தக்காரர் மன்னார்குடியிற் சொன்னமையால் அதனை யான் பின்பு இச்சித்துத் தேடவில்லை.

காலாந்தரத்தில் ஏடெழுதுவோராற் பெருகிப் பெருகி வந்த பிழைகளினாற் காவியங்கள் மிகவும் பேதப்பட்டு விகாரம் அடைந்திருக்கின்றமை முன்னமே சொன்னேன். இம் மாறுபாடுகளைக்குறித்து இந்நூற்பதிப்பில் அடியேனுக்கோர் துணிவு புதிதாகப் பிறந்தது. இதுகாறும் அச்சிட்ட பழைய நூல்களில், ஒருபிரதியின் ஆதாரமாவது இல்லாமற் பாடபேதத்தைத் திருத்துதல் ஒழிந்த யான், இப்பொழுது பிரதிகள் அனைத்தும் பிழையென்றும், பிரதிகளில் இருக்கும் பாடம் ஆக்கியோன் வாய்மொழியாய் இருக்கமாட்டாதென்றும், எந்தப்பிரதிவழிச் சென்றாலும் அச்சில வருவது ஆசிரியரினின்றும் வேறுபட்ட பிழைபாடென்றும் நிச்சயிக்க ஏது உண்டான இடங்களில் இரண்டொரு எழுத்தையாவது மொழியையாவது சந்தர்ப்பத்திற்கும் பொருளுக்கும் இயையுமாறு திருத்தத் துணிந்தேன். அவ்வாறு செய்யாவிடின் நூலின் சிறப்பு அழிவதுமன்றிச் சில பாடங்கள் ஒருபயனுந் தராமலுஞ் சில முன்பின்னோடும் பிறநூல்களோடும் விரோதப்பட்டும் நிற்குமாதலிற் திருத்தம் அத்தியாவசியகமாயிற்று. இதனை உலகம் அறியச் சொல்லாமல் விடுவதே தப்பென்று உணர்ந்து இங்ஙனந் தெரிவிக்கலாயினேன்.

பிரகடனாசிரியர்கள் நூலிலுள்ள தப்பு ஒப்பிற்கு உத்தரவாதிகளல்லரே! ஆசிரியர் பாடம் இஃதென்று நிச்சயித்து உணராவழி இருந்தவண்ணம் நூலை உலகிற்கு ஒப்பிக்கிறதானே! வீரசோழியம் தொல்காப்பியம் முதலியவைக ...படி ஒப்பிக்கவில்லையா என்பாருளராயின், அந்... மல்வரும் நியாயங்களைச் சீர்தூக்கி என் செய்கையை ...ரித்தருள்வாராக. முதலாவது, அந்நூல்களிற் பிரதிக... ...கபடி ஒப்பித்த வழுக்கள் மூலபாடத்தின்கண்ணு... ... அர்த்தத்திலாவது உள்ளன ... வரும் வா...கள் ...

றன் பூர்வசொரூபம் அறிந்து திருத்தப்படற்பாலனவாம். உரையாசிரியர்கள் பிறநூல்களிலிருந்து எடுத்துக்காட்டிய உதாரணச்செய்யுளிலாவது மேற்கோள்களிலாவது புகுந்த வழுக்களே பிரதிகளிற் கண்டபடி ஒப்பிக்கப்பட்டன. அவைகள் அவ்வவ நூலாராய்ச்சியாற் பிறர் அப்பப்போ திருத்திக் கொள்ளக்கூடியன. இவை அவ்வாறு பின் எக்காலத்துந் திருத்தப்படா. இரண்டாவது, உதாரணங்கள் மேற்கோள்களிற் புகுந்திருக்கும் வழுக்கள் தாமும் ஆங்காங்கு எடுத்தோதிய பொருட்டுணிபிற்கு எம்மாத்திரம் வேண்டியதோ அதனுட்புகுந்த வழுவல்ல. எஞ்சிய பாகங்களில ஏதாவது வழுக்கிடத்தலாற் கற்போர் பெறக் கருதிய பயன் எவ்வாற்ருனுஞ் சிதைவுபடாது. உதாரணமாகச் "செய்யுளுளும் முந்தாகலு முரித்தே" என்னும் இலக்கணமும் அதனுரையும் வழுப்படாமல் ஆராய்ந்து பதித்திருக்க, அதற்கு இலக்கியமாகக் காட்டிய செய்யுள்கள் "தெண்டிரைமிசைப்பாயுந்து" "நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து" என்று பிரிந்தாலென்! "தெண்டிரைமிசைப்பாயுந்துநீ" "கோழிகூப்பெயர்க்குந்து" என்று பிரிந்தாலென்! "தெண்டிரை" என்றிருப்பினென்! "தண்டிரை" என்றிருப்பினென்! தெண்டிரையோ தண்டிரையோ என்பதும் "நீர்" எதனைச்சேர்தல் சரியென்பதும் அவ்விலக்கியங்கள் இருந்து எடுக்கப்பட்ட நூல்களாற் றிருந்த உணர்தற்பாலவாயினும "பாயுந்து" "பெயர்க்குந்து" எனவரும் விதியினை உணரும் உணர்ச்சி அவ்வழுவாற் சிதைவுபடாதன்றோ? நீர்க்கோழிக்குக் கூவுதற்றொழிலில்லையாதலானும் பாயுந்து என்னும எச்சத்திற்கு முடியும்பெயர் வேண்டுமாதலானுஞ் சிறிதாலோசனையால் "நீர்" முன்வாக்கியத்தோடு சேர்தற்பாலதென்றும் புத்திநுட்பக்குறைவால் ஏட்டுத்தொடரெழுத்தைப் பிரிக்க அறியாமல் வழுப்பட்டதென்றுஞ் சொல்வீராயின், அற்றன்று; கூவுதற்கு அழைத்தற் பொருளும் உண்டென்றும் நீர்க்கோழி தன் துணையைத் தன்னோடு செல்வான் அழைத்துப் பெயர்த்தல் இயல்பென்றும், பெயருந்து என்னாது பெயர்க்குந்து என்றதாற் தன்பெயர்ச்சியைக் கருதாது துணையைப் பெயர்த்தலைக் கொள்ளலுங்

தருமென்றும் "பாயுந்திரீ" என முடியுஞ் சொல் சேர்ந்து தாயின் பெயர்க்குருந்து யாண்டை.யோ முடிந்ததென்றும் விடுத்தொழிக. இன்னநூலிலிருந்து உதாரணம் எடுக்கப்பட்டதென்று அறிந்து அந்நூலையுந் தேடிப்பார்த்தாலன்றி யதார்த்தரூபம அறிதல் அசாத்தியமென்க. அவ்வாறு எட்டுத்தொகை பத்துப்பாட்டலென்றின்னோரன்ன சங்கத்தார் காலத்து நூல்களைத் தேடிப்பார்த்து அவற்றால் அறியத்தக்கன பின்னர்த் திருத்தற்பொருட்டாகவே தொல்காப்பியப்பொருளதிகாரத்து உதாரணச்செய்யுள்களிற் சிலபிழைகளைப் பிழையென்று நிச்சயமாயுணர்ந்தும் பிரதிகளிற் கிடந்தபடி விட்டிருக்கின்றேன். நற்றிணையாதிய தொகைகளிலும் பத்துப்பாட்டிலிலும பின்னாராய்ச்சியால் யான் இப்பொழுது செய்துவைத்திருக்கிற திருத்தங்களுள் அனேகம் அப்பொழுது யான் இவை இன்னவாறு இருத்தல் வேண்டுமென்று உத்தேசித்தபடியே இருக்கின்றன. ஆயினும் பூருவசொரூபம இதுதானென்ற நிச்சயமின்மையானும், ஒருகாலமில்லாதிருந்தால வேறொருகாலத்தில் எபபடியும் பூருவசொரூபந்தேடி அறிதற்பாலவாயினமையானும் அவற்றை என் உத்தேசத்தினபிரகாரந திருத்தத் துணிந்திலேன். மூன்றாவது, உரை எழுதபபட்டிராததோர் இலக்கியநூலின் மூலபாடத்திற் சாஸ்திரமுடிபுங் கதைப்பொருத்தமுமே அபனூலாராய்ச்சிகொணடு துணிதற்பாலன. வாக்கியமுடிபு அங்ஙனமன்று. அது பலபல பிரதிரூபத்தின் சகாயத்தால் மாத்திரமே அறிதறபாலது. நாடெங்குந் தேடியும் வேண்டிய அளவுக்குப பிரதிகள் அகப்படாமல வழுக்கள் நிறைந்து மாரணதசையும அடைநததோர் உரையில்லாநூலை ஒன்றிற் பிரசுரஞ் செய்யாமல் இறந்துபோக விட்டுவிடவேண்டும். அன்றேற் கற்போர்க்குப் பயன்படத் திருத்தியே அச்சிடல்வேண்டும். இவ்விரண்டில எது தக்கது? எலும்பழுகிய நாசியைச் சத்திரமபண்ணிப் பொன்னூசி பொருத்தினாற் போலப் பூர்வசொரூபம் இறந்து பிறழ்ந்த இடத்தில் அமைந்திய வேறுவழியின்றேற் புதுத்திருத்தஞ் செய்வதை வழுவன்மையாக்கி மன்னிக்க. நான்காவது, ஒருதிருத்தமுஞ்

செய்யாது பழம்பிரதிகளின்படி ஒப்பபபதால வரும பயன் யாது? வீரசோழியத்திற் சிலசில இடங்களிற் பிழைப்பட்ட வைவற்றை இருந்தவண்ணம் ஒப்பித்தேனன்றோ? யாவர் அவற்றிற்குப் பூர்வ சொரூபந் தேடிக் கொடுத்தார்! தேட முயன்றவராயினும் உளரா? என்பு நொறுங்கிய காலை வெட்டியெறிந்து பொய்க்கால வைத்தாற்போல அவற்றிற்குப் புத்துதாரணங்கள் செய்து சேர்த்திருப்பேனாயின கற்போர்க்குச் சிறிதாவது பயன்படத்தக்கதாயிருக்குமே! ஐந்தாவது, சிற்சில இடங்களிற் புதுத்திருத்தமானபின் இந்நூலைத் தோலாமொழித்தேவர் இயற்றியருளிய சூளாமணியெனல் பொய்படுமன்றோவெனின், புதுமொழி சில சேர்ந்தமையை உலகிற்குத் தெரிவியாது சொருகிவைத்து யாவும ஆசிரியர் வாக்கென்று நடைபெற விடுவதே தவறாவது. நன்னூற்குச் சங்கரநமச்சிவாயப்புலவர் இயற்றிய விருத்தியுரையென்று இக்காலத்தார் கொள்வதெது! அன்னோருரையில் அங்குமிங்குஞ் சிவஞானமுனிவரால திருத்தப்பட்ட புத்தம்புத்துரையன்றோ? முனிவரர் திருத்தியமை உணர்ந்தோரால அவரால் திருத்தப்பட்ட விருத்தியுரையென்று அச்சுப்பிரதிகளின் நாமதேயபக்கத்திற் போட்டிருப்பது யான் அறிந்துளேன். ஊரில் வழங்குங் கையெழுத்துப் பிரதிகளைப்பார்த்து அதிற்படித்தோரை இஃதியாவருரையென்று கேட்டறிக. கஅசஉ-ம்ஞு யான் நன்னூல் விருத்தியுரை எழுதிப் படித்தபோது முனிவரரால் அது திருத்தப்பட்டதென்று கேள்விப்பட்டது மில்லை. ஸ்ரீலஸ்ரீ நாவலரவர்கள் அச்சிட்டபின் எல்லாருஞ் சொல்லுவர். இப்பொழுதும் அதிற் புலவர் எழுதியதிது முனிவரர் திருத்தியதிது என்று பகுத்தறியக் கிடக்கின்றதா? "நன்னூ லுட்கருத்துலகோ ரறியவுரைசெய்கவென நரேந்திர சிங்கந், தென்னூற்றுமலைமருதப் பன்புகலப்பொருள்விளங்கச் செய்தான் பாரி, லெந்நூற்குமெழுத்தொடுசொற் பொருளறிசங்கரநமச்சி வாய னென்னும், பன்னூற்செந்தமிழ்ப்புலவன் சைவசிகாமணிநெல்லைப் பதியினானே." என்பதுதான் வெளி. வைத்தியநாததேசிகர் செய்த இலக்கணவிளக்கத்து அணியியலிற் சில சூத்திரங்கள் அவர்

மகன் சதாசிவதேசிகரால் சேர்க்கப்பட்டனவன்றோ? அதில் மைந்தனார் தந்தன இவையென யாவர் பிரித்துக்காட்டவல்லார்? ஆதலால் உலகறியச் சொல்லித் திருத்தல் தவறிலதாக, முழுத்தோட்டமும் அகத்திநாட்டினும் வெற்றிலைத் தோட்டம் வெற்றிலைத்தோட்டமேயாமென்க. ட ஆறாவது, சுவடிகளிற் பிழைப்பட்டிருக்கும் ரூபம் ஆசிரியரதல்ல என்பது மலையிலக்கு. பின்னை எப்படியும் யான் பிரசுரஞ் செய்யத்தக்கது ஆசிரியர் செய்த ரூபமல்லாதபோது, பிழைப்பட்டு ஒருபொருளுந் தராமலாவது விரோதப்பொருள் பயந்தாவது நிற்கும் ரூபத்தில் அவ்விரோதமில்லாதபடிக்கு யான் வைத்த ரூபந் தாழ்வுடையதன்று. ஏழாவது, ஓர் ஆருகத நூலை இவ்வாறு திருத்துவது சமணர்க்கு வெறுப்பாயிராதோ வெனின், திருத்திய இடம் அனைத்திலுஞ் சுவடிகளின் பாடமும் அவற்றின் குற்றமும் அவைகளில் யான்செய்த திருத்தமுஞ் சைனவித்துவான்களிற் சிறந்தோர் பலர்க்குக் காண்பித்து அன்னோர் முழுச்சம்மதியுடனேயே பதிப்பித்தேனென்றறிக. இருந்தபடியே பதிப்பிப்பது நூலாசிரியரின் மகத்துவத்தை ஒரோவொரு இடத்தில் இழிவுபெறச் செய்யத்தக்கதாதலின் அதுவே அவர்க்கு வெறுப்பாயிருக்குமென்பது அவர் மேருமந்தர புராணப்பதிப்பிற் காட்டும் அரோசிகத்தாற் தெளியலாம். மேலும் என் திருத்தங்களை அவர்கள் தங்கள் பிரதிகளிலுங் குறித்துக் கொண்டதே அவர்கள் சம்மதிக்குச் சான்றாகும். எட்டாவது, அப்படியாயின் இன்னாரால் திருத்தப்பட்டதென்று நாமதேய முகத்திற் போடுவது தானேயெனின், இலைமறைகாய்போல எங்கேயோ ஒவ்வொரு மாறுபாடு செய்ததால் நூல் என்னாற் திருத்தப்பட்டதாகாது. அல்லாமலும் ஆக்கியோன் மொழியினை யான் திருத்தினவனல்லன். பின் புக்க வழுவையன்றோ யான் திருத்தியது. மேலும் எனது திருத்தமே பூர்வசொரூபமாக இருப்பினும் இருக்கலாமே. நூலைத் திருத்தியவனென்ற மேன்மைக்கு யான் அருகனல்லேன். இக்காரணங்களால் உலகமென்னை மன்னிக்குமென்று முற்றிலும் நம்புகின்றேன். என் திருத்தங்கள் எப்படிப்பட்டனவென்று யாவரொருவர்

அறிய விரும்புவராயின் அவர்க்கு அத
என் கடன். தெரிந்து எடாது கைக்கு எதி
அவற்றிற் சிலவற்றைக் குறிப்புப் பண்ணி ஓர்
கச் சேர்த்திருக்கின்றனன். ஆண்டுக் கண்டுகொள.

மேற்கண்ட பிரதிகளை வைத்துக்கொண்டு பரிசோ, னைபண்ணுகையில் ஆருகதசமயக்கோட்பாடுகள், தத்துவ பேதங்கள், புராணக்கதைகள் சிறப்புப்பெயர்களிற் சில சமுசயங்கள் நேரிட்டன. அதற்காக வீடூர் வித்துவான் ஸ்ரீமான் அப்பாசாமி சாஸ்திரிகளை வர அழைத்து மூன்று மாதக்காலம் அவர்களைக் கூடவைத்திருந்து எனக்குள்ள சமுசயங்களைத் தீர்த்துக்கொண்டதுமன்றி அவர்கள் போன பின்பு நிகழ்ந்தன சிலவற்றை அப்பப்போ அவர்களுக்குக் கடிதமெழுதித் தெரிந்துகொண்டனன். இன்னுஞ் சந்தேகந் தீராத இடங்களும் இரண்டொன்று உண்டு. அவர்கள் இத்தனை தூரம் வந்திருந்து எனக்குச்செய்த உதவியை எப்பொழுதும் மறவேன்.

இந்நூலுணர்ச்சிக்கு உபயோகமான சமண கிரந்தங்களை எனக்குக் காண்பித்ததுமன்றித் தமது கையிலிருக்கும் ஏடுகளில் எப்பொழுதேனும் யாதாயினும் வேண்டுமாயின் அதனை உடனே அனுப்பிவைப்பதாகத் தயைபுரிந்த மன்னார்குடி ஸ்ரீ மு. அ. அப்பாண்டமுதலியாருக்குஞ் சித்தாம்பூர் முதலிய இடங்களிலுள்ள சமணர் வசம் இருக்கும் நூல்கள் வேண்டிய காலங்களில் வாங்கி அனுப்புவதாக வாக்களித்த காஞ்சிபுரம் பச்சையப்ப பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர் ம-ள-ள-ஸ்ரீ வ. கணபதிப்பிள்ளையவர்களுக்கும் என் வந்தனஞ் சொல்லுகின்றேன்.

இந்நூல் ஆருகத மகாபுராணத்திற் கூறிய நவவாசுதேவப்பிரதிவாசுதேவர்களிற் திப்பிரஷ்ட வாசுதேவனதும் அவ்வாசுதேவனுக்குப் பகையாய் அவதரித்த அயக்கிரீவப் பிரதிவாசுதேவனதுஞ் சரித்திரத்தை விரித்துக் கூறிப், பெரும்பாலுஞ் சமண காவியங்கள் துறவும் முத்தியும் உணர்த்தி

பதிப்புரை.

முடியுமாறு இருபத்துநாலு தீர்த்தங்கரருட் சிரேயசுவாமி தீர்த்தகாலத்திற் சுரமைநாட்டின்கண் போதனமாநகரத்திலிருந்து அரசுபுரிந்த பயாபதி அரசன் தன் குமாரனை அவ்வாசுதேவனைப் பூமியாளவைத்துத் துறந்து தன் தேவிமாரோடு முத்திபெற்ற கதையை எடுத்துச் சொல்லும். இந்நூற் சீயவதையும் வித்தியாதரவிவாகமுஞ் சேடியர்சங்காரமுங் கிருஷ்ணசரித்திரத்திற் சேர்ந்தனவல்லவாயினுந், திவிட்டராசன் குணாதிசயங்கள் திருமாலின் அவதாரமாகிய கண்ணபெருமானதுந், திவிட்டனுக்கு மூத்தோனாகிய விசயன் குணாதிசயங்கள் கண்ணன் அண்ணன் பலபத்திரனதும் இலக்ஷணங்களோடு ஒருவாறு ஒத்திருக்கும்.

சீவகசிந்தாமணிச் சரித்திரத்தைச் சிந்தாமணிப் பதிப்பின் முதலிற் ஸ்ரீமத் சாமிநாதையரவர்கள் சுருக்கிக் காட்டியதுபோல, இந்நூலை எளிதிற் படித்து உணர்தற்கு உபயோகமாக இதன் முதலிலுந் திவிட்டன் கதையைப் பொழிப்பாகக் காட்டும்படி எனது இஷ்டர் சிலர் கேட்டுக்கொண்டனர். இக்கதையை வசனரூபமாக யாழ்ப்பாணம் வித்துவான் ஸ்ரீ தாவடி அம்பிகைபாக உபாத்தியாயர் எழுதிவருவதால் அதன் சாரத்தை இவ்விடம் வேறாகப் பதித்தல் அவசியமன்றென நிறுத்தினன். அன்றியும் இக்காலத்து மிகச் சிறந்த வித்துவான் ஒருவர் இந்நூற்கு உரையெழுதி அச்சிடுவிக்கக் கருதியிருப்பதாகவுந் தெரியவருகின்றது.

இக்கதையில் வரும் அரசராதியோர் பெயர் ஊர் சம்பந்தம் முதலிய அறிதல் கதைத்தொடர்ச்சியை லேசில் உணர்தற்கு உபயோகமாகுமாதலின் அவற்றிற்கு ஓர் அகராதி சேர்த்திருக்கின்றேன்.

பிரதிகள் தேடிப் பரிசோதித்து இந்நூலைப் பதிப்பித்தற்கு உபயோகமான திரவியம் றங்கூனிலிருக்கும் என் சகோதரன் செல்வச் சிரஞ்சீவி இளையதம்பிப்பிள்ளையும் அவரது இஷ்டர் சிலருஞ் சேர்ந்து அனுப்பியதென்று மூன்

பட்ட விஷயத்தில் ஊக்கம் உண்டாதற் பொருட்டு அன்னோர் பெயர் விவரத்தை இவ்விடந் தருகின்றேன்.

## பணம் அனுப்பினோர் பெயர்வழி.

மஹா-ள-ள-ஸ்ரீ தி. எம. குட்டியாபிள்ளையவர்கள், ரங்கூன் கமிசேரியட் ரொடடிச்சாலை மானேஜர் ரூ கoo.

,, ஏ. சரவணமுதலியாரவர்கள், ரங்கூன் கன்டிரோலர் ஆபீசு சுபபரினடெண்டடண்ட ரூ ருo.

,, வி. நமசிவாயபிள்ளையவர்கள், எம. ஏ, வி. எல்., கல்கத்தா ஹைகோர்ட்வக்கீல, ரங்கூன் றிக்கார்டாஸ்கோர்ட் அட்வக்கேட் ரூ ருo.

,, பா. குபபுசாமிமுதலியாரவர்கள், ரங்கூன் கமிசேரியட் மானேஜா ரூ ருo.

,, தி. வி. கிருஷ்ணசாமிநாயுடுகாரு, ரங்கூன் கணடிராக்றறா ரூ ருo.

,, பி. வேதாசலமுதலியாரவர்கள், ரங்கூன் பாமா ஸ்டேட் றேலவே பொக்கிஷதாரா ரூ ருo.

,, தி. எம. பொன்னுசாமிபபிள்ளையவர்கள், ரங்கூன் பேபபா கறென்ஸி ஆபீசு பொக்கிஷதாரா ரூ ருo.

,, சி. வை. இளையதமபிபபிள்ளையவர்கள், ரங்கூன் டிப்டி கமமிஷனா ஆபீசு ஹெட் அக்கவுண்டன்ட் ரூ கoo.

ஆ ரூ ருoo.

இவர்கள் செய்த இவ்வுபகாரத்தை யான் ஒருபோதும் மறவேன். இவர்கள் முன் மாதிரியைப் பின்பற்றி இன்னும் அனேகர் தத்தமக்கு ஏற்ற வித்துவான்களைக்கொண்டு பற்பல பழைய தமிழ்நூல்களை வெளிப்படுத்தி நிலைநிறுத்தக் கலைமகள் கடாட்சிப்பாளாக.

தொண்டமான் புதுக்கோட்டை } சி. வை. தா.
விரோதிஹு கார்த்திகைமீ }

# அனுபந்தம்.

## புதுத்திருத்த உதாரணம்.

| சருக்கம். | செய்யுள். | பாடம். | திருத்தம். |
|---|---|---|---|
| நகரம் | ௩௦ | மாண்பிவன் | மாண்பினும் |
| தமாரகாலம் | க | அமர்ந்தகாப்பம் | அமரர்கற்பம் |
| மந்திரசாலை | ௫௯ | மன்னும் | மண்ணும் |
| | ௬௩ | அரியஞ்சும் | அரிமஞ்சு |
| | ௬௭ | ாங்குலக்கொம்போடு | ாங்குரங்குலக்கொம்பு |
| | ௭௭ | மடமாதர் | மடமாதின்று |
| | க௦௦ | வீட்டினன் | ஈட்டினன் |
| | க௬௦ | ஆழியாற்கடலிடம் | ஆழியாற்ககலிடம் |
| | க௭உ | ஒனபதெனபவே | ஒன்பதொன்பதே |
| | க௮௮ | செய்யதேலிதுமினி | செய்யதோர்தூதினித் |
| தூது | க௪ | நயங்கிதனெனப் | அங்கதனெனும் |
| | ,, | அன்னவிருவானூற் | பொன்னவிருநூல்கெழு |
| | ௩௪ | வெம்முலை | வெம்முகம் |
| | ௪௦ | கினையா | துணியா |
| | ௪௫ | பூமரக்குழாம் | சாமரக்குழாம் |
| | ௫௦ | வாய்நெடுங்கணர் | வாயநெடியகண் |
| | ௬௦ | மைம்முகத்து | வெம்முகத்து |
| | க௪உ | பொற்றமரை | பேர்த்தாமரை |
| சீயவதை | ௪௮ | அவரல்லன | பொழுதும்மலால் |
| | ௯௯ | கொடுமின் | தெரிமின் |
| | க௪௪ | உடன்றெழுந்த | உடைந்தொழிந்த |
| கல்யாணம் | க௭௦ | நடக்கவல்ல | நடையிற்றூய |
| | க௯க | அன்னோர் | விண்ணோர் |
| | உ௦உ | மேய்ந்து | நீத்து |
| | உ௭௦ | பாலபணியவைத்த | வால்வளைபயின்று |
| அரசியல் | ௩௬ | தகர்த்து | புடைத்து |
| | உ௦க | வேலினலவ | வேலின்வந்த |
| | ௩௯௭ | வெண்டாமரை | தாமரைவெண் |
| | ௪௦க | மரையும் | மரைபுரையும் |
| சுயம்வரம் | ௩௬ | வல்லிதழ் | வள்ளிதழ் |
| | க௯௬ | அரவம்படிந்தாள் | ஆயம்படிந்தாள் |
| | உ௪௫ | முலைகடோளவர்கள் | முலைகளோடவர்கள் |
| முத்தி | ௯ | நணிந்து | நலிந்து |

# சூளாமணிச்சிறப்புப்பெயரகராதி.

அங்கதன்-ஒருநிமித்திகன
அங்கம்-ஒருதேயம்
அங்காரவேகன்-சுவலனபுரத்தரசன்
அசோதரன்-ஒருமுனிவன்
அச்சுவகண்டன், அச்சுவக்கிரீவன்-இரத்தினபல்லவத்தரசன்; மயூரகண்டன மகன்; விலோக வித்தியாதரலோகங்கள் முழுதுந் திறைபெற்று அதிபதித்துவஞ் செலுத்தியவன்; நவப்பிரதிவாசுதேவர்களில ஒருவன.
அச்சுவபுரம் - ஒருவித்தியாதரநகரம்
அஞ்சுமான்-மருசியின் தந்தை.
அத்தினபுரம்-குருகுலத்தரசர் நகரம்
அபிநந்தனன்-ஒருசாரணன் [ர்
அமராபுரம்-ஒருவித்தியாதர நகர
அமிததேசன் - அருக்ககீர்த்தி மகன் [ழி
அமிர்தபிரபை-சயம்பிரபைதோ
அமிழ்தபதி - ஒருவித்தியாதர நகரம்
அயகண்டன், அயக்கிரீவன்-அச்சுவக்கிரீவன்
அயோத்தி - இக்குவாகுலத்தரசர் நகரம்
அரிகண்டன் - கீதமாநகர ராசகுமாரன்
அரிகேது-ஒருவித்தியாதரன்; மாயாசிம்மமாகத் திவிட்டனிடம் அரிமஞ்சுவால் அனுப்பப்பட்டவன்

அரிசேனன் ஒருவித்தியாதரன்; அச்சுவகண்டன் தோழன்.
அரிபுரம்-ஒருவித்தியாதர நகரம்
அரிமஞ்சு - அச்சுவக்கிரீவன் மந்திரி
அருக்ககீர்த்தி-சடியரசன்மகன்; திவிட்டன் மைத்துனன்
அருசிமாலை-மருசியின் தாய்
அருஞ்சயன் - இந்திரசஞ்சயராசகுமாரன
அவந்தி-ஒருதேயம் [ன்
அளிதாங்கன்-திரிபுரராச குமார
இந்திரசஞ்சயம்-ஒருவித்தியாதர நகரம
இரதநூபுரம்-ஒருவித்தியாதர நகரம்
இரத்தினகண்டன் - அச்சுவகண்டன் மக்கள் நூற்றுவரில் மூத்தவன்
இரத்தினபல்லவம் - ஒருவித்தியாதர நகரம்
இரத்தினபுரம் - ஒருவித்தியாதர நகரம் [ன்
இரமியதரன் - தேவரவணத்தரச
உறந்தை-ஒருநகரம்
ஏமாங்கதம-ஒருநகரம்
ஏமாங்கதன் - சித்திரகூடராச குமாரன்
கங்கை - கீழ்க்கடலிற்பாயும் ஓர் யாறு
கச்சன் - காசிராசன்; சடியரசன் இவன்மரபிற் தோன்றியவன்
கந்தமாதனம்-ஒருவித்தியாதர நகரம்

கந்தருவம்-ஒருவித்தியாதரநகரம்
கமலமாலதை, கமலமாலினி-ஒரு வித்தியாதர அரம்பை
கருடாங்கதன்-கிருதமாதனத் தரசன்
கலிங்கம்-ஒருதேயம்
கலியாணிகை - ஒரு வித்தியாதர அரம்பை
கனககாமன்-அச்சுவகண்டன் படைவீரரில் ஒருவன்
கனகசித்திரன் - அச்சுவபுரத்தரசன் குமாரன்
கனகசித்திரை - அச்சுவகண்டன் தேவி
கனகபல்லவம் - ஒருவித்தியாதர நகரம்
காசி-ஒருநகரம்
காந்திமதி-பவனவேகன்மனைவி
காபுரம்-ஒருநகரம்
காமன் - பிரசாபதி படைவீரரில் ஒருவன்
காமுகன்-பிரசாபதி படைவீரரில் ஒருவன்
கிருதயாதனம் - ஒரு வித்தியாதர நகரம்
கின்னரகீதம் - ஒருவித்தியாதர நகரம்
கீதமாபுரம் - ஒருவித்தியாதரநகரம்
குணசேனன் - அச்சுவக்கிரீவன் சேனைவீரரில் ஒருவன்
குண்டலபுரம் - ஒரு வித்தியாதர நகரம்
கோசலம்-ஒருதேயம்
கோடிசிலை-சுரமை நாட்டிலு் ஒரு மலை.
சகாந்தனன்-ஒரு சாரணன்
சக்கிரவாளம்-ஒருவித்தியாதர நகரம்
சசி-பிரசாபதியின் இளையராணி
சடி-இரதநூபுரத்தரசன்; அருக்ககீர்த்திக்குஞ் சயம்பிரபைக்குந் தந்தை

சண்டவேகை - மாயாவிஞ்சைத் தெய்வம்
சதவிந்து-ஒருநிமித்திகன்; சடியரசன் புரோகிதன்
சயசேனன்-பவகிரிபுரத்தரசன்
சயம்பிரபை-திவிட்டன்தேவி; சடியரசன் புத்திரி
சயம்பூல் - வடமலையில் அரசுபுரிந்து பின் துறவினால் அதிகமேன்மை பெற்றவன
சார்த்தூலகன-பிரசாபதிபடைவீரரில் ஒருவன்
சிஙகசேது - கனகபல்லவராச குமாரன்
சித்திரகூடம்-ஒருவிததியாதர நகரம
சிததிரதரன் - சோபனபுரத்தரசன்
சிததிரதரன் - போதனபுரத்தில் ஒரு சிற்பன்
சிததிரரதன்-ஸ்ரீநிலை ராசகுமாரன்
சிந்து - மேற்கடலிற் பாய்வதோர் யாறு
சிந்து - ஒருதேயம்; சுரமைநாட்டைச் சேர்ந்தது
சுகண்டன - அச்சுவக்கிரீவன் தம்பி
சுச்சுதன் - சடியின மந்திரிகளில் ஒருவன்
சுதசாகரன்-சடியின்மந்திரிகளில் ஒருவன்
சுதஞ்சனை-கச்சன்மனைவி
சுதாரை-அருக்ககீர்ததி புதல்வி
சுமந்திரி-சடியின் முதல் மந்திரி
சுரமியம் - சுரமை நாட்டில் ஒரு வனம்
சுரமை-பிரசாபதியரசன் நாடு
சுரேந்திரகாந்தம் - ஒருவித்தியாதர நகரம்
சுவணகேது - அச்சுவகண்டன்படைவீரரில் ஒருவன்
சுவலனபுரம்-ஒருவித்தியாதர நகரம்
சுவலனரதன்-அமராபுரத்தரசன் சடி அரசன் தம்பி

சூரியபுரம்-அரிகுலத்தரசர் நகரம்
சொன்னரதன்-இரத்தினபுரராச குமாரன்
சோதிமாலை-திவிட்டன்புதல்வி
சோதிமாலை - மேகவாகனன் புதல்வி; அருக்ககீர்த்தி மனைவி
சோபனம்-ஒருவித்தியாதரநகரம்
திரிபுரம்-ஒருவித்தியாதரநகரம்
திருநிலையகம்-போதனநகரில் ஒரு நந்தவனம்
திருநிலையகம்-ஒருவித்தியாதரநகரம்
திவாகரன்-கந்தமாதனத்தரசன்
திவிட்டன் - பிரசாபதியின் இளையராணிவழிப்புத்திரன்; நவவாசுதேவ அவதாரத்தில் ஒன்று
துருமகாந்தன்-புட்பமாகாண்டத்திற்குக் காவலாக வைக்கப்பட்டவன்
தூமகேது-மேககூடத்தரசன்
தேவசேனன்-பிரசாபதி சேனைவீரரில் ஒருவன்
தேவரவணம்-ஒருவித்தியாதரநகரம்
நமி-கச்சன் புதல்வன்
நாதவன்-குண்டலபுரத்தின் முதல் அரசன்; இவனாற் றோன்றியகுலம் நாதவகுலம்
நீலகண்டன்-அச்சுவக்கிரீவன் தம்பி
நீலரதன்-அச்சுவக்கிரீவன்தம்பி
நீலாங்கனை - மயூரகண்டன் மனைவி
பதுமரதன்-மேகபுரராசகுமாரன்
பயாபதி-பிரசாபதி
பரதன்-இக்குவாகுலத்தில் ஓரரசன்
பவகிரி-ஒருவித்தியாதரநகரம்
பவச்சுதன்-சடியின் மந்திரிகளில் ஒருவன்
பவபுரம்-ஒருவித்தியாதரநகரம்
பவனஞ்சன் - கின்னரகீதராசகுமாரன்
பவனவேகன்-பவபுரத்தரசன்
பிரசாபதி - சுரமைநாட்டரசன்; திவிட்டன் தந்தை; வாகுவலி வமிசத்திற் றோன்றியவன்
பிரிதிமதி-சயசேனன் மனைவி
பிரீதிவர்த்தனன் - வருத்தமானபுரத்தரசன்
புட்பமாகாண்டம்-பிரசாபதியின் நந்தவனம்
போதனம் - சுரமைநாட்டிராசதானி
மகதை-மகததேயம்
மதுரை-சந்திரகுலத்தரசர் நகரம்
மயூரகண்டன் - அச்சுவக்கிரீவன் தந்தை
மருசி-சடியரசனாற் பிரசாபதியினிடம் அனுப்பப்பட்டதூதன்
மனோவனம் - சடியரசன் நந்தவனம்
மாதவசேனை-சசியின் தோழி
மிருகாபதி-பிரசாபதியின் முதற்றேவி
மேககூடம்- ஒருவித்தியாதரநகரம்
மேகபுரம்-ஒருவித்தியாதரநகரம்
மேகமாலினி - மேகவாகனன் மனைவி
மேகவாகனன் - சுரேந்திரகாந்த அரசன்
வங்கம்-ஒருதேயம்
வச்சிரகண்டன்-அச்சுவக்கிரீவன் தம்பி
வச்சிரதாடன்-சக்கிரவாளத்தரசன்
வயந்தசேனை-சசியின்தோழி
வயந்தமாதிலகை- சயம்பிரபையின் செவிலித்தாய்
வயந்தமாதிலகை - ஒருவித்தியாதர அரம்பை
வரசேனன்-அச்சுவகண்டன் சேனைவீரரில் ஒருவன்
வருத்தமானம் - ஒருவித்தியாதரநகரம்
வாகுவலி-ஓரரசன்; *கச்சன்மருகன்; பிரசாபதி இவன் வழி

யிற் தோன்றியவன்
வாயுவேகன்-பிரசாபதி சேனுவீ
ரரில் ஒருவன்
வாயுவேகை-சடியரசன் தேவி
வாயுவேகை - காந்திமதி தோழி;
மருசியின் சகோதரி
வாரணவசி - உக்கிரகுலத்தரசன்
நகரம் [ம்
விசயகூடம்-ஒருவித்தியாதர நகர
விசயபத்திரன்-சயசேனன் புதல்
வன்; சாசாரமென்னும் இந்திர
பதவியை ஆண்டு பின்பு விச்சு
வனுக அவதரித்தவன்
விசயன்-பிரசாபதியின் முதற்தே
விவழிப்புத்திரன்; பலதேவன்
அவதாரம்
விசயன்-திவிட்டன் புதல்வன்
விச்சுவன் - மேகவாகனன் புத
ல்வுன்,
விதூடகன்-திவிட்டன்விகடகவி
வியர்தசேனை-ஒருவித்தியாதர அ
ரம்பை
வியாக்கிரரதன்-அரிபுரத்தரசன்
விருககடி-கந்தருவநகரத்தரசன்
வேகரதன்-அமிர்தபுரத்திராச கு
மாரன்
வேகரதன்-விசயகூடத்தரசன்.
ஸ்ரீசேனன்-அச்சுவகண்டன் சே
னுவீரரில் ஒருவன்,
ஸ்ரீநிலை-ஒருவித்தியாதரநகரம்
ஸ்ரீநிலையகம்-திருநிலையகம்
ஸ்ரீபாலன்-திருநிலையகத்தரசன்
ஸ்ரீபாலன் - பிரசாபதியரசன் த
ம்பி

# செய்யுளகராதி.

# செய்யுளகராதி.

# செய்யுளகராதி.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| கரு | ககூ | நீட்டி | நீட்டிப் | ககக | உஉ | இடுவாய் | இடுவே |
| ககூ | கூ | அவிளுங் | அவிழுங் | உ௰ங | கூ | மாக்க | மக்க |
| உ௰ | உங | பருமணி | பருஉமணி | உஉச | கரு | ருசு | ருச |
| உங | உ | காவலர்க் | காவலற் | உஉஎ | சு | கை | கைக் |
| உச | எ | பங்கை | மங்கை | ,, | கூ | மென்ப | மெனப் |
| ஙஎ | உசு | சூட்சிய | சூட்சிசார் | உஙக | அ | விருந்தின | விருந்தன |
| | | | ந் | ,, | க௰ | நிழற்ற | மிழற்ற |
| சரு | கஎ | நங்கை | ணங்கை | உஙசு | உஅ | கவிலிடை | கவிலுடை |
| சசு | உ | மஃதே | மிஃதே | உஙகூ | உங | மரையான் | மரையாள் |
| சஎ | எ | ணன்றே | னெனறே | உருங | அ | ஞுதா | ஞுந்தா |
| ருசு | கூ | தெதிர் | தெரி | ,, | உக | மஞ்ஞை | மாமஞ் |
| அ௰ | உ௰ | கலர் | கலாப் | | | | ஞை |
| அகூ | ச | ஙீதி | நீதி | உசுங | ங | ஞுடணி | நாடணி |
| கூச | கக | வெரி | வெறி | உசுரு | ரு | வேழ்வி | வேள்வி |
| கக௰ | கரு | மணிந்து | மணந்து | உசுசு | ங | புதலவ | புதல்வ |
| ககஉ | கக | வாரொலி | வரொலி | உஎசு | எ | கோட்டத் | கோட்ட |
| ககச | கரு | கடா | சுடர் | உஅஅ | உ | வளரினும | வளரினு |
| கஉங | எ | லருகக் | லருக்க | ,, | எ | கெழீயி | கெழீஇயி |
| கஙஉ | உரு | லாவவன் | லாலவன் | உகூ௰ | உகூ | மூாச்ச | மூர்ச்ச |
| கஙங | ககூ | சுற்றுந் | சுற்றுத | ,, | ங௰ | விரதமல் | விரதமல் |
| கஙஎ | உ௰ | மிகுபுடை | மிகுபடை | | | லாதது | லாதது, |
| கஙஅ | கச | படைப் | படை | | | | அஃது வ |
| கஙகூ | கஎ | வணிவரை | மணிவரை | | | | கேந்திரிய |
| கச௰ | உச | வணஙகி | வணக்கி | | | | சிவவதை |
| கசங | உ௰ | ஞுடன் | நாடன் | உகூரு | ங௰ | சானுதி | சானுத்தர |
| கசகூ | உ | பேந்தன் | வேந்தன் | | | சை | ம் |
| கருக | கச | பினரா | பினராய் | உகூகூ | உகூ | உதுருரு | உ௰சுகூ |
| கருஅ | உரு | வேவிவி | வேள்வி | ங௰சு | உகூ | யங்கள் | யமங்கள் |
| கசுஅ | உக | சித்திது | சித்து | ,, | ங௰ | இயாபி | இயாப்பி |
| கஎச | உ | யெதிலா | யேதிலா | ங௰எ | ங௰ | சனம் | சனவீரிய |
| கஅஎ | உரு | கோற் | கொற் | | | | ம் |

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சூளாமணி

## காப்பு.

வென்றான்வினையின்றொகையாகிவிரிந்துதன்க
ணொன்றாய்ப்பரந்தவுணர்வின்னொழியாதுமுற்றுஞ்
சென்றான்றிகழுஞ்சுடர்சூழொளிமூர்த்தியாகி
நின்றானடிக்கீழ்ப்பணிந்தார்வினைநீங்கினின்றார்.

## பாயிரம்.

அங்கண்ணுலகிற்கணிவான்சுடராகினின்றான்
செங்கண்வினை * போழ்ந்திருவைச்சரண்சென்ற † பேணிப்
பைங்கண்மதர்வைப்பகுவாயரியேறுபோழ்ந்த
செங்கண்ணெடியான்சரிதம்மிதுசெப்பலுற்றேன்.

கொற்றங்கொணேமிநெடுமால்குணங்கூறவிப்பா
லுற்றிங்கொர்காதல்கிளரத்தமிழ்நூற்கலுற்றேன்
மற்றிங்கொர்குற்றம்வருமாயினுநங்கள்போல்வா
ரற்றங்கள்காப்பாரறிவிற்பெரியார்களன்றே.

நாமாண்புரைக்குங்குறையென்னைநாமவெண்வேற்
றேமாணலங்கற்றிருமானெடுஞ்சேந்தனென்னுந்
தூமாண்டமிழின்கிழவன்சுடராரமார்பிற்
கோமானவையுட்டெருண்டார்கொளப்பட்டதன்றே.

* செய்யுமென்னும் முற்று. † சிரேயசுவாமிதீர்த்தகாலம்.

செங்கண்ணெடியான்றிறம்பேசியசிந்தைசெய்த
நங்கண்மறுவுமறுவன்றுநல்லார்கண்முன்ன
ரங்கண்விசும்பினிருள்போழ்ந்தகல்வானெழுந்த
திங்கண்மறுவுஞ்சிலர்கைதொழச்செல்லுமன்றே. (௪)

விஞ்சைக்கிறைவன்விரைசூழ்முடிவேந்தன்மங்கை
பஞ்சிக்கனுங்குஞ்சிலம்பாரடிப்பாவைபூவார்
வஞ்சிக்கொடிபோல்பவள்காரணமாகவந்த
செஞ்சொற்புராணத்துரையின்வழிச்சேறுமன்றே. (௫)

பாயிரம் முற்றிற்று.

ஆக விருத்தம் - ௫.

முதலாவது

# நாட்டுச்சருக்கம்.

மஞ்சுசூழ்மணிவரையெடுத்தமாலவ
னிஞ்சிசூழணிநகரிருக்கைநாடது
விஞ்சைநீளுலகுடன்விழாக்கொண்டன்னது
துஞ்சுநீணிதியதுசுரமையென்பவே.

பங்கயங்காடுகொண்டலர்ந்தபாங்கெலாஞ்
செங்கயலினநிரைதிளைக்குஞ்செல்வமு
மங்கையர்முகத்தனமதர்த்தவாளரி
யங்கயற்பிறழ்ச்சியுமறாதநீரவே.

அங்கவரணிநடையன்னத்தோட்டன
தீங்குரன்மழலையாற்சிலம்புந்தண்பணை
வீங்கிளமுலையவர்மெல்லென்சீறடி
போங்கிருஞ்சிலம்பினுஞ்சிலம்புமூர்களே.

பூலகந்தவழ்ந்துதேனிரந்துதாதுசேர்
பொழிலகம்பூவையுங்கிளியும்பாடுமே
மலகங்குடைந்துவண்டிறங்குங்கோதையர்
லையும்யாழுமேமலிந்தமாடமே. (௪)

**கா**வியுங்குவளையுநெகிழ்ந்துகள்ளுமி
ழாவியுண்டடர்த்ததேனகத்துமங்கையர்
நாவியுங்குழம்புமுண்ணகிலநற்றவ
மேவிநின்றவரையுமெலியவிம்முமே. (ரு)

**வா**னிலங்கருவியவரையுமுல்லைவாய்த்
தேனிலங்கருவியதிணையுந்தேறல்சேர்
பானலங்கழனியுங்கடலும்பாங்கணி
நானிலங்கலந்துபொன்னரலுநாடதே. (சு)

வேறு.

முன்றிலெங்குமுருகயர்பாணியுஞ்
சென்றுவீழருவித்திரளோசையும்
வென்றிவேழமுழக்கொடுகூடிவா
னின்றிநின்றதிரும்மொருபாலெலாம். (எ)

ஏறுகொண்டெறியும்பணைக்கோவலர்
கூறுகொண்டெழுகொன்றையந்தீங்குழல்
காறுகொண்டவர்கம்பலையென்றிவை
மாறுகொண்டுசிலம்புமோர்மாடெலாம். (அ)

அணங்கனாரன்னவாடன்முழவமுங்
கணங்கொள்வாரணக்கம்பலைச்செல்வமும்
மணங்கொள்வார்முரசும்வயலோதையு
மிணங்கியெங்குமிருக்குமோர்பாலெலாம். (கூ)

கலவரின்னியமுங்கடலச்சிறூர்
புலவுநீர்ப்பொருபூணெறிபூசலும்
நிலவுவெண்மணனீளிருங்கானல்வா
யுலவுமோதமுமோங்குமோர்பாலெலாம். (௰)

**கை**விரிந்தனகாந்தளும்பூஞ்சுனை
மைவிரிந்தனநீலமும்வான்செய்நாண்
மெய்விரிந்தனவேங்கையுஞ்சோர்ந்ததே
னெய்விரிந்தனநீளிருங்குன்றெலாம். (கக)

கொன்றையுங்குருந்துங்குலைக்கோடலு
முன்றிலேறியமுல்லையம்பந்தருந்
நின்றுதேனிரந்தூதவிரிந்தரோ
மன்றெலாமணநாறுமருங்கினே. (௧௨)

நாறவிண்டனநெய்தலுநாண்மதுச்
சேறுவிண்டசெந்தாமரைக்கானமு
மேறிவண்டினமூன்றவிழ்ந்ததே
னூறிவந்தொழுகும்மொருபாலெலாம். (௧௩)

கோடுடைந்தனதாழையுங்கோழிருண்
மோடுடைந்தனமூரிக்குவளையுந்
தோடுடைந்தன * சூகமுங்கற்பகக்
காடுடைந்தனபோன்றுளகானலே. (௧௪)

நீலவாலவட்டத்தினிறங்கொளக்
கோலும்பீலியகோடியர்குன்றின்மே
லாலுமாமழைநீண்முகிலார்த்தொறு
மாலுமாமயிலாலுமொர்பாலெலாம். (௧௫)

நக்கமுல்லையுநாகிளங்கொன்றையு
முக்கதாதடர்கொண்டொலிவண்டரு
வெக்கரீர்மணற்கிண்டியிளம்பெடைப்
பக்கநோக்கும்பறவையொர்பாலெலாம். (௧௬)

துள்ளறுக்கவுட்கொண்டுசுரும்பொடு
கள்ளறுதசெந்தாமரைக்கானகத்
துள்ளறுதுதைந்தே[illegible]கையிரட்டுறப்
புள்ளறுதுபுலம்பினபொய்கையே. (௧௭)

வெண்முளைப்பசுந்தாமரைமென்சுருண்
முண்முளைத்திரளோடுமுரிந்துகொண்
டுண்முளைத்திளவன்னமுழக்கலாற்
கண்முளைத்ததடத்தகழியெலாம். (௧௮)

* சூகம்—தாமரை ஆம்பல் முதலிய நீர்ப்பூவின் பொதுப்பெயர்.

காந்தளங்குலையாற்களிவண்டினங்
[illegible]ந்தி[illegible]ம்பிடிவீசக்குழாங்களோ
டே[illegible]ந்தனச்சாரலிருங்கைம்மா
மாந்திநின்றுறங்கும்வரைமாடெலாம். (௧௯)

தார்செய்கொன்றைதளித்ததண்டேறலு
டேர்செய்கின்றவிளம்புலிருங்குழைக்
கார்செய்காலைகறித்தொறுமெல்லவே
போர் * செய்மாவினம்பூத்தண்புறணியே (௨0)

அள்ளிலைக்குவளைத்தடமேய்ந்தசைஇக்
கள்ளலைத்தகவுட்கருமேதிபா
லுள்ளலைத்தொழுகக்குடைந்துண்டலாம்
புள்ளலைத்தபுனலபுலங்களே. (௨௧)

கெண்டையஞ்சினைமேய்ந்துகிளாந்துபோய்
முண்டகத்துறைசேர்ந்தமுதலைமா
வண்டல்வார்கரைமாமகரக்குழாங்
கண்டுநின்றுகனலுங்கழியெலாம். (௨௨)

கண்ணிலாங்கழையின்கதிர்க்கற்றையு
மண்ணிலாங்குரல்வார்தினைவாரியு
மெண்ணிலாங்கவிளைவனவீட்டமு
முண்ணிலாங்குலவாமையுயர்ந்தவே. (௨௩)

பேழ்த்தகாயினபேரெட்பிறங்கிணர்
தாழ்த்தகாயனதண்ணவரைக்கொடி
சூழ்த்தகாய்த்துவரைவரகென்றிவை
மூழ்த்தபோன்றுளமுல்லைநிலங்களே. (௨௪)

மோடுகொண்டெழுமூரிக்கழைக்கரும்
பூடுகொண்டபொதும்பரோ[illegible]விராய்த்
தோடுகொண்டபைங்காய்[illegible]செந்நெலின்
காடுகொண்டுளகண்ணகனேடெலாம். (௨௫)

* செய்யுமென்னும் முற்று.

சங்குநித்திலமுந்தவழிப்பியுந்
தெங்கந்திங்குலையூறியதேறலும்
வங்கவாரியும்வாரலைவாரியுந்
தங்குவாரியதண்கடனுடைமாம். (உசா)

வேறு.

கொடிச்சியர்புனத்தயற்குறிஞ்சிநெய்பக
ரிடைச்சியர்கதுப்பயற்கமழுமேமுல்லையங்
கடைச்சியர்களேயெறிகுவளேகானல்வாய்த்
தொடுத்தலர்பிணையலார்குழலுட்டோன்றுமே. (உஎ)

கலவர்தஞ்சிறுபறையிசையிற்கைவினைப்
புலவர்தேம்பிழிமகிழ்குரவைபொங்குமே
குலவுகாற்கோவலர்கொன்றைத்தீங்குழ
லுலவுநீளசுணமாவுறங்குமென்பவே. (உஅ)

மாக்கொடியானையுமௌவற்பந்தருங்
கார்க்கொடிமுல்லையுங்கலந்துமல்லிகைப்
பூக்கொடிப்பொதும்பருங்கானனூழலுந்
தூக் * கொடிகமழ்ந்துதாந்துறக்கமொக்குமே. (உகூ)

நாட்டுச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் - ௩௫.

இரண்டாவது

# நகரச்சருக்கம்.

சொன்னநீர்வளமைத்தாயசுரமைநாட்டகணிசார்ந்து
மன்னன்வீற்றிருந்துவைகநூலவர்வகுக்கப்பட்ட
பொன்னவிர்புரிசைவேலிப்போதனமென்பதுண்டோர்
நன்னகர்நாகலோகநகுவதொத்தினியதொன்றே. (க)

சங்கமேய்தரங்கவேலித்தடங்கடற்பொய்கைபூத்த
வங்கண்மாஞாலமென்னுந்தாமரையலரினங்கேழ்ச்
செங்கண்மால்சுரமையென்னுந்தேம்பொகுட்டகத்துவைகு
நங்கையார்படிவங்கொண்டநலத்ததுநகரமன்றே. (உ)

* கொடி—வாசனை.

செஞ்சுடர்க்கடவுடிணடேரிவுளிகாறுவளவூன்று
மிஞ்சுடைமதர்வைஞெற்றிவர்னுழுவாயின்மாடத்
தஞ்சுடரிஞ்சியாங்கோரகமணிந்தலர்ந்ததோற்றம்
வெஞ்சுடர்விரியுமுந்நீர்வேதிகைமீதிட்டன்றே. (௩)

இரும்பிடுதொடரின்மாவினெழுமுதற்பிணித்தயானைக்
கரும்பிடுகவளமூட்டுங்கம்பலைகலந்தகாவி
னரும்பிடையலர்ந்தபோதினல்லியுண்டாற்றுகின்ற [ம.
சுரும்பொடுதுதைந்துதோன்றுஞ்சூழ்மதிலிருக்கைபலவா

மானளாமதர்வைநோக்கின்மையரிமழைக்கணாரக
தேனளாமுருவக்கண்ணிச்செல்வர்தோடிளைக்குமாடங்
கானளாங்காமவல்லிகற்பகங்கலந்தகண்ணன்
வானளாய்மலர்ந்துதோன்றுமணிவரையனையதொன்றே. (ரு)

வேறு.

அகிலெழுகொழும்புகைமஞ்சினுடவு
முகிலிசையெனமுழாமுரன்றுவிம்மவுந
துகிலிகைக்கொடியனார்மின்னிற்றோன்றவு
மிகலினமலையொடுமாடமென்பவே. (சா)

கண்ணெலாங்கவர்வனகனககூடமும்
வெண்ணிலாச்சொரிவனவெள்ளிவேலியுந
தண்ணிலாத்தவழ்மணித்தலமுஞ்சார்ந்தரோ
மண்ணினுலியன்றிலமதலைமாடமே. (எ)

மாடவாய்மணிமுழாவிசையுமங்கைய
ராடுவார்சிலம்பிணையதிருமோசையும்
பாடுவார்பாணியும்பயின்றுபல்கல
மூடிமாணகரதுமுரல்வதொக்குமே. (அ)

தாழிவாய்க்குவளையுந்தண்ணெனேந்தியா
மாழைவாணெடுங்கணுமயங்கிவந்துசென்
றூழிவார்மின்குரலாவித்தார்த்தரோ
வேழைவாய்ச்சுரும்பினமிளைக்குமென்பவே. (கூ)

பளிங்குபோழ்ந்தியற்றியபலகைம்வதிகை
விளிம்புதோய்நெடுங்கடைவீதிவாயெலாந்
துளங்குபூமாலையுஞ்சுரும்புந்தோன்றலான்
வளங்கொள்பூங்கற்பகவனமும்போலுமே. (௧0)

காவிவாய்க்கருங்கணார்காமர்பூஞ்சிலம்
பாவிவாய்மாளிகையதிரக்கேட்டொறுந்
தூவிவான்பெடைதுணைதுறந்தகொல்லென
வாவிவாயிளவனமயங்குமென்பவே. (௧௧)

* விலத்தகைப்பூந்துணர்விரிந்தகோதையா
நலத்தகைச்சிலம்படிநவிலவூட்டிய
வலத்தகக்குழம்புதோய்ந்தரசவீதிகள்
புலத்திடைத்தாமரைபூத்தபோலுமே. (௧௨)

கண்ணிலாங்கடிமலர்க்குவளைக்கற்றையும்
வெண்ணிலாத்திரளெனவிளங்குமாரமும்
வண்ணவான்மல்லிகைவளாயமாலையு
மண்ணன்மாநகர்க்கவைக்கரியவல்லவே (௧௩)

தேம்பழுத்தினியநீர்மூன்றுந்தீம்பலா
மேம்பழுத்தளிந்தனசுளையும்வேரியு
மாம்பழக்கனிகளுமதுத்தண்டீட்டமுந்
தாம்பழுத்துளசிலதவளமாடமே. (௧௪)

மைந்தருமகளிருமாலைகாலையென்
றந்தரப்படுத்தவரறிவிதின்மையாற்
சுந்தரப்பொற்றுகடுதைந்தழிபொன்னக
ரிந்திரவுலகம்வந்திழிந்ததொக்குமே. (௧௫)

மற்றமாநகருடைமன்னன்றன்னுய
ரொற்றைவெண்குடைநிழலுலகிற்கோருயிர்ப்
பெற்றியான் † பயாபதியென்னும்பேருடை
வெற்றிவேன்மணிமுடிவேந்தர்வேந்தனே. (௧௬).

* விலம், சீர்கிலை—பள்ளத்தாக்கு. † பிரசாபதியென்றும் பாடம்.

எண்ணினரெண்ணகப்படாதசெய்கையா
னண்ணியுரகன்றவர்திறத்துமாணையா
னண்ணுநர்பகைவரென்றிவர்க்குநாளினுந்
தண்ணியன்வெய்யனந்தானைமன்னனே. (கஎ)

நாமவேனரபதியுலகங்காத்தநாட்
காமவேள்கவர்கணைகலந்ததல்லது
தாமவேல்வயவர்தந்தழலங்கொல்படை
நாமநீர்வரைப்பகநவிவதில்லையே. (கஅ)

ஆறிலொன்றறமெனவருளினல்லதொன்
றாறுசெய்துலகினினுவப்பதில்லையே
மாறிநின்றவரையும்வணக்கினல்லது
சீறிநின்றவரையுஞ்செகுப்பதில்லையே. (கசு)

அடிநிழலரசரையளிக்குமாய்கதிர்
முடிநிழன்முனிவரர்சரணமூழ்குமே
வடிநிழல்வனகதிரெஃகின்மன்னவன்
குடைநிழலுலகெலாங்குளிர்கின்றதே.

மன்னியபகைக்குழாமாறும்வையகந்
துன்னியவரும்பகைத்தொகையுமின்மையாற்
றன்னையுந்தரையையுங்காக்குமென்பதம்
மன்னவன்றிறத்தினிமருளவேண்டுமோ உக)

மேலவர்மெய்ப்பொருள்விரிக்கும்வீறுசா
னூலினுற்பெரியவர்நுழைந்தசுற்றமா
வாலுநீரன்னமோடரசவன்னமே
போலநின்றுலகினைப்பொதுமைநீக்கினான். (உஉ)

கோதிநுனைப்பகழியான்குறிப்பினல்லதொன்
றிதுநமக்கிசைக்கெனவெண்ணுமெண்ணிலா
னோதுமலர்வெருவுறுநுவற்சியர்னபின்
னதிவவன்பகுதிகளமைதிவண்ணமே.

மற்றவன்றேவியர்மகரவார்குழைக
கொற்றவர்குலங்களைவிளங்கத்தோன்றினு
ரிற்றதிம்மருங்குலென்றிரங்கவீங்கிய
முற்றுருமுலையினார்கலையின்முற்றியார். (உ௪)

பஞ்சனுங்கடியினார்பரந்தவல்குலார்
செஞ் முலைமருங்குசிந்தினார்
வஞ்சியங்குழைத்தலைமதர்வைக்கொம்புத
மஞ்சுடரிணர்க்கொசிந்தனையவைம்மையார் (உ௫)

காமத்தொத்தலர்ந்தவர்கதிர்த்தகற்பினார்
தாமத்தொத்தலர்ந்துதாழ்ந்திருண்டகூந்தலார்
தூமத்துச்சுடரொளிதுளும்புதோளினார்
வாமத்தின்மயங்கிமைமதர்த்தவாட்கணார். (உ௬)

ஆயிரரவரவர்க்கதிகத்தேவியர்
மாயிருவிசும்பினினிழிந்தமாண்பினார்
சேயிருந்தாமரைத்தெய்வமன்னரென்
றேயுரையிலாதவரிருவராயினார். (உ௭)

வேறு.

தீங்கரும்பமிழ்தமூட்டித்தேனளாய்ப்பிழிந்தபோலு
மோங்கிருங்கடலந்தானைவேந்தணங்குறுக்குமின்சொ
லீங்கிருங்குவவுக்கொங்கைமிகாபதிமிக்கதேவி
தாங்கருங்கற்பிற்றங்கைசசியென்பாள்சசியொடொப்பாள்.

பூங்குழைமகளிர்க்கெல்லாம் பொன்மலர்மணிக்கொம்பன்ன
தேங்குழன்மங்கைமார்கடிலதமாய்த்திகழநின்றார்
மாங்கொழுந்தசோகமென்றாங்கிரண்டுமேவயந்தகாலத்
தாங்கெழுந்தவற்றையெல்லாமணிபெறவலருமன்றே. (உ௯)

பெருமகனுருகும்பெண்மைமாண்பினும்பேணிநாளு
மருவினும்புதியபோலுமழலையங்கிளவியாலுந்
திருமகள்புலமைபாக்குஞ்செல்வியென்றிவர்கள்போல
விருவருமிறைவனுள்ளத்தொருவராயினியரானார். (௩0)

மன்னவனுவியாவார்மகளிரம்மகளிர்தங்க
ளின்னுயிராகிநின்றுனிறைமக்னிவர்கடங்கட
கென்னூகொலொருவர்தம்மேலொருவர்க்கிங்குள்ளமோட
முன்னவன்புணர்த்தவாறம்மொய்மலர்க்கணையினுனே. (௩௧)

செற்பகர்ந்துலகங்காக்குந்தொழில்புறத்தொழியவாங்கி
மற்பகரகலத்தானைமனத்திடைப்பிணித்துவைத்தார்
பொற்பகங்கமழப்பூத்ததேந்துணர்பொறுக்கலாற்றுக்
கற்பகக்கொழுந்துங்காமவல்லியங்கொடியுமொப்பார். (௩௨)

மங்கையரிருவராகிமன்னவனெருவனுகி
யங்கவரமர்ந்ததெல்லாமமர்ந்தருள்பெருகிநின்றன்
செங்கயன்மதர்த்தவாட்கட்டெய்வமாமகளிர்தோறுந
தங்கியவிருவந்தாங்குஞ்சக்கரன்றகைமையானுன். (௩௩)

முற்றுநீர்வளாகமெல்லாமுழுதுடனிழற்றுமூரி
யொற்றைவெண்குடையினீழலுலகுகண்படுப்பவோமபிக்
கொற்றவனெடுங்கணூர்தங்குவிமுலைத்தடத்துழ்ழ்கி
மற்றவர்க்கரசசெல்வமின்னணமமர்ந்ததன்றே. (௩௪)

நகரச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ௬௪.



மூன்றுவது

# குமாரகாலச்சருக்கம்.



ஆங்கவர்திருவயிற்றமரர்கற்பமாண
டீங்குடனிழிந்துவந்திருவர்தோன்றினா
வாங்குநீர்த்திரைவளர்வளையுமக்கட
லோங்குநீர்கிழலுமொத்தொளிருமூர்த்தியா. (௧)

பெண்ணிலாந்தகைப்பெருந்தேவிபேரமாக்
கண்ணிலாங்களிவளருவகைகைமிகத்
தண்ணிலாவுலகெலாந்தவழ்ந்துவான்கொள
வெண்ணிலாச்சுடரொளிவிசயன்றேன்றினான். (௨)

ஏரணங்கிளமபெருந்தேவிநாளூறச்
சீரணங்கவிரொளித்திவிட்டன்றேன்றினை
நீரணங்கொளிவளைநிரந்துவிம்மின
வாரணங்கலாமழையமரர்சிந்தினர். (௩)

திசையெலாந்தெளிந்தனதேவர்பொன்னக
ரிசையெலாம்பெருஞ்சிறப்பியன்றவேற்பவா
நசையெலாமவிந்தனநலியுந்தீவினைப்
பசையெலாமபறந்தனபலர்க்குமென்பவே (௪)

செய்தமாணகரியிற்சிறந்துசென்றுசென
றெய்தினாகுமரராமபிராயமெய்தலு
மைதுழாநெடுங்கணாமனத்துட்காமனு
ரைதுலாங்கவாகணையரும்புவைத்தவே (௫)

காமருவலமபுரிகமழூமேனியன்
தாமரையகவிதழ்தடுத்தகண்ணினன
றாமருளிருடணாநதனையகுஞ்சியன்
பூமருபொலங்குழைபுரளுங்காதினன (௬)

வாடலிலகணணணியன்மலாநதமாபினன
தாடவழ்தடக்கையனறயங்குசோதியன
கோடியர்குன்றெனக்குலவுதோளினன்
பீடுடைநடையினன்பெரியநமபியே (௭)

பூவையம்புதுமலர்ப்புரையுமேனியன
றூவிரிதாமரைதொலைத்தகண்ணினன
றீவிரியாம்பலிற்சிவநதவாயினன்
மாவிரிதிருமறுவணிநதமார்பினன. (௮)

செங்கயல்வலம்புரிதிகிரியென்றிவை
தங்கியவங்கையனடித்தண்போதினன்
மங்கலமழகளிறனையசெல்கைய
னிங்குமுன்மொழிந்தவற்கிளையநம்பியே. (௯)

திருவிளைத்துலகுகண்மலரத்தெவ்வர்தம்
புரிவளைநன்னகர்ச்செல்வம்புல்லென
வுரிவளைத்தோளியர்மனத்துட்காமநோ
யெரிவளைத்திடவேதோரிளைமையெய்தினர். (க0)

உவர்விளைகடற்கொடிப்பவளமோட்டிய
துவரிதழ்...யவர்துளங்குமேனிய
ரவர்கடம்மருள்கொலோவனங்கனுய்மலர்
கவர்கணைகடைக்கணித்துருவுகாட்டினர். (கக)

கடலொளிமணிவணன்கனவில்வந்தெம
துடலகம்வெறுவிதாயுள்ளம்வவ்வினன்
விடலிலனெம்முயிர்விடுக்குங்கொல்லென
மடவரலவர்குழாமயக்கமுற்றதே. (க௨)

வார்வளைவண்ணனெம்மனத்துளான்பிற
ரேர்வளர்நெடுங்கணுக்கிலக்கமல்லனற்
கார்வளர்கொம்பனரிவர்கள்காமநோ
யார்வளர்த்தவர்கொலென்பவருமாயினர். (கூ)

கண்ணிலாங்கவினொளிக்காளைமார்திறத்
துண்ணிலாவெழுதருகாமவூழெரி
வெண்ணிலாச்சுடர்சுடவிரிந்துநாண்விடாப்
பெண்ணிலாம்பிறிதுயிர்பெரியதில்லையே. (கச)

திருவளர்செல்வர்மேற்சென்றசிந்தைநேர்
யொருவரினொருவர்மிக்குடையராதலா
லுருவளர்கொம்பனருள்ளங்காய்வதோ
ரெரிவளர்த்திடவேதோரிளமையெய்தினர். (கரு)

மற்றொர்நாளமரிகைக்கொடிகொண்மாமணிச்
சுற்றுவான்சுடரொளிதழுவிச்சூழ்மலர்
முற்றிவண்டினம்விடாமுடிகொள்சென்னியக்
கொற்றவனிளையவர்குழையவைகினன். (க௬

மஞ்சுடை மணிநெடுமாலைமண்டபத்
தஞ்சுடரகிற்புகையளைந்துதேனளாய்ப்
பஞ்சுடையமளிமேற்பள்ளியேற்பவன்
செஞ்சுடரிரிவதோர்திறத்தனயினன். (கஎ)

மன்னவன்றுயில்விடுத்தருளமைந்தர்பொற்
றுன்னியவுடையினர்துதைந்தகச்சையர்
பின்னியஞாணினர்பிடித்தவில்லின
ரன்னவரடிமுதற்காவனண்ணினர். (கஅ)

தங்கியதவழொளிதடாவிவில்லிட
மங்கலவுழைக்கலமருங்குசேர்ந்தன
வங்கவன்கண்கழூஉவருளிச்செய்தனன்
பங்கயமுகத்தர்பல்லாண்டுகூறினர். (கக)

அந்தணராசிடைகூறியாய்மலர்ப்
பைந்துணர்நெடுமுடிபயிலவேற்றினா
செந்துணர்நறுமலர்தெளித்துத்தேவாமாட
டிந்திரனனையவனிறைஞ்சியேத்தினன். (உ0)

விரையமர்கோதையர்வேணுக்கோலின
ருரையமர்காவல்பூண்கடையினூடுபோய்
முரசமர்முழங்கொலிமூரித்தானைய
னரசவைமண்டபமடைவதெண்ணினா. (உக)

பொன்னவிர்திருவடிபோற்றிபோற்றியென
றன்னமென்னடையவர்பரவவாய்துகிற்
கன்னியர்கவரிகாலெறியக்காவலன்
முன்னியநெடுங்கடைமுற்றமுன்னினன. (உஉ)

மஞ்சிவர்வளநகர்காக்குங்வார்கழ
னஞ்சிவர்வேனரபதியையாயிடை
வெஞ்சுடர்வாளினர்விசித்தகச்சையர்
கஞ்சுகியவர்கண்மெய்காவலோம்பினர். (உஙூ)

வாசநீர்தெளித்தலர்பரப்பிவானக
மேசுளினிருக்கையவிலங்குசென்னிய
மூசுதேனெடுங்கடைமூன்றும்போய்ப்புறத்
தோசைநீண்மண்டபமுவந்தெய்தினான். (உச)

வேறு.

பளிங்கொளிகதுவப்போழ்ந்தபலகைகண்குலவச்சோத்தி
விளங்கொளிவிளிம்பிற்செம்பொன்வேதிகை வெள்ளிவேயுட்
டுளங்கொளிபவளத்திண்காற்சுடர்மணிதவழும்பூமி
வளங்கவின்றனையதாயமண்டபமலியப்புக்கான். (உரு)

குஞ்சரக்குழவிகவ்விக்குளிர்மதிக்கோடுபோலு
மஞ்சுடரெயிற்றவாளியணிமுகமலரவூன்றிச்
செஞ்சுடரணிபொற்சிங்காசனமிசைச்சேர்ந்தசெவ்வன
வெஞ்சுடருதயத்துச்சிவிரிந்தவெய்யவனொடொத்தான். ()

பூமருபுரிந்தநுண்ணூற்புரோகிதன்பொறிவண்டார்க்கு
மாமலரணிந்தகண்ணிமந்திரக்கிழவர்மன்ற
ரேமருகடலந்தானையிறைமகன்குறிப்புநோக்கித்
தாமரைச்செங்கட்சைகைபணித்ததானத்தரானா. (உஎ)

முன்னவரிருந்தபின்னைமூரிநீருலகங்காக்கு
மன்னவன்கழலைத்தங்கண்மணிமுடிநுதியிற்றீட்டி
பின்னவன்பணித்ததானம்பெறுமுறைவகையிற்சோந்தா
மின்னிவர்கடகப்பைம்பூண்வென்றிவேல்வேந்தரெல்லாம.()

வழிமுறைபயின்றுவந்தமரபினார்மன்னர்கோமான்
விழுமலரடிக்கண்மிக்கவன்பினார்வென்றிநீரா
ரெழுவளர்த்தனையதோளாரிளையவரின்னநீரா
ருழையவராகவைத்தானுடைமால்களிற்றினானே. (உகூ)

காவலனென்னுஞ்செம்பொற்கற்பகங்கவின்றபோழ்தி
னாவலரென்னும்வண்டுநகைமுகப்பெயரினாய
பூவலர்பொலிவுநோக்கிப்புலமயங்களிப்பவாகிப்
பாவலரிசையிற்றோன்றப்பாடுபுபயின்றவன்றே. (௩௦)

பண்ணமைமகரநல்யாழ்ப்பனுவனூற்புலவர்பாடி
மண்ணமர்வளாகமெல்லாமலர்ந்தநின்புகழோடொன்றி
விண்ணகம்விளங்குதிங்கள்வெண்குடைநிழலின்வைகிக்
கண்ணமருலகங்காக்குங்கழலடிவாழ்கவென்றார். (௩௧)

மஞ்சுடைமலையின்வல்லிதொடரவான்வணங்கநின்ற
வஞ்சுடர்க்கடவுட்காத்தவருங்குலமலரத்தோன்றி
வெஞ்சுடரெஃகமொன்றின்வேந்துகண்ணகற்றிநின்ற
செஞ்சுடர்முடியினாய்நின்கோலிதுசெல்கவென்றார். (௩௨)

இன்னணம்பலருமேத்தவினிதினங்கிருந்தவேந்தன்
பொன்னணிவாயில்காக்கும்பூங்கழலவனைநோக்கி
யென்னவரேனுமாகநாழிகையேழுகாறுங்
கன்னவிறோளினாய்நீவரவிடுகோவலென்றான். (௩௩)

ஆயிடையலகின்மெய்ந்நூலளவுசென்றடங்கிநின்றான்
சேயிடைநிகழ்வதெல்லாஞ்சிந்தையிற்றெளிந்தநீரான்
மேயிடைபெறுவனாயின்வேந்துகாண்குறுவன்கொல்லோ
நீயிடையறிசொல்லென்றோர்நிமித்திகனெறியிற்சொன்னான்.

ஆங்கவனரசர்கோமான்குறிப்பறிந்தருளப்பட்டீ
ரீங்கினிப்புகுமினென்றானிறைவனையவனுஞ்சேர்ந்தான்
வீங்கிருந்தானையானும்வெண்மலர்பிடித்தகையா
லோங்கிருந்தானங்காட்டியுவந்தினிதிருக்கவென்றான். (௩௫)

உற்றதன்றொழுக்கிற்கேற்பவுலகுபசாரநீக்கிக்
கொற்றவன்குறிப்புநோக்கியிருந்தபின்குணக்குன்றொப்பான்
முற்றியவுலகின்மூன்றுகாலமுமுழுதுநோக்கிக்
கற்றநூற்புலமைதன்னைக்காட்டுதல்கருதிச்சொன்னான். ( )

கயந்தலைக்களிற்றினாயேயாசர்களுக்கண்டதுளதுகங்கு
னயந்ததுதெரியினெம்பிரானீகடல்வண்ணன்றன்னை
விசும்பகத்திழிந்துவந்தோர்வேழம்வெண்போதுசேர்ந்த
தயங்கோளிமாலைசூட்டித்தன்னிடமடைந்ததன்றே. (௩௭)

முன்மலர்ந்தகன்றமார்பமற்றதன்பயனுங்கேண்மோ
நன்மலர்நகைகொள்கண்ணிநம்பிதன்னாமமேத்தி
மின்மலர்ந்திலங்குபைம்பூண்விஞ்சைவேந்தொருவன்வந்து
தன்மகளொருத்திதன்னைத்தந்துதான்போகுமென்றான். ()

கட்பகர்திவலைசிந்துங்கடிகமழ்குவளைக்கண்ணித்
திட்பமாஞ்சிலையினாய்நீதெளிகநாளேழுசென்றா
லொட்பமாயுரைக்கவல்லானொருவனோரோலைகொண்டு
புட்பமாகரண்டமென்னும்பொழிலகத்திழியுமென்றான் (௩௯)

என்றவனியம்பக்கேட்டேயிருந்தவர்வியந்துநோக்கிச்
சென்றுயர்திலகக்கண்ணித்திவிட்டனித்திறத்தனையா
மொன்றியவுலகமெல்லாமொருகுடைநீழற்காக்கும்
பொன்றிகழலங்கன்மார்பபோற்றிபொய்யன்றிதென்றார். ()

உரையமைந்திருப்பவிப்பாலோதுநாழிகையொன்றோட
முரசமொன்றதிர்த்ததோங்கியதிர்தலுமுகத்தினாலே
யரசவைவிடுத்தவேந்தனகத்தநூலவரைநோக்கி
வரையுயர்மாடக்கோயின்மந்திரசாலைசேர்ந்தான். (௪௧)

வே று.

கங்குல்வாய்க்கனவவன்கருதிச்சொற்றது
மங்கலப்பெரும்பயன்வகுத்தவண்ணமுங்
கொங்கலர்தெரியலான்கூறிக்கொய்ம்மலர்த்
தொங்கலார்நெடுமுடிசுடரத்தூக்கினான். (௪௨)

சூழுநீருலகெலாந்தொழுதுதன்னடி
நீழலேலிரந்துகண்படுக்குநீர்மையா
னாழியங்கிழவனாயலருமென்பது
பாழியந்தோளினாய்பண்டுங்கேட்டுமே. (௪௩)

நற்றவமுடையனோநம்பியென்றுபூண்
விற்றவழ்சுடரொளிவிளங்குமேனியக்
கொற்றவன்குறிப்பினையறிந்துகூறிய
மற்றவர்தொடங்கினார்மந்திரத்துளார். (௪௪)

வே று.

சங்கலேகையுஞ்சக்கிரலேகையு
மங்கையுள்ளனவையர்க்காதலாற்
சங்கபாணியான்சக்கிராயுத
மங்கையேந்துமென்றறையல்வேண்டுமே. (சரு)

வே று.

விஞ்சையருலகுடைவேந்தன்றன்மகள்
வஞ்சியங்கொடியிடைமயிலஞ்சாயலா
ளெஞ்சலின்றியங்கிவந்திழியுமாய்விடி
லஞ்சிநின்றிவ்வுலகாட்சிசெலலுமே. (சசு)

நாமினிமற்றவன்மொழிந்தநாளினுற்
றேமருசிலாதலந்திருத்தித்தெய்வமாந்
தூமருமாலையாய்துருமகாந்தனைக்
காமருபொழிலிடைக்காவல்வைத்துமே (சஎ)

என்றவர்மொழிந்தபினிலங்குபூணினு
னன்றதுபெரிதுமென்றருளிநாடொறுஞ்
சென்றவன்காக்கெனமொழிந்துதேங்குழ
லின்றுணையவர்கடங்கோயிலெய்தினுன். (சஅ)

எரிபடுவிரிசுடரிலங்குபூணினுன்
றிருவடிதொழுதுசெலதுருமகாந்தனும்
வரிபடுமதுகரமுரலவார்சினைச்
சொரிபடுமதுமலர்ச்சோலைநண்ணினுன். (சகூ)

குமாரகாலச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ககஅ.



நான்காவது

# இரதநூபுரச்சருக்கம்.



புரிசைநீண்மதிற்போதனமாநக
ரரசர்வார்த்தையவ்வாறதுநிற்கவே
விரைசெய்வார்பொழில்விஞ்சையர்சேடிமே
லுரையையாமுரைப்பானுறுகின்றதே. (க)

நிலவுவெண்சுடர்பாய்நிலமொப்பநீண்
டுலவுநீள்கடறீண்டியுயர்ந்துபோ
யிலகுவின்மணிவானியன்மாடெலாம்
விலகநின்றதுவிஞ்சையர்குன்றமே. (௨)

தொக்கவானவர்சூழ்குழலாரொடு
மொக்கவாங்குளராய்விளையாடலா
லுக்கசோதிகள்சோலையினூடெலாஞ்
செக்கர்வானகமுஞ்சிறிதொக்குமே. (௩)

அவிழுங்கார்தலராயரமங்கையர்
பவழவாயமுதம்பருகிக்களி
தவழுமென்முலைபுல்லத்தழைந்ததார்
கமழ்நின்றனகற்பகச்சோலையே. (௪)

கிளருஞ்சூழொளிக்கின்னரதேவர்தம
வளரும்பூண்முலையாரொடுவைகலாற்
* றுளருஞ்சந்தனச்சோலைகளூடெலா
நளிருந்தெய்வநறுங்குளிர்நாற்றமே. (௫)

மங்குல்வாடைவந்தார்வன்மீதுழாய்ப்
பொங்குதாதொடுபூமதுக்கொப்பளித்
தங்கராகமளாயரமங்கையர்
கொங்கைவாரிகள்மேற்குதிகொள்ளுமே. (௬)

தேனகத்துறையுஞ்செழுஞ்சந்தனக்
கானகத்தழையின்கமழ்சேக்கைமே
லூனகத்தவர்போகமுவந்தரோ
வானகத்தவர்வைகியவைகலே. (௭)

மஞ்சுதோய்வரைமைந்தரொடாடிய
வஞ்சிலோதியராரளகப்பொடி
பஞ்சராகம்பதித்தபளிக்கறை
துஞ்சுபாறைகள்மேற்றுதைவுற்றதே. (௮)

---

* துளர்தல்—மெல்லென்றொலித்தல்.

மாதரார்நடைகற்கியவானிழிந்
தூதுவண்டுணவூழடியூன்றிய
பாதராகம்பதித்தபளிக்கறை
காதலார்தமகண்கவர்கின்றதே. (௯)

ஆகுபொன்னறைமேலருவித்திரள்
நாககன்னியராடலின்ஞால்கைம்மா
வேகமும்மதவெள்ளமளாவிய
போகமல்லிகைநாறும்புனல்களே. (௧௦)

பூக்களாவனபொன்மரைபூம்பொழிற்
காக்களாவனகற்பகச்சோலைகள்
வீக்குவார்கழல்விஞ்சையர் * சேடிமே
லாக்கியாமுரைக்கின்றதிங்கென்கொலோ. (௧௧)

வரையின்மேன்மதிகோடுறவைகிய
திருவநீளொளித்தென்றிசைச்சேடிமே
லிரதநூபுரச்சக்கரவாளமென்
றுரைசெய்பொன்னகரொன்றுளதென்பவே. (௧௨)

வேறு.

அம்பொன்மாலையார்களித்தலத்தெழுந்தரத்தவாய்க்
கொம்பனார்கொடுத்தமுத்தநீரவாயகோழரைப்
பைம்பொன்வாழைசெம்பொனே பழுத்துவீழ்ந்தசோதியால்
வம்புபாய்ந்துவந்தொசிந்துசாறுசார்வமானுமே. (௧௩)

வேய்கிழன்னிலாவிலங்குவெள்ளிவிம்முபாளைவாய்ப்
பாய்கிழற்பசுங்கதிர்ப்பருமணிக்குலைகுலாய்ச்
சேய்கிழற்செழும்பொனாற்றிரண்டசெம்பழத்ததாய்ப்
போய்கிழற்பொலிந்துவீழ்வபோன்றபூகராசியே. (௧௪)

காந்திநின்றகற்பகநிழற்கலந்துகையறப்
பாய்ந்தெரிந்தபோல்விரிந்துபாரிசாதமோர்செய
வாய்ந்தெரிந்தசெம்பொன்மாடவாயிலாறுகண்கொளப்
போந்தெரிந்தபூன்மரம்புறம்பொலிந்திலங்குமே. (௧௫)

---

* வித்தியாதரஞர்.

மாசில்கண்ணிமைந்தரோடுமங்கைமார்திளைத்தவிற்,
பூசுசாந்தழித்திழிந்தபுள்ளிவேர்புலர்த்தலால்
வாசமூண்டமாருதந்தீண்டவண்டுபாடமாடவாய் ம்
வீசவெள்ளிலோத்திரப்பொதும்பர்பாய்ந்துவிம்முமே. (கசு)

ஆர்ந்துணர்த்தமாலமும்மசோகபல்லவங்களுந்
தார்ந்துணர்த்தசைந்தனதழைத்தலைத்தடாயின
மார்ந்துணர்ப்பொதும்பர்வந்துவைகமற்றதூன்றலாற்
றேந்துணர்ச்சுமந்தொசிந்தசைந்ததேவதாரமே. (கஎ)

தெய்வயாறுகாந்தளஞ்சிலம்புதேங்கொள்பூம்பொழிற்
பௌவமுத்தவார்மணற்பறம்புமௌவன்மண்டப
மெவ்வமாடுமின்னபோலிடங்களின்பமாக்கலாற்
கவ்வையாவதங்கர்க்குமாரனார்செய்கவ்வையே. (கஅ)

மற்றமாநகர்க்குவேந்தன்மானயானைமன்னர்கோ
னற்றமின்றின்றசீரழற்பெயர்ப்புணர்ச்சியான்
முற்றுமுன்சடிப்பெயர்சொன்மூன்றுலகுமான்றெழப்
பெற்றுநின்றபெற்றியான்பிடியாவர்பேசுவார். (கக)

இங்கண்ஞாலமெல்லைசென்றிலங்குவெண்குடைநிழல்
வெங்கண்யானைவேந்திறைஞ்சவென்றியின்விளங்கினன்
கொங்குகொண்டுவண்டறைந்துகுங்குமக்குழம்பளா
யங்கராகமங்கணிந்தலர்ந்தவாரமார்பினன். (உ0)

விச்சையாயமுற்றினன்விஞ்சையார்களஞ்சநின்
றிச்சையாயவெய்தினனேந்துசெம்பொனீண்முடிக்
கச்சையானைமானவேற்கண்ணிலங்குதாரினன்
வெச்செனச்சொலொன்றுமே விடுத்துமெய்ம்மைமேயினன்.

வேறு.

வெற்றிவெண்குடைவிஞ்சையர்வேந்தவ
னொற்றையங்தனிக்கோலுலகோம்புநாட்
குற்றமாயதொன்றுண்டுகுணங்களா
லற்றதீமுயிர்மேலருளாமையே. (உஉ)

செம்பொனீண்முடியான்செருவின்றலை
வெம்புவேலவன்விஞ்சையர்மண்டில
நம்பியாள்கின்றநாளினடுங்கின
கம்பமாடக்கதலிகைபோலுமே. (உடு)

மின்னுவாரநதமநதாரவிளங்கிணர்
துன்னுதொன்முடியானெளிசென்றநாண
மன்னுமாடவர்மேலவளைந்திட்டன
பொன்னனார்புருவச்சிலைபோலுமே (உச)

வெணணிலாச்சுடருந்தனிவெண்குடை
யெண்ணிலாப்புகழானினிதாணடநா
ளுண்ணிலாப்பலவாயுளவாயின
கண்ணனாரொடுகாமக்கலங்களே. (உரு)

மாக்கண்வையமகிழ்ந்துதன்றாணிழ
னோக்கிவைகநுனித்தவனுண்டநாட்
டாக்கணங்கனையார்தமதாயரால
வீக்கப்பட்டனமென்முலைவிம்முமே (உசு)

வடியவானவனுளவும்வாய்களிற்
கடியவாயினகள்ளவிழ்தேமல
ரடியவாய்ப்பயப்பட்டடங்காவலாக்
கொடியவாயினகொங்கவிழ்சோலைய (உஎ)

மாயமாயகின்றான்வரைமார்பிடை
மேயபூமகள்போலவிளங்கினா
ளேவாமுறுவற்றுவர்வாயவள்
வாயுவேகையென்பாள்வளர்கோமபனாள் (உஅ)

பைம்பொற்பட்டமணிந்தகொல்யானையா
னம்பொற்பட்டநறுங்குழலார்க்கெலாஞ்
செம்பொற்பட்டஞ்செறிந்ததிருநுத
லம்பொற்பட்டுடையாளணியாயினாள். (உகூ)

கோவைவாய்க்குழலங்குளிர்கொம்பனாள்
காவிவாணெடுங்கண்ணியக்காவலர்க்
காவியாயணங்காயமிழ்தாயவன்
மேவுநீர்மையளாய்விருந்தாயினாள். (கூ0)

முருக்குவாயவண்முள்ளெயிற்றேர்நகை
யுருக்கவேந்தனொருங்குறைகின்றநாட்
பெருக்கமாகப்பிறந்தனன்பெய்கழ
லருக்ககீர்த்தியென்பானலர்தாரினான். (கூக)

நாமநல்லொளிவேனம்பிநங்கையா
யேமநல்லுலகின்னிழிந்தன்னகைத்
தாமமல்லிகைமாலைச்சயம்பவை
காமவல்லியுங்காமுறத்தோன்றினாள். (கூஉ)

கங்கைநீரனஞான்றகதிரிளந்
திங்களாற்றொழுப்பட்டதுசெக்கர்வான்
மங்கைமார்பிறப்பும்மடமாதரிந்
நங்கையாற்றொழுப்பாடுநவின்றதே. (கூகூ)

வண்டுசூழ்மலர்போன்றளகக்கொடி
கொண்டுசூழ்ந்ததுகுண்டலவாண்முகங்
கெண்டைகண்கிளரும்புருவஞ்சிலை
யுண்டுகொல்லெனவுண்டுமருங்குலே. (கூச)

காதின்மீதணிகற்பகத்தொத்தினை
யூதுதேனிறகூன்றியிருத்தொறும்
போது * தேர்முகத்துப்புருவக்கொடி
நோதலேகொணெசிந்துளவாங்களே. (கூரு)

விண்ணணங்கவிழ்த்துவிளங்கொளி
மண்ணணங்குறவேவளர்வெய்திய
பெண்ணணங்கிதுதோன்றியபின்கொலோ
கண்ணணங்குறுகாரிகைகண்டதே. (கூசா)

* தேர் உவமவுருபு.

கொங்கைபோதருவான்குமிழ்க்கின்றன
வங்கராகமணிந்தகையன்றியு
நங்கைநாகரிகம்பொறைநாண்மதுத்
தங்குவார்கொடியிற்றளர்வித்ததே. (கஎ)

மங்குறேய்வரைமன்னவன்றொல்குடி
நங்கைபோற்றியென்றேத்திநறுங்குழன்
மங்கைமார்பலர்காப்பவளர்ந்துதன்
கொங்கையாற்சிறிதேகுழைவெய்தினள். (கஅ)

வாமவாணெடுநோக்கிமடங்கனி
தூமவார்குழலாடுவெர்வாயிடை
நாமநல்லொளிமுள்ளெயிறுள்ளெழு
காமனுளரும்பிற்கடிகொண்டவே. (கக)

மஞ்சுதோய்வரையாரஞ்சுமாண்பிறு
லஞ்சிலோதிகிளைப்பினகத்தவாய்
விஞ்சைதாம்பணிசெய்தல்விரும்பின
னெஞ்சிலாவகையாலினார்கொண்டவே. (உ0)

நங்கைதோன்றியபின்னைகைவேலினற்
கங்கண்ஞாலமமர்ந்தடிமைத்தொழி
றங்களின்முடியாற்றலேகின்றனர்
வெங்கண்யானைவிளங்கொளிவேந்தரே. (உக)

வேறு.

நங்கைதான் வளர்ந்துகாம நறுமுகைதுணரவைத்து
மங்கையாமாயமெய்துவளரியகின்றநாளுட்
பைங்கண்மால்யானையாற்றுபருவம்வந்திறுத்ததென்றுள்
வங்கவாய்ப்பவழச்செவ்வாய்வயந்தமாதிலகையென்பாள். ()

தேங்குலாமலங்கன்மாலைச்செறிகழன்மன்னர்மன்னன்
பூங்குலாய்விரிந்தசோலைப்பொழிமதுத்திவலைதூவக்
கோங்கெலாங்கமழமாட்டாக்குணமிலார்செல்வமேபோற்
பாங்கெலாஞ்செம்பொன்பூப்பவிரிந்ததுபருவமென்றுள். ()

வேய்ந்திணரொசிந்தசோலைவேனிலான்வென்றியோகைத்
தேந்துணர்கொடுப்பமூழ்கித்தேறல்வாய்நெகிழமாந்தித்
தூங்துணர்துணையோடாடிச்சாறுகொண்டேறுமோரார்
மாந்துணரொசியவேறிமதர்த்தனமணிவண்டெல்லாம். ( )

கடிமலர்க்கணையினான்றன்கழலடிபரவிக்காமர்
படிமலர்த்தும்பியென்னும்பாணபடைதொடர்ந்துபாடக்
கொடிவளர்மகளிர்பூங்கட்குடைந்துநீர்குடிமினென்று
வடிமலர்வள்ளத்தேந்தவாய்மடுத்திட்டவன்றே. (சரு)

அஞ்சுடர்முருக்கினங்கேழணிமலரணிந்துகொம்பர்த்
துஞ்சிடைபெருதுதும்பி துவன்றிமேற்றுகைக்குந்தோற்றஞ்
செஞ்சுடரிலங்குஞ்செந்தீக்கருஞ்சுடர்க்கந்துள்சிந்தி
மஞ்சுடைமயங்குகானமண்டியவகையிற்றன்றே. (சசா)

அந்தழையசோகம்பூத்தவழகுகண்டவாவினேக்கி
வெந்தழற்பிறங்கலென்றுவெருவியமறுவிறும்பி
கொந்தவிழ்ந்துமிழப்பட்டகுளிர்மதுத்திவலைதூவச்
செந்தழற்பிறங்கலன்மைதெளிந்துசென்றடைந்தவன்றே. ( )

மாஞ்சினைகறித்ததுண்டந்துவர்த்தலின்மருங்குநீண்ட
பூஞ்சினைமுருக்கஞ்சோலைப்பூக்கள்வாயாரமாந்தித்
தீஞ்சுவைமிழற்றுகின்றசிறுகுயில்செல்வரேனுந்
தாஞ்சுவைதிரிந்தபின்றைச்சார்பவரில்லையன்றே. (சஅ)

கோவைவண்டூதுகின்றகுரவெனுங்குரைகொண்மாதர்
பாவைகொண்டாடுகின்றபருவத்தேபயின்றகாம
ஞவிகொண்டிவளைக்கைவிட்டகலுமோவென்றுதத்தம்
பூவையுங்கிளியுங்கொண்டுபுலம்பினபொழில்களெல்லாம். ( )

வயந்தமாங்குணர்த்தக்கேட்டேமன்னவன்மக்களோடு
முயர்ந்ததன்னுரிமையோடுமுரிமைகாப்பவர்களோடுங்
கயந்தலைகளிறுந்தேரும் * வையமுங்கவினவேறி
நயந்தனனகரிநீங்கிமனேவனநண்ணினனே. (ருo)

* வையம், சிவிகை.

வேறு.

கோமான்சென்றணைதலுமேகொங்கணிந்தமலர்தூவித்
தேமாநின்றெதிர்கொள்ளச்சிறுகுயில்போற்றிசைத்தனவே
வாமான்றேர்மன்னற்குமங்கலஞ்சொன்மகளிரைப்போற்
றாமாண்டவிளங்கொடிதந்தளிர்க்கையாற்றொழுதனவே. ( )

கடிவாசமலர்விண்டகமழ்தாதுகழலவற்கு
வடிவாசப்பொடியாகவனவல்லிசொரிந்தனவே
புடைவாசங்கொளமாலம்பூங்கவரியெடுத்தெறியக்
குடைமாகமெனவேந்திக்கோங்கம்போதவிழ்ந்தனவே. (௫௨)

கொடியாடுநெடுநகரக்கோமான்றன்குணம்பரவி
யடிபாடுமவர்களெனவணிவண்டுமுரன்றனவே
வடிவாயவேலவற்குமலர்ச்சின்னஞ்சொரிவனபோற்
கொடுவாயகிளிகோதிக்குளிர்நறும்போதுகுத்தனவே. (௫௩)

குரவகத்துக்குடைந்தாடிக்குளிர்நறவங்கொப்பளித்துச்
சுரவண்டினிசைபாடவருவிநீரளைந்துராய்
விரைமலர்ந்ததுணர்வீசிவிரைநாறவருதென்றல்
புரவலன்றன்றிருமுடிமேற்போதலரவசைத்ததே. (௫௪)

இன்னவாறிளவேனிலெதிர்கொள்ளவெழில்யானை
மன்னவாங்கொளிச்செங்கோன்மறவேல்வையகவேந்தன்
றன்னவாமடவாரைத்தானுவந்துபொழில்காட்டி
மின்னவாமிடைநோவவிளையாடவருளினான். (௫௫)

பரியணிந்தவிளம்பிண்டியிணரார்ந்தவிடமெல்லாம்
பொரியணிந்துபுன்குதிர்ந்துபூநாறுந்துறையெல்லாம்
வரிபணிந்துவண்டூதவளர்கின்றவிளவேனில்
புரியணிந்தகுழலீர்நுஞ்செல்வம்போற்பொலிந்ததே. (௫௬)

காரணிந்தகுழலீர்நுங்கைத்தலங்கடகைநோக்கிச்
சீரணிந்தசெழும்பிண்டிதளிரீன்றுதிகழ்ந்தனவே
வாரணிந்தமுலையீர்நும்மருங்குறன்னின்வகைநோக்கி
யோரணிந்தகுருக்கத்தியிளங்கொடித்தாயீன்றனவே. (௫௭)

மாந்தளிரிங்கிவை நுமதுநிறங்கொண்டுவளர்ந்தனவே
யேந்திளந்தீங்குயிலிவை நுஞ்சொற்கற்பானிசைந்தனவே
தேந்தளங்குழலீர் நுஞ்செவ்வாயினெழிலேநோக்கித்
தாந்தளிர்மென்முருக்கினியதாதோடுதகைந்தனவே. (ருஅ)

காவியுஞ்செங்கழுநீருங்கமலமுங்கண்விரிந்துநளி
வாவியுமண்டபமுமெழின்மதனனேயுமருட்டுமே
தூவியருங்கிளியன்னசொல்லீர்நீர் துணையில்லா
ராவியுய்ந்துள்ளாராதலரிதேயிவ்விளவேனில். (ருக)

வேறு.

இன்னணமிளையவர்மருளவீண்டுசேர்
மன்னவன்வயந்தமாட்டருளிமாமணிக்
கன்னவில்புரிசையுட்கடவுட்காக்கிய
பொன்னவிறிருநகர்பூவொடெய்தினன். (சு0)

உலமுறைதோளினனுவகைகூர்ந்தனன்
குலமுறைவழிபடுந்தெய்வக்கோயிலே
வலமுறைவந்தனன்வரலுமாமணிக்
கலமுறைகதிர்நகைக்கபாடம்போழ்ந்ததே. (சுக)

பிணிநிலைபெயர்ப்பனபிறவிதீர்ப்பன
மணிநிலைவிசும்பொடுவரங்களீவன
கணிநிலையிலாத்திறற்கடவுட்டானக
மணிநிலைச்சுடரொளிமலர்ந்துதோன்றவே. (சுஉ)

மெய்ம்மயிரெறிந்தொளிதுளும்புமேனியன்
கைமுகிழ்முடித்தடங்கதழச்சேர்த்தினன்
வெம்மைசெய்வினைத்துகள்விளியவென்றவன்
செம்மலர்த்திருந்தடிசீரினேத்தினன். (சுங)

வேறு.

அணியாதுமொளிதிகழுமாரணங்குதிருமூர்த்தி
கணியாதுமுழுதுணர்ந்தகடவுளென்றறையுமே
கணியாதுமுழுதுணர்ந்தகடவுளென்றறைந்தாலு
மணிஞாலமுடையானையறிவாரோவரியரே. (சுச)

துன்னியவினைப்பகைதுணிக்குந்தொன்மைசா
லின்னுரையமிழ்தெமக்கீமினென்பதா
மன்னநின்மனத்துளதென்னமாமணிக்
கன்னவில்கடகக்கைகதழக்கூப்பினான். (௭௯)

வேறு.

மெய்யறிவிலாமையென்னும்வித்தினிற்பிறந்துவெய்ய
கையறுவினைகள்கைபோய்க்கடுந்துயர்விளைத்தபோழ்தின்
மையுறவுழந்துவாடும்வாழுயிர்ப்பிறவிமாலை
நெய்யுறநிழற்றும்வேலோயினைத்தெனநினைக்கலாமோ. (௮0)

சூழ்வினைதுரப்பச்சென்றுசூழ்வினைப்பயத்தினாலே
வீழ்வினைபிறிதுமாக்கிவெய்துறவிளிந்துதோன்றி
யாழ்துபருழக்குமந்தோவளியற்றவறிவில்சாதித்
தாழ்வினைவிலக்குஞ்சார்வுதலைப்படாவளவுமென்றான். (௮௧)

காதியங்கிளைகள்சீறுங்காமருநெறிக்குங்கண்ணாய்ப்
போதியங்கிழவர்தங்கடியானத்துப்புலங்கொண்டேத்தி
யாதி * யந்தகன்றுநின்றவடிகளேசரணங்கண்டாய்
மாதுபரிடும்பைதீர்க்குஞ்சரணெனப்படுவமன்னா. (௮௨)

மெய்ப்பொருடெரிதல்மற்றப்பொருண்மிசைவிரிந்தஞான
மப்பொருள்வழாதநூலினருந்தகையொழுக்கந்தாங்கி
யிப்பொருளிவைகள்கண்டாயிறைவனால்விரிக்கப்பட்ட
கைப்பொருளாகக்கொண்டுகடைப்பிடிகனபொற்றாரோய். ( )

உற்றடுபிணியுமூப்புமூழுறுதுயருநீக்கிச்
சுற்றிநின்றுலகமேத்துஞ்சுடரொளியுருவந்தாங்கிப்
பெற்றதோர்வரம்பிலின்பம்பிறழ்விலாநிலைமைகண்டாய்
மற்றவைநிறைந்தமாந்தர்பெறப்படுநிலைமைமன்னா. (௮௪)

அருந்துயரறுக்குமாண்பினாரமிர்தவைகண்மூன்றுந்
திருந்தநன்குரைப்பக்கேட்டேதீவினையிருள்கள்போழும்
விரிந்தநல்லறிவின்சோதிவிளங்கவிற்சனங்களெல்லாம்
பரிந்தகங்கழுமத்தேறிப்பவம்பரிந்தவூர்களொத்தார். (௮௫)

* அந்தமென்பதன்விகாரம்.

மன்னியமுனிவன்வாயுண்மணிகொழித்தனையவாகிப்
பன்னியபவங்கடீர்க்கும்பயங்கெழுமொழிகடம்மாற்
றன்னவில்கடகத்தோளான்காட்சியங் * கதிர்ப்புச்சென்றுன்
பின்னவனுரிமைதானும்பெரு † வதமருவிற்றன்றே. (அசு)

வேறு.

மன்னவன்மடமகள்வணங்கிமற்றவ
ரின்னுரையமுதமுண்டெழுந்தசோதியள்
பன்னியொர்நோன்புமேற்கொண்டுபோங்கினாற்
பின்னதுமுடிப்பதோர்பெருமையெண்ணினாள். (அஎ)

முனிவரர்திருந்தடிவணங்கிமூசுதேன்
பனிமலர்விரவியபடலைமார்பினான்
கனிவளர்பொழிலிடைக்கடவுணன்னக
ரினிதினின்வலமுறையெய்தியேகினான். (அஅ)

வாமமேகலையவர்மனத்தில்வார்பொழிற்
காமவேளிடங்கொளவருளிக்கண்ணொளிர்
தாமவேலிளையவர்காப்பத்தாழ்கதிர்
நாமவேனரபதிநகரநண்ணினான். (அகூ)

அகநகரன்ரசரோடரைசன்சென்றபின்
‡ சகதபிநந்தனரென்னுஞ்சாரணர்
மிகநவின்றிறைவனைவணங்கிவிண்ணிடைப்
பகநகுசுடரொளிபடரவேகினார். (௯0)

அழற்கொடியெறித்தொறுஞ்சுடருமாடகூ
நிழற்கொடியதுவெனநிறைந்தகாரிகைக்
குழற்கொடியனையவள்கொண்டநோன்பினா
லெழிற்கொடிசுடர்வதோரியற்கையெய்தினாள். (௯௧)

முகைத்தவார்முல்லையைமுருக்குமெல்லெயிற்
றகைத்தவார்குழலவடன்மையாயினும்
வகுத்தவாறுயர்ந்தனநோன்புமாசிலா
வகத்துமாண்புடையவர்க்கரியதில்லையே. (௯௨)

---

* கதிர்ப்பு, பிரகாசம். † வதம், விரதம்.
‡ சகநந்தனன்-அபிநந்தனன்.

இந்திரவுலகமும்வணக்குமீடுடைத்
தந்திரனோன்பொளிதவழத்தையலாள்
மந்திரநறுநெய்யால்வளர்ந்துமாசிலா
வந்தரவழற்கொடியனையளாயினாள். (௩௩.)

தாங்கருஞ்சுடரொளிசக்கிரவாளமென்
றோங்கிரும்பெயர்கொணோன்புயரநோற்றபின்
தீங்கரும்பனையசொற்சிறுமிதெய்வதக்
காங்கொடிபெருஞ்சிறப்பயர்தன்மேயினாள் (௩௪)

தண்ணவிர்நிலாச்சுடர்தவழுமவ்வரைக்
கண்ணவிர்சென்னிமேற்கடவுட்டானமஃ
தண்ணலங்கோமகளருச்சித்தாயிடை
விண்ணவருலகமும்வியப்பவேத்தினாள். (௩௫)

வேறு.

ஆதியங்கடவுளையருமறைபயந்தனை
போதியங்கிழவனைபூமிசையொதுங்கினை
போதியங்கிழவனைபூமிசையொதுங்கிய
சேதியஞ்செல்வநின்றிருவடிவணங்கினம். (௩௬)

காமனைக்கடிந்தனைகாலனைக்காய்ந்தனை
தேமலர்மாரியைதிருமறுமார்பனை
தேமலர்மாரியைதிருமறுமார்பனை
மாமலர்வண்ணநின்மலரடிவணங்கினம். (௩௭)

ஆரருள்பயந்தனையாழ்துயரவித்தனை
யோரருளாழியையுலகுடையொருவனை
யோரருளாழியையுலகுடையொருவனை
சீரருண்மொழியநின்றிருவடிதொழுதனம். (௩௮)

வேறு.

கருவடிநெடுநெல்வேற்கண்ணியின்னணம்
வெருவுடைவினைப்பகைவிலக்கும்வீறுசான்
மருவுடைமொழிகளாற்பரவிவாமன
திருவடிச்சேடமுந்திகழச்சூடினாள். (௩௯)

வானுயர்கடவுளேவயங்குசேவடித்
தேனுயர்திருமலர்ச்சேடங்கொண்டபின்
மானுயர்நோக்கியர்பரவமங்கைதன்
கோனுயர்வளநகர்க்கோயின்முன்னினான். (௧00)

வெஞ்சுடர்வேலவற்குணர்த்திமெல்லவே
பஞ்சுடைச்சேவடிபரவச்சென்றுதன்
னஞ்சுடர்மெல்விரல்சிவப்பவாளியற்
செஞ்சுடரங்கையிற்சேடநீட்டினாள். (௧0௧)

அல்லியின்ரவவண்டிரியவாய்மலர்
வல்லியின்வணங்கியமகளைமன்னவன்
முல்லையஞ்சிகழிகைமுச்சிமோந்திவை
சொல்லியதொடங்கினான்சுடரும்வேலினான். (௧0௨)

தேந்துணர்பலவுளவேனுஞ்செங்குழை
மாந்துணர்வயந்தனைமலரத்தோன்றுமே
பூந்துணரோதிநீபிறந்துபொன்செய்தார்
வேந்துவந்திறைஞ்சயான்விளங்குகின்றதே. (௧0௩)

கங்கைநீர்பாய்ந்துழிக்கடலுந்தீர்த்தமா
மங்கணீருலகெலாமறியப்பட்டது
நங்கைநீபிறந்ததற்பின்னைநங்குடி
வங்கணீர்வரைப்பெலாம்வணக்கப்பட்டதே. (௧0௪)

போதுலாந்தாமரைபூத்தபொய்கையைத்
தீதுலாங்கீழுயிர்தீண்டச்செல்லல
மாதுலாமடந்தைநீபிறந்திம்மண்டில
மேதிலாரிடைதிறமிகந்துநின்றதே. (௧0௫)

வானகத்திளம்பிறைவளரவையகம்
மீனகத்திருள்கெடவின்பமெய்துமே
கானகக்குழலிநீவளரநங்குடி
தானகத்திருள்கெடத்தயங்குகின்றதே. (௧0௬)

கண்பகர்மல்லிகைகமழக்காதலாற்
சண்பகத்தனிவனந்தும்பிசாருநீ
பெண்பகர்திருவனுய்பிறந்துநங்குடி
மண்பகருலகெலாமகிழச்செல்லுமே. (௧0௭)

கொவ்வையந்துவரிதழ்க்கோலவாயவட்
கிவ்வகையணியனகூறியீண்டுநும்
மவ்வைதன்கோயில்புக்கடிசிலுண்கென
மவ்வலங்குழலியைமன்னனேயினன். (௧0௮)

பல்கலம்பெரியனவணியிற்பாவைத
னல்குனேமெனச்சிலம்பணிந்துமெல்லவே
செல்கவென்றிருமகளென்றுசெம்பொனன்
மல்கியமுடியினன்மகிழ்ந்துநோக்கினன். (௧0௯)

மண்ணருங்கலமெலாம்வலிதின்வவ்வினும்
விண்ணருங்கலமெலாம்விதியினெய்தினும்
பெண்ணருங்கலமிதுபெறுதன்மானுடர்க்
கெண்ணருந்தகைத்தெனவிறைவனெண்ணினன். (௧௧0)

மையணிவரையின்வாழ்மன்னர்தொல்குடிக்
கையணிநெடுநல்வேற்காளைமார்களு
ணெய்யணிகுழலிவட்குரியநீர்மையான்
மெய்யணிபொறியவனெவன்கொல்வீரனே. (௧௧௧)

பொலங்கலக்குரியவாம்பொருவின்மாமணி
யிலங்கலமென்னலஃயஞ்சேர்த்தினுங்
குலங்கலந்தில்வழிக்குரவர்கூட்டினு
மலங்கலங்குழலியரன்றென்கிற்பவோ. (௧௧௨)

* அந்தைதாமுறுவதுகருதியாருயிர்த்
தந்தைதாயென்றிவர்கொடுப்பிற்றையலார்
சிந்தைதாமிலாதவர்திறத்துஞ்செவ்வனே
நொந்துதாம்பிரிந்துரைநொடியவல்லரோ. (௧௧௩)

---

* அந்தமென்பதன்விகாரம்; அழகு என்னும்பொருட்டு.

காதலாலறிவதுகாமங்காதலே
யேதிலாருணர்வினுலெண்ணலாவதன்
ஞூதலான்மாதராடிறத்தினுணைநூ
லோதினருரைவழியொட்டற்பால்தே. (௧௧௪)

தன்னுணர்பொறிபிறர்தங்கண்கூட்டென
வின்னணமிருவகைத்திறைவர்வாழ்க்கையே
தன்னுணர்பொறிப்புலந்தன்னினும்பிறி
தின்னணமியற்றுகென்றமைச்சரேவுவார். (௧௧௫)

தண்ணியதடத்தவேயெனினுந்தாமரை
விண்ணியல்கதிரினல்விரியும்வேந்தரும்
புண்ணியப்பொதும்பரேபுரிந்துவைகினும்
கண்ணியபுலவரால்லர்தல்காண்டுமே. (௧௧௬)

மாலமர்நெடுங்கடன்மதலைமாசிலாக்
காலமைந்தொழுகுமேற்கரையுங்காணுமே
நூலவர்நுழைவொடுநுழைந்துசெல்லுமேல
வேலவரொழுக்கமும்வேலைகாணுமே. (௧௧௭)

ஒன்றுநன்றெனவுணர்ந்தொருவன்கொள்ளுமே
லன்றென்வொருவனுக்கறிவுதோன்றுமே
நின்றமெதான்றுண்டினீதிநூலினோ
டொன்றிநின்றவருரையுலகமொட்டுமே. (௧௧௮)

அந்தணரொழுக்கமுமரசர்வாழ்க்கையு
மந்திரமில்லையேன்மல்குமாண்பில
விந்திரனிறைமையுமீரைஞ்ஞூற்றுவர்
தந்திரக்கிழவர்கடாங்கச்செல்லுமே. (௧௧௯)

என்றுதன்மனத்தினெண்ணியீண்டுசீர்
நின்றநூற்கிழமையினீதிமாக்களை
யொன்றிநீர்தருகெனவுழைக்குற்றேவலா
சென்றவர்க்கருளிதுவென்றுசெப்பினுர். (௧௨௦)

இரதநூபுரச்சருக்கம் முற்றிற்று.

ஆ. விருத்தம் - ௨௩௮.



ஐந்தாவது

# மந்திரசாலைச்சருக்கம்.



செஞ்சொற்கோனத்தெரியலானருளிச்செய்தது
தஞ்செவிக்கிசைத்தலுந்தண்ப்பில்கேள்வியா
ரஞ்சினர்நடுங்கினராகியாயிடை
நஞ்சிவர்வேலினான்பாதநண்ணினார். (க)

உள்ளுணின்றொலிபுறப்படாததொண்சிறைப்
புள்ளுமல்லாதவும்புகாதநீரது
வெள்ளிவெண்விளிம்பினால்விளங்குவேதிகை
வள்ளறன்மந்திரசாலைவண்ணமே. (உ)

ஆங்கமாநதமைச்சரோடரைசர்கோமகன்
பூங்கமழ்மண்டபம்பொலியப்புக்கபின்
வீங்கொளிமணிக்குழைமிளிர்ந்துவில்விட
வீங்கிவைமொழிந்தனனிறைவனென்பவே. (ங)

வேறு.

மண்ணியவளாகங்காக்குமன்னவர்வணக்கலாகாப
புண்ணியரேனுமபுலவராற்புகலப்பட்ட
நுண்ணியநூலினன்றிநுழைபொருளுணர்தலேற்று
ரெண்ணியதுணிந்துசெய்யுஞ்சூழ்ச்சியுமில்லையன்றே

வாலவளைபரவிமேயும்வளர்திரைவளாகமெல்லாங்
கோலவளைவுறமற்காக்குங்கொற்றவனெடியனேனு
மேல்விளைபழியும்வெய்யவினைகளும்விலக்கிநின்றார்
நூல்வினைபுலவரன்றேநுணங்குபோதணங்குதாரீர். (ரு)

சுற்றுநின்றெரியுஞ்செம்பொன்மணிமுடிசுடரச்சூடி
வெற்றிவெண்குடையினீழல்வேந்தன்வீற்றிருக்குமேனு
மற்றவன்மனமுங்கண்ணும்வாழ்க்கையும்வலியுஞ்சாலப்
மற்றமிலர்களுங்கோலுமாபவரமைச்சரன்றே. (சு)

வீங்குநீருலகங்காக்கும்விழுநுகமொருவனாலே
தாங்கலாந்தன்மைத்தன்றுதளையவிழ்தயங்குதாரீர்
பாங்கலார்பண்ணியச்சூழுநூல்வர்பாகமாகப்
பூங்குலாமலங்கன்மாலைப்புரவலன்பொறுக்குமன்றே. (எ)

அற்றமின்றுலகங்காக்குமருந்தொழில்புரிந்துநின்றான்
கற்றவர்மொழிந்தவாற்றுக்கழிப்பதுகடனதாகு
மற்றவற்குறுதிநோக்கிவருபழிவழி * கண்டேரச்
செற்றவர்ச்செருக்குஞ்சூழ்ச்சிதெருண்டவர்கடவன்றே.( )

செறிந்தவர்தெளிந்தநூலார்சிறந்தவைதெரிந்துசொன்னா
லறிந்தவையமர்ந்துசெய்யுமமைதியானரசனாவான்
செறிந்தவர்தெளிந்தநூலார்சிறந்தவைதெரிந்துகூறி
யறிந்தவையியற்றுகிற்குமமைதியாரமைச்சராவார். (௯)

வாள்வலித்தடக்கைமன்னர்வையகம்வணக்கும்வாயி
றோள்வலிசூழ்ச்சியென்றாங்கிருவகைத்தொகையிற்றாகு
மாள்வலித்தானையார்கட்காதியதழகிதேனுங்
கோள்வலிச்சீயமொப்பீர்சூழ்ச்சியேகுணமதென்றான். (௧௦)

ஊழ்வரவன்னதேனுமொருவகைக்கருமமெல்லாஞ்
சூழ்பவர்சூழ்ந்துசூழுஞ்சூழ்ச்சியுட்டோன்றுமன்றே
யாழ்பகர்ந்தினியதீஞ்சொலமிர்தனாரேனுஞ்சூழ்ச்சி
வாழ்பவர்வல்லராயின்மன்னராய்மலர்பவன்றே. (௧௧)

ஆற்றலின்றேதப்பட்டவரசர்கட்கவற்றின்மிக்க
வாற்றான்சூழ்ச்சியென்பதாதலாலதனையாயு
மாற்றலாரமைச்சராகவமைச்சரோடமர்ந்துசெல்லு
மாற்றலானரசனாகினரியதொன்றில்லையன்றே. (௧௨)

வடந்திகழ்முலையினார்தங்காமத்தின்மதர்த்தமன்னர்க்
கடைந்தவாமாண்புமாங்கொன்றில்லையவ்வரசர்வாழ்க்கை
கடந்தவழ்கடாத்தவேழங்களித்தபின்கல்விமாணா [மே.
மடந்தவமொருவன்மேல்கொண்டன்னதோர்வகையிற்றா

சுந்தரச்சுரும்புண்கண்ணிச்சூழ்கழலரசர்வாழ்க்கை
தந்திரமறிந்துசூழ்வான்சூழ்ச்சியுந்தமையல்வேண்டு
மந்திரம்வழுவுமாயில்வாளெயிற்றரவுகாய்ந்து
தந்திரந்தப்பினாற்போற்றன்னையேதபுக்குமன்றே. (௧௪)

* கண்டௌஷதமெனிற் சூழ்ச்சித் தெருண்டவரென்க.

எடுத்தன்னிலங்குசாதியெழிலொடுதிகழுமேனு
மடுத்தனநிறத்தனுகுமணிகிளர்பளிங்குபோல
வடுத்தவமலர்ந்துநுண்ணூன்மதியவர்வினையின்மாட்சி
கொடுத்தவாநிலைமைமன்னர்குணங்களாக்கொள்பவன்றே.()

மன்னுநீர்வளாகமெல்லாம்வணக்குதல்வல்லீராய
பன்னுநூற்புலவீர்முன்னர்ப்பலபகர்ந்துரைப்பதென்னை
யென்னைநீரிறைவனுக்கியிராப்பகலியற்றவன்றே
யின்னநீரின்பவெள்ளமியைந்தியானுயர்ந்ததென்றான். (கசு)

கொங்குடை வயிரக்குன்றின் கொழுஞ்சுடர்விளக்கிட்டாங்
நங்குடிவிளங்கவந்தநங்கைதன்னலத்திற்கொத்தான் [கு
றங்குடிவிளங்கநின்றதன்மையானெவன்கொலென்றான்
சங்குடைந்தனையதாழைத்தடமலர்த்தொடையலானே.

இறையிவைமொழியக்கேட்டேயிருந்தவரிறைஞ்சியேத்தி
யறைகழலாவத்தானேயணிமுடியரசரேறே
நிறைபுகழுலகங்காத்துநிலாகநின்னிறைமையென்று
முறைமுறைமொழியலுற்றுமுன்னியமுகத்தரானா. (கஅ)

பணிந்துமற்றேனையாராபாங்கிருப்பநூலபலவுநோக்கித்
துணிந்துதனபுலமைதோன்றச்சுச்சுதன்சொலலலுற்றா
னிணைந்துநினறுலவுந்துமபியிடையிடையிருண்டுதோனற
வணிந்துநின்றலருமபைந்தாரணிமணிமுடியினுற்கே (கக)

பொழிற்கதிரபரப்பிவந்துபொங்கிருள்புதையநூறுங
தொழிற்கதிக்கடவுடோன்றச்சூரியகாந்தமென்னு
மெழிற்கதிர்ப்பிறங்கல்வட்டமெரியுமிழ்ந்திடுவதன்றே
யழற்கதிரிலங்குஞ்செவ்வேலதிர்கழலரசர்கோவே. (உ0)

கோணைநூற்றடங்கமாட்டாக்குணமிலார்குடர்கணைய
வாணைநூற்றடங்கக்காக்குமரசர்தமருளினாலே
பேணுநூற்புலவர்மாண்டும்பெருகுவதுருவத்தார்மேற்
பூணுநூற்பொலிந்துதோன்றும்பொன்வரைமார்பவென்றான்.

சூழ்கதிர்த்தொழுதிமாலைச்சுடர்ப்பிறைக்கடவுடோன்றித்
தாழ்கதிர்சொரிந்தபோழ்திற்சந்திரகாந்தமென்னும்
வீழ்கதிர்விளங்குவட்டம்வெள்ளநீர்விரியுமன்றே      [லோய்.
போழ்கதிர் பொழிந்துபொங்கிப் புலானிணம் பொழியும்வே

கண்ணளித்துலகமெல்லாங்கவின்பெறக்காவல்பூண்டு
தண்ணளித் * தயங்குஞ்செங்கோற்றரவர்தவத்தினாலே
மண்ணளித்தினியநூலோர்மந்திரமலருமென்றன்
விண்ணளித்திலங்கும்வெள்ளிவிரிந்தவெண்குடையினாற்கே.

கண்ணியகடாத்தவேழங்கவுளினானுரிஞப்பட்டுத்
தண்ணியதன்மைநீங்காச்சந்தனச்சாதிபோலப்
புண்ணியக்கிழவர்கீழோர்பிழைத்தனபொறுப்பவாயின்
மண்ணியல்வளாகமெல்லாம்வழிநின்றுவணங்குமன்றே.      ()

நிறந்தலைமயங்கவெம்பிநெடுங்கடல்சுடுவதாயி
னிறந்தலைபெருகுநீர்வாழுயிர்க்கிடரெல்லையுண்டோ
மறந்தலைமயங்குசெவ்வேன்மன்னவன்வெய்யனாயி
னறந்தலைமயங்கிவையமரும்படருழக்குமன்றே.      (உரு)

மண்குளிர்கொள்ளக்காக்குமரபொழிந்தரசர்தங்கள்
விண்குளிர்கொள்ளவோங்கும் வெண்குடைவெதும்புமாயிற்
கண்குளிர்கொள்ளப்பூக்குங்கடிகயத்தடமுங்காவுந்
தண்குளிர்கொள்ளுமேனுந்தான்மிகவெதும்புமன்றே. (உசு)

தீயினம்படர்ந்துவேந்தன்செறுவதேபுரியுமாயிற்
போயினம்படர்ந்துவாழும்புகலிடமின்மையாலே
வேயினம்படர்ந்தசாரல்வேங்கையைவெருவிப்புல்வாய்
மாயினம்படர்ந்ததெல்லாம்வையகம்படருமன்றே.      (உஎ)

மறந்தலைமயங்கிவையத்தொருவரையொருவர்வாட்ட
விறந்தலையுறுமைநோக்கியின்னுயிர்போலக்காக்கு
மறந்தலைநின்றவேந்தரடிநிழலன்றியார்க்குஞ்
சிறந்ததொன்றில்லைகண்டாய்திருமணிதிகழும்பூணாய்.      ()

* எதுகை நோக்கிய விரித்தல் விகாரம்.

ஒருமையாற்றுன்ப்மெய்துமொருவனையுமையாலே [கி
திருமையான்முயங்குஞ்செல்வச் செருக்கொடுதிளைப்பநோக்
யிருமையுமொருமையாலேயியற்றலினிறைவன்போலப்
பெருமையையுடையதெய்வம்பிறிதினியில்லையன்றே. (௨௯)

கண்ணெனப்படுவமூன்றுகாவலர்கல்விகாமர்
விண்ணினைச்சுழலவோடும்வெய்யவனென்னும்பேர
ரெண்ணினுட்டலைக்கண்வைத்தகண்ணஃதில்லையாயின்
மண்ணினுக்கிருளைநீக்கும்வகைபிறிதில்லைமன்னு. (௩0)

குடிமிசைவெய்யகோலுங்கூற்றமும்பிணியுநீர்சூழ்
படிமிசையில்லையாயின்வானுள்யார்பயிறுமென்பார்
முடிமிசைத்திவளவேந்தர்முறைமுறைபணியவிம்மி
யடிமிசைசிலம்புஞ்செம்பொனதிர்கழலரசரேறே. (௩௧)

தண்சுடர்க்கடவுள்போலத்தாரகைக்குழாங்கடாமே
விண்சுடர்விளக்கமாகவிளங்கலவேந்தர்போல
மண்சுடர்வரைப்பின்மிக்கமக்களுமில்லைகண்டாய்
கண்சுடர்கனலச்சீறுங்கம்ழ்கடாக்களிற்றுவேந்தே. (௩௨)

அருந்தவமரைசபாரமிரண்டுமேயரியதம்மை
வருந்தியுமுயிரையோம்பிமனத்தினைவணக்கல்வேண்டுந்
திருந்தியவிரண்டுந்தத்தஞ்செய்கையிற்றிரியுமாயிற் [ய்.
பெருந்துயர்விளைக்குமன்றே பிறங்குதார்நிறங்கொள்வேலோ

அந்தரந்திரியுஞ்செய்கையமரர்தம்மரசுவேண்டி
யிந்திரவுலகங்காணுநெறியுமவையாவையென்னின்
மந்திரம்வழாதவாய்மைமாதவமுயறலன்றேற்
றந்திரந்தழுவிச்செங்கோறளர்விலன்றரித்தலென்றான். (௩௪)

மரந்தலையிணங்கிவான்றோய்மணிவளர்வயிரக்குன்ற
முரந்தனகுழுமவேந்தியுய்த்திடுமொருவர்க்கேனு
மருந்தவமரைசபாரமவைபொறையரிதுகண்டா
யிரந்தவர்க்கீட்டப்பட்டவிருநிதிக்கிழவவென்றான். (௩௫)

உரிதனினொருவன்செய்தவூழ்வினையுதயஞ்செய்து
விரிதலினதனதுண்மைவிளங்கினாற்போலவேந்தர்
கருதியகருமஞ்சூழ்ச்சிப்பயத்தினாற்கருதும்வண்ண
மெரிதவழ்ந்திலங்கும்வேலோ யெண்ணுவதென்னையென்றா [ன்.

பஞ்சிகொன்றாட்டப்பட்டமாதுளம்பருவவித்து
மஞ்சினின்றகன்றசாகைமலரிடைவடிவுகாட்டு
மஞ்சினின்றனலும்வேலோய்சூழ்ச்சியுமன்னதேயால் [ய்.
வெஞ்சொலொன்றுரைக்கமாட்டா விடுசுடர்விளங்குபூணோ

கொற்றவேன்மன்னர்க்கோதுங்குணமெலாங்குழுமிவந்து
முற்றுநின்றுருவுகொண்டமூர்த்திநின்முன்னர்யாங்க
ளிற்றெனவுரைக்குநீதியோதுநூலெல்லைகாணக்
கற்றவர்முன்னைபேணோர்கதையொத்துக்காட்டுமன்றே. ( )

தேன்மகிழ்தெரியலாய்நின்றிருக்குலந்தெளிப்பவந்த
பான்மகிழ்ந்தனையதீஞ்சொற்பவழவாய்ப்பரவையல்குல்
வான்மகிழ்மணங்கொண்மேனியணங்கினுக்குரியகோனை
யான்மகிழ்ந்துணர்த்தக்கேட்பி னிடைசிறிதருளுகென்றான்.

வேறு.

மஞ்சிவர்மால்வரைச்சென்னிவடமலை
விஞ்சையர்வாழும்விழாவணிநல்லுல
கஞ்சியல்வில்லோயதுமற்றமரர்க
டுஞ்சியலில்லாத்துறக்கமனைத்தே. (சo)

மண்ணியல்வாழ்நர்க்கும்வானுலகொப்பது
புண்ணியமில்லார்புகுதற்கரியது
கண்ணியகற்பகக்கானங்கலந்தது
விண்ணியலின்பம்விரவிற்றினிதே. (சக)

எல்லாவிருதுவுமீனும்பொழிலின
தெல்லாநிதியுமியன்றவிடத்தின
தெல்லாவமரர்கணமுமிராப்பக
லெல்லாப்புலமுநுகர்தற்கினிதே. (சஉ)

பொன்னிதழ்த்தாமரைபொய்கையுட்பூப்பன
பொன்னிதழ்த்தாமம்பொழில்வாயவிழ்ப்பன
பொன்னிதழ்த்தாதுமணிநிலம்போர்ப்பன
பொன்னிதழ்த்தாதுதுகளாய்ப்பொலிவன. (௪௩)

கானங்களாவனகற்பகங்காமுகர்
தானங்களாவனசந்தனத்தாழ்பொழி
ஞானங்களாவனநாவிநறுவிரை
வானங்களாம்வகைமற்றுமொன்றுண்டோ. (௪௪)

மணிக்கற்பட்டாரணமண்டபஞ்செம்பொன்
குணிக்கப்படாதகுளிர்புனனீத்தங்
கணிக்கப்படாதகதிர்மணிக்குன்றம்
பிணிக்கப்படாதவர்வாய்மையைப்பேற்றால். (௪௫)

ஆங்கதன்மேலவறுபதுமாநகர்
தீங்கதிர்மண்டிலஞ்சேர்ந்துதிளைப்பன
நீங்கருமாநகர்தம்முணிலாவிரிந்
தோங்கியசூளாமணியினொளிர்வது. (௪௬)

மரத்தினுமண்ணினுமாடங்கள்யாவுந்
திருத்தினவில்லதுசெம்பொனுலகிற்
புரத்தினைவெல்வதுபொன்னகர்பூந்த
ணிரத்தினபல்லவமென்பதொன்றுண்டே. (௪௭)

வளைத்தகைமங்கையர்மைந்தரொடாடி
முளைத்தெழுகாமமுடிவிலராகித்
திளைத்தவினன்னகர்தெய்வவுலகங்
களித்திழிந்தன்னதோர்கவ்வையுடைத்தே. (௪௮)

ஆடவர்கொம்பனையாரிளையாடவர்
பாடகமெல்லேர்பரவியசீறடி
தோடலர்தொங்கலங்குஞ்சியுட்டோயவைத்
தூடலுணர்த்துந்தொழிலதொன்றுண்டே. (௪௯)

சிலைத்தடந்தோளிவர்செஞ்சாந்தணிந்த
மலைத்தடமார்பிடைமைந்தர்க்கண்ணார்
முலைத்தடம்பாயமுரிந்துமுடவண்
டிலைத்தடத்தேங்குமிரக்கமுளதே. (௫0)

வனைந்தனபோலும்வளர்ந்தமுலையா
ரினைந்துதங்காதலரின்பக்கனிகள்
கனிந்துகளித்தகங்காமங்கலந்துண
முனிந்துபுருவமுரிவபலவே. (௫௧)

செவ்வாய்ப்பவழக்கடிகைத்திரளெனு
ம்வ்வாயமிர்தமுண்டார்பலராவ
ரொவ்வாதிளைப்பரொசிந்தனரோடரி
மைவாணெடுங்கண்மலக்கம்பெரிதே. (௫௨)

வளர்வனபோலுமருங்குல்கணைவத்
தளர்வனபோலவர்தாமக்குழன்மேற்
கிளர்வனபோதிளவாசங்கிளைத்துண்
டுளர்வனபோதருமூதையுளதே. (௫௩)

பஞ்சாரகலல்குற்பாவையர்பூண்முலைச்
செஞ்சாந்தணிந்துதிகழ்ந்தமணிவண்டு
மஞ்சார்பொழிலுள்வளர்பெடைகண்டதற்
கஞ்சாவொளிக்குமயலததுவே. (௫௪)

பாசிலைமென்றழைப்பள்ளியுட்பாவையர்
தூசினுணின்றுசொரிமணிக்கோவையும்
பூசினசாந்தும்பிணையலும்போர்த்திடை
மூசினவண்டினமொய்பொழிலெல்லாம். (௫௫)

காமவிலேகையுங்கற்பகமாலையுஞ்
சேமமணிநகைச்செப்பினுளேந்துபு
தூமக்குழலவர்தூதுதிரிபவர்
தாமத்தெருவிடைதாம்பலர்கண்டாய். (௫௬)

தாமத்தொடையல்பரிந்துதழுவிய
வாமக்கலங்கள்புலம்பமகளிர்கள்
காமக்கடலைக்கலக்குங்கழலவர்
தீமைத்தொழிலவைதேர்ந்துளவன்றே. (ருஎ)

வே று.

பொன்னகர்தன்னையாள்வான்புரந்தரனனையமாண்பின்
மன்னவன்மயூரகண்டன்மற்றவன்றேவிமாருண்
மின்னவிர்மருங்குனீலாங்கனையெனவிளங்கினின்றா
ளன்னவள்புதல்வன்கண்டாயச்சுவக்கிரீவனென்பான். (ருஅ)

அதிர்கழலலங்கல்வேலோயச்சுவக்கிரீவனென்னும்
பொதியவிழ்பொலங்கொள்பைந்தார்ப் புரவலன்றிகிரியெய்தி
மதிதவழ்குன்றமெல்லாம்வணக்கியபின்றைமண்ணுங்
கொதிதவழ்வேலினான்றன்குறிப்பொடுகூடிற்றன்றே. (ருகூ)

சுற்றமாண்புடைமையாலுஞ்சூழ்கதிர்த்திகிரியாலுங்
கொற்றமாங்குடைமையாலுங்குலத்ததுபெருமையாலுங்
கற்றமாண்விஞ்சையாலுங்கருதியமுடித்தலாலும்
வெற்றிவேலவனோடொப்பார்வேந்தர்மற்றில்லைவேந்தே. ()

தம்பியர்நீலத்தேரோன்றயங்குதார்நீலகண்டன்
வம்புயர்மகரப்பேழ்வாய்வயிரமாகண்டன்வண்டுங் [டாய்
தும்பியுந் துவைக்குந்தொங்கற் சுகண்டனென் றிவர்கள்கண்
வெம்பியவுருமுத்தீயுங்கூற்றமும்வெதுப்புநீரார். (சுக)

படையினதமைதிசூழின்பகுதியென்றிவற்றின்பன்மாண்
புடையவரவனோடொப்பாரொருவர்மற்றில்லைவேந்தே
விடயமொன்றின்றிவென்றவிடுசுடராழியானு
நடையவனுவப்பின்ஞாலம்பிறருழைநடப்பதென்றான். ()

ஆணைநூலமைச்சனவனரிமஞ்சுவவனதாற்றல் [லான்
கோணைநூற் பவரைத்தன்சொற் குறிப்பின்மேனிறுத்தவல்
பேணுநூனிமித்தம்வல்லான்சதவிந்துபெரியநீரான்
காணுநூற்புலமையாருங்காண்பவரில்லைகண்டாய். (சுங)

தன்னலாற்றெய்வம்பேணார்சார்ந்தவர்தானுஞ்சார்ந்தார்க்
கென்னலாஷிவருக்குற்றாரில்லையென்றிரங்குநீரான்
பொன்னெலா * நெதியமாரப்பொழிந்திடுகின்றபூமி
மன்னெலாமுவனையன்றிவணிங்குவ்திலைமன்னா. (சுச)

குளிறும்வாளுழுவையன்னான்குமாரகாலத்துமுன்னே
களிறுநூறெடுக்கலாகாக்கற்றிரள்கடகக்கையா
லொளிறுவாளுழவனேந்தியுருட்டிவட்டாடவன்றே
வெளிறிலாக்கேள்வியானைவிஞ்சையரஞ்சியிட்டார். (சுரு)

முற்றவமுடைமையாலேமூரிநீருலகமெல்லா
மற்றவனேவல்கேளாமன்னவரில்லைமன்னா
செற்றவனலிதலஞ்சித்திறைகொடுத்தறிவித்தன்றே
நற்றவநங்கைதோன்றுமுன்னநாமண்டதெல்லாம். (சுசு)

ஈங்குநங்குலக்கொம்பொப்பாள்பிறந்தபினினியனாகித்
தேங்கமழலங்கல்வேலோன்றிறைகொளலொழிந்துசெல்லு
மாங்கவன்றிறங்களெல்லாமறிதியாலாணைவேந்தே
தீங்கியானுணர்த்திற்றுண்டோதிருவடிதெளிகவென்றான். ()

மற்றவற்குரியநங்கையென்பதென்மனத்திற்றோடு
முற்றுவந்துளதுசாலவுறுதியுமுடையதொக்கும்
வெற்றிவேல்விஞ்சையாருமஞ்சுவர்மின்செய்பைம்பூட் [ன்.
கொற்றவகுறிப்புண்டாயிற் கொடுப்பது குணங்கொலென்று

சுடர்மணிமருங்குற்பைங்கட்சுளிமுகக்களிநல்யானை
யடர்மணிக்கதிரும்பைம்பொன்மாலையுமணிந்தசென்னித்
தொடர்மணிப்பூணினாற்குச்சுச்சுதன்சொல்லக்கேட்டே
படர்மணிப்படலைமாலைப்பவச்சுதன்பகரலுற்றான். (சுகூ)

வேறு.

நூலாராய்ந்துநுண்பொறிகண்ணுநொடிவல்லான்
மேலாராயுமேதைதமையாலுமிகநல்லான்
றோலாநாவிற்சுச்சுதன்சொல்லும்பொருளெல்லாம்
வேலார்கையாய்மெய்ம்மையவன்றேமிகையாலும். (எ௦)

---

* நெதியம், திறை.

தேனும்வண்டுந்தீதிலபாடுஞ்செறிதாரோ
யானுங்கண்டேனச்சுவகண்டன்றிறமீதே
மானங்கொண்டமாரதர்போரேறனையாயோ
ரூனங்கண்டேனெட்டினுமொட்டேனுரைசெய்கேன். (எக)

மானக்கோதைமாசறுவேலோய்வரவெண்ணி
நானக்கோதைநங்கைபிறந்தநாளானே
வானக்கோளின்மாண்புணர்வார்கண்மறுவில்லாத்
தானக்கோளிற்சாதகவோலைதலைவைத்தார். (எஉ)

காவிப்பட்டங்கள்விரிகானற்கடனுடன்
மேவிப்பட்டம்பெற்றவன்காதன்மேயானு
லேவிப்பட்டமீந்தவரெல்லாமினிதேத்துந்
தேவிப்பட்டஞ்சேர்பவளன்றேதிருவன்னாள். (எங)

நங்கோனங்கைநன்மகனுகினிவந்தான்
றங்கோனேவத்தானிளவேந்தாய்த்தலைநின்று
னெங்கோனென்றேயிவ்வுலகேத்துமியறன்னாற்
செங்கோலின்பஞ்சேர்பவனன்றேசெருவேலோன். (எச)

என்றாலன்றச்சாதகவோலையெழுதிற்றாற்
குன்றாவென்றிக்குன்றுறழ்யானைக்கொலைவேலோய்
நன்றாநங்கைக்கொன்றியகாமப்பருவத்தா
னின்றானன்றேயின்றுணையாகுங்கிலமேயான். (எரு)

ஆழிக்கோமானச்சுவகண்டனவனுக்கே
யூழிக்காலமோடினவென்னுமுரையாலுந்
தாழிக்கோலப்போதனகண்ணாடகுவாளோ
சூழிக்கோலச்சூழ்களியானைச்சுடர்வேலோய். (எசு)

கண்ணார்கோதைக்காமருவேய்த்தோட்கனகப்போர்
மண்ணார்சீர்த்திச்சித்திரையென்னுமடமாதின்
றெண்ணாரின்பக்காதலியாகியியல்கின்றாள்
பெண்ணார்சாயல்பெற்றனடேவிப்பெறுபட்டம். (எஎ)

வானேருட்குமக்களோரைஞ்ஞூற்றுவர்தம்மு
ளீனேருட்குமிரத்தின்கண்டனெனநின்ற
னேனேருட்குமின்னிளவேந்தாயியல்கின்ற
ஞானேருட்குமொண்சுடர்நஞ்சூற்றுளிவேலோய். (எஅ)

அன்னனையினுதலினன்றேயவனல்லா
லென்னனுவானென்றனன்வேந்தனெனலோடு
மின்னனின்னனிந்நகராள்வானிவனன்றே
யன்னனன்னாற்கந்நகரெல்லாமறிவித்தான். (எகூ)

மையார்சென்னிமால்வரையாளும்வயமொய்ம்பிற்
கையாரெஃகிற்காளைகடம்முட்கமழ்கோதை
மெய்யாமேவுமேதகுவானைமிகவெண்ணிக்
கொய்யாவிம்முங்கொங்கலர்தாரோய்கொடுவென்றான். (அ0)

வேறு.

கேடிலிமமலையின்மேலாற்கின்னரகீதமாளுந்
தோடிலங்குருவத்தொங்கற்சுடர்முடியரசன்செம்மல
பாடலவண்டிமிரும்பைந்தாரப்பவனஞ்சனென்பபாரித்
தாடலம்புரவிவல்லவரசிளங்குமரனென்றான். (அக)

அளந்தறிவரியசெய்கையமிழ்தமாபதியையாளும
வளந்தருவயிரப்பைம்பூண்மன்னவன்சிறுவன்வண்டார்
விளங்கொளியுருவத்திண்டோள்வேகமாரதனையன்றே
யிளங்களியுழுவையாகவிருநிலமபுகழ்வதென்றான். (அஉ)

வேழத்தாற்பொலிந்தசோலைமேகமாபுரம்தாளு
மாழித்தேரரவத்தானையரசர்கோன்புதலவனந்தாரப்
பாழித்தோளுருவச்செங்கட்பதுமத்தேர்ப்பெயரினானை
யூழித்தீயென்றுவேந்தருட்குவதுருவத்தாரோய். (அங)

இலங்கொளிமாடவீதியிரத்தினபுரம்தாளு
முலங்கெழுவயிரத்திண்டோளொளிமுடியரசன்செம்ம
லலங்கலம்புரவித்தானையருங்கலத்தேரின்பேரன் [பான்.
குலங்கெழுகுரிசில்கண்டாய் கொண்டல்வரினுருமோடொப்

நங்கண்மால்வரையின்மேலோனன்னகர்கீதமென்னுந்
திங்கண்மால்புரிசைவேலிச்செழுநகரரசன்செம்ம
லங்கண்மாஞாலமாளுமரிகண்டனவனைவிண்மேற்
செங்கண்மான்முனியுமேனுஞ்செய்வதொன்றில்லைகண்டாய்

சேந்தெரிசெம்பொன்வீதித்திரிபுரமதனையாளும்
வாய்ந்தெரிவயிரப்பைம்பூண்மன்னவன்புதல்வன்மல்லா
டேந்துதோளரசர்போரேறிவனளிதாங்கனென்பான் [ன்.
காய்ந்தெரிகனலின்வெய்யோன் கல்வியாற்கடலோடொப்பா

செந்தளிர்புதைந்தசோலைச்சித்திரகூடமாளு
மந்தளிரலங்கன்மாலையரசர்கோன்சிறுவனந்தா
ரிந்திரன்புதல்வனன்னனேந்தலேமாங்கதற்கிம்
மந்திரவுலகின்வாழுமன்னர்மாறிலலைமன்னு. (அஎ)

அருமணியடுத்தவீதியச்சுவபுரமதாளுந்
திருமணிதிகழும்பூணான்பெருமகன்சிறைவண்டென்னுங்
கருமணிதுதைந்தபைந்தாரக்கனகசித்திரனையன்றே
யொருமணிதிலதமாகவுடையதுநிலமதென்றான். (அஅ)

சீரணிமுழவமோவாச்சிறிநிலையதனையாளுங்
காரணிதடக்கைவேந்தன்கான்முளைகனபொனாந்த
தேரணியரவத்தானைச்சித்திரத்தேரின்பேரான்
றாரணிமார்பனன்றேதரணிக்கோர்திலதமாவான். (அகூ)

கற்றவர்புகழுஞ்சீர்த்திக்கனகபல்லவத்தையாளுங்
கொற்றவன்சிறுவன்கோலக்குங்குமக்குவவுத்தோளான்
செற்றவர்செருக்குஞ்செய்கைச்செருவல்லான்சிங்ககேது
மற்றவன்பிறந்தபின்னைமண்மகள்மகிழ்ந்ததென்றான். (கூ0)

இஞ்சிசூழெரிபொன்மாடத்திந்திரன்மிசைந்தநாமச்
சஞ்சயமுடையகோமான் * றண்முளைதரணியெலலா
மஞ்சுநீரலங்கல்வேலானருஞ்சயனவனைநங்கண்
மஞ்சுசூழ்மலைக்கோர்சூளாமணியெனக்கருதுமன்னு. (கூக)

* தான்முளை, கான்முளை.

ஈங்கிவர்தம்முள்யாவரிலங்கிரும்பவழச்செவ்வாய்க்
கோங்கிவர்குவிமென்கொங்கைக்கொம்பினுக்குரியகாளை
யாங்கவன்றன்னையாராய்ந்தறிந்தருள்செய்கவென்றான்
வாங்கிரும்பரவைமுந்நீர்மணிகொழித்தனையசொல்லான். ()

வேறு.

மன்னர்நீண்முடிமென்மணித்தொத்தொளி
துன்னுசேவடியாற்குச்சுருங்கவே
பன்னுகேள்விப்பவச்சுதன்சொல்லலு
மன்னதேயென்றெல்லார்களுமொட்டினார். (கூ௩)

அல்லிநாண்மலராருமுத்தாரமும்
வல்லியாங்கணிசாந்தும்வளைந்துராய்
மல்லினான்மலிமார்பற்குமற்றிவை
சொல்லினான்சுதசாகரனென்பவே. (கூ௪)

ஆழியாள்கின்றவச்சுவகண்டன்மேற்
பாழியாகின்றதிண்டோட்பவச்சுதன்
சூழியானையினாய்சொலப்பட்டன
வூழியாருரையும்மொத்துளகண்டாய். (கூ௫)

ஆயினுஞ்சிறிதுண்டறிவண்டினம்
பாயினும்பனிக்கும்படர்கோதைதன்
வேயினும்பணைக்கின்றமென்றோள்பிறர்
தோயினும்பகையாஞ்சுடர்வேலினாய். (கூ௬)

வண்டவாமுடிமன்னருண்மற்றவன்
றண்டமாற்றுநர்தாமிலையாற்சிறி
துண்டியானுரைப்பானுறுகின்றது
விண்டுவாழுநர்மேனகுவேலினாய். (கூ௭)

போகமாண்டவிச்சேடியோர் * பொன்னகர்க்
கேகநாயகனாயினிதாள்பவன்
மேகவாகனனென்றுளன்வீழ்மத
வேகமால்களிறும்மிகுவேலினான். (கூ௮)

---

* சுரேந்திரகாந்தம்.

நாகமாலைகண்மேனகுவண்டின
மேகமாலையவாயிசைகைவிடாத்
தோகைமாமயில்பொற்சுரிகூந்தலாண்
மேகமாலினியென்றுரைமிக்குள்ளாள். (௯௯)

தேவிமற்றவடெய்வம்வழிபட
மேவிவந்தனன்விச்சுவனென்பவ
னேவினெல்புகழானுளன்கூற்றமு
மேவிநின்றினிதாண்டிடுமீட்டினான். (க௦௦)

மையிலவானுலகாணடுமெண்ணோர்களுக்
குய்யும்வாயிலுணர்த்தியதோன்றிய
வையனூற்பிறவாரனூர்நீங்கியிவ்
வையமாயதெலலாமவளர்கின்றதே. (க௦க)

மங்குலவானுலகாண்டுவரத்தின
விங்குவந்தனனீண்டளியீந்தபிற்
றிங்கள்வாளொளியிற்றிகழ்சோதியாய்த்
தங்குவானுலகிற்றகைசான்றதே. (க௦உ)

தன்னினுய்விளைவித்திருளைத்தவிாத்
தின்னனாகவென்றெண்ணியவெண்ணமோ
டன்னனாதலினலவன்மேற்பிற
ரென்னரேனுமின்னாதனவெண்ணிலா. (க௦௩)

காம்பின்வாய்ந்தமென்றோளியக்காதலன்
றீமபன்மாலைநன்மார்பகஞ்சேருமே
லாம்பன்மாலையுமாய்கதிர்த்திங்களுந்
தாமபன்மாலையுஞ்சார்ந்ததனைத்தரோ. (க௦௪)

நம்பிதங்கைநகைமலர்க்கற்பகக்
கொம்பினன்னவள்கொங்கணிகூந்தலா
ளம்பினீண்டரிசிந்தியமாக்கயல்
வம்பினீண்டகிமவாணெடுங்கண்ணினாள். (க௦௫)

கோதின்மாலைகள்மேற்குதிகொண்டெழு
கீதமாலையகின்னரவண்டினை
மூதிமாலையவாயுறையுங்குழற்
சோதிமாலையென்பாள்சுடர்ப்பூணினாள். (கoசு)

வெம்புமால்களியானைவிலக்குநீர்
நம்பி * ஞாயிறுசேர்பெயராற்கணி
யம்பினீளரிவாணெடுங்கண்ணவள்
வம்புசேர்முலைவாரிவளாகமே. (கoஎ)

இன்னவாறிசையப்பெறின்யாவரு
மென்னவாறுமிகப்பவரின்மையா
லன்னவாறருளுண்டெனிலாய்ந்தியான்
சொன்னவாறுகொண்டசுடர்வேலினோய். (கoஅ)

வேறு.

கொங்குவண்டலைந்ததாரான்குறிப்பறிந்திவைகளெல்லா
மங்கவன்மொழிந்தபின்னையவனையுமமைதிகூறி
நங்கைதன்றாதைதோழர்நால்வருணல்வராவான்
றெங்கலந்துணர்கொண்மார்பிற்சுமந்திரிசொல்லலுற்றான். ()

அண்ணலங்களிகொள்யானையச்சுவகண்டன்மூத்தாற்
கெண்ணலுந்தகுவதன்றாலிவன்பணியகற்றலாற்றாக்
கண்ணலங்கவரும்வேலோர்க்கீயினுங்கருமமன்றாற்
பெண்ணலங்கனிந்தபேதையிருப்பதும்பெருமையன்றே. ()

சூழ்கதிர்ப்புரிசைவேலிச்சுரேந்திரகாந்தமாளுந்
தாழ்கதிராரமார்பிற்றமனியக்குழையினான்றன்
போழ்கதிர்க்கடவுள்போலும்புதல்வனுக்குரிமைசெய்தி
யாழ்கதிர்விலங்கலாளுமரசவஃதரிதுகண்டாய். (கககு)

மங்கையர்முகத்தினீண்டுமைகடைமதர்ப்பமாந்தி
யங்கயல்பிறழ்வபோலுமையரியடர்த்தவாட்கட்
பங்கயச்செங்கணான்மேற் படைத்தொழில்பயின்றபோழ்துந்
தங்கியமனத்தனாகித்தளர்விலன்றவத்தின்மிக்கான். (ககஉ)

* அர்க்ககீர்த்தி.

மண்கணை முழவுச்சீருமடந்தையர் தூக்குமற்றும்
பண்கனிபாடலாடற்பாணியும்பயின்றமேவான்
விண்கனிந்தனையவின்பவெள்ளமும்வெறுத்துநின்றான்
கண்கனியுருவக்காளைகடவுளர்தன்மையன்கண்டாய். (கக௩)

செறிகழலவற்குத்தாதைசித்திரகூடமென்னு
மறிவரன்கோயிலெய்தியணிவிழவயர்ந்தகாலை
யிறுதியிலவதிஞானியசோதரனென்னும்பேர
வுறுவனை வணங்கிக்கேட்டான் மகன்றிறமுலங்கொடோளா [ன்.

பங்கயப்பழனவேலிப்பவகிரியரசன்பைந்தார்
தங்கியதடங்கொண்மார்பன்சயசேனனவற்குத்தேவி
செங்கயனெடுங்கட்செவ்வாய்ப்பிரிதிமதியந்தகாளை
வெங்களியானைவல்லவிசயபத்திரனென்பானே. (கக௫)

மந்திரத்தரசர்கோவேமற்றவன்வையங்காக்குந்
தந்திரந்துறந்துநோற்றுமறைந்துசாசாரமென்னு
மிந்திரவுலகமெய்தியேழொடீரைந்துமுந்நீ
ரந்தரகாலந்தேவர்க்கரசனுயாண்டுவந்தான். (கக௬)

ஆதலாலமரபோகநுகர்ந்தவனரைசர்செல்வம்
போதுலாமலங்கன்மார்பபொருளெனமருளல்செல்லான்
றீதெலாமகலநோற்றுச்சிவகதிசேருமென்றக்
கோதிலாமுனிவன்சொன்னவுரையிவைகூறக்கேட்டாம். ()

அம்மையாற்றவங்கடாங்கியலர்ந்தநல்லறிவினாலு
மிம்மையானுடம்புநீங்கியிகந்துபோமியற்கையாலுஞ்
செம்மையாற்கடவுட்டானஞ்சேர்வதேசிந்தையாற்கு
மெய்ம்மையாற்கருமச்சுற்றம்வேண்டுவதில்லைவேந்தே. ()

வாரணிமுரசமார்ப்பவயிரொடுவளைகளேங்கத்
தாரவர்குழாங்களீண்டச்சயமரமறைதுமேனு
மாரவிராழியானையஞ்சுதுமறியலாகா
கார்விரிதடக்கைவேந்தேகழலவர்கருமமென்றான். (கக௯)

ஒன்றுநாங்கருதிச்சூழி னூழதுவிளைவுதானே
கன்றிநாங்கருதிற்றின்றிமற்றொர்வாறுகாண்ணு
மென்றுநாங்துணிந்தசெய்கையிதன்றிறத்தென்னமாட்டா
மின்றுநாங்துணிதுமாயினினிச்சிறிதுரைப்பனென்றான். ()

வீழ்புரிவிளங்குநூலோய்மேலுநங்குலத்துளார்கட்
கூழ்புரிந்துறுதிகூறுமுயர்குலமலரகின்றான்
றாழ்புரிதயங்குநுண்ணூற்சதவிந்துமொழிந்தவற்றால்
யாழ்புரிமழலையாள்கண்ணுவிதையறிதுமென்றான். (கஉக)

என்றவன்மொழிந்தபோழ்தினேனையாரினிதினோக்கி
மின்றவழ்விளங்குவேலோய்மெய்யினுமேவல்வேண்டுஞ்
சென்றவன்மனையுணீயேவினவெனச்சேனைவேந்த
னன்றவர்மொழிந்ததெல்லாநல்லவாநயந்துகேட்டான். ()

இந்திரனனையநீரோயினிப்பிறிதெண்ணல்வேண்டா
மந்திரனுமாயின்வருவனவறியலாகா
சந்திரன்றவழநீண்டதமனியச்சூலநெற்றி
யந்தரந்திவளுஞாயிற்கோயில்புக்கருளுகென்றார். (கஉங)

மந்திரக்கிழவர்தம்மைமனைபுகவிடுத்துமன்னன்
சுந்தரச்சுரும்புந்தேனுஞ்சூழ்கழனிரையுமார்ப்ப
வந்தரமகளிர்போல்வார்வரன்முறைகவரிவீச
வந்தரக்கடைகணீங்கியகனகரருளிப்புக்கான். (கஉச)

வேறு.

மிருககதிர்விலங்கலார்வேந்தன்றேனுடை
துருகதிர்மண்டபமொளிரவேறலுந்
தொகுகதிர்சுடுவனபரப்பிச்சூழொளி
நகுகதிர்மண்டிலநடுவணின்றதே. (கஉரு)

கண்டிரள்கழைவளர்கரும்புகைமிகுத்
தொண்டிரள்வெள்ளிலையுரிஞ்சுமோடையர்
வெண்டிரண்மணிப்புடைசிலம்பவிட்டன
வண்டிரள்கிளையொடுவளைகளார்த்தவே. (கஉசு)

ஒலிவிழாவண்டினமூதவூறுதேன்
மலிவிழாப்பிணையலுமணங்கொள்சந்தமும
பலிவிழாப்பதாகையும்பரந்துபாடுவார்
கலிவிழாக்கழுமினகடவுட்டான்மே. (௧௨௭)

குண்டுநீர்க்குழுமலர்க்குவளைப்பட்டமு
மண்டுநீர்மரகதமணிக்கல்வாவியுங்
கொண்டுநீரிளையவர்குடையக்கொங்கொடு
வண்டுநீர்த்திவலையின்மயங்கிவீழ்ந்தவே. (௧௨௮)

பங்கயத்துகள்படுபழனநீர்த்திரை
மங்கையர்முலையொடுபொருதவர்விக
ளங்கவரஞ்சனமழித்தசேற்றினுங்
குங்குமக்குழம்பினுங்குழம்புகொண்டவே. (௧௨௯)

அங்கள்வாய்க்கயம்வளராம்பறம்பிடைப்
பொங்குகாடேர்படஞெறித்துப்பூவொடு
கொங்கைவாய்க்குழலவர்குளிப்பவிட்டன
திங்கள்வாண்முகவொளிதிளைப்பவிண்டவே. (௧௩0)

மாயிரும்பனித்தடம்படிந்துமையழி
சேயரிநெடுமலர்க்கண்கள்சேந்தெனத்
தாயசைமறைக்கியகுவளைத்தாதுதேன்
பாய்மெரிந்திறைஞ்சினார்பாவைமார்களே. (௧௩௧)

சந்தனத்துளித்தலைததும்பச்சாந்தளைந்
தந்தரத்தசைப்புனவாலவட்டமு
மெந்திரத்திவலையும்மியற்றியீர்மணற்
பந்தருட்பாலிகைக்குவளைபாய்த்தினார். (௧௩௨)

குருமணித்தாமரைக்கோட்டைசூடிய
திருமணிப்பீடமுஞ்செதுக்கமாயவும்
பருமணிப்பளிங்கெனவிளங்குவான்பலி
யருமணிக்கொம்பனாரலரவூட்டினார். (௧௩௩)

அன்னணம்பொழுதுகண்ணகற்றவாயிடைப்
பின்னருங்காலநூல்பயின்றபண்புடைக்
கன்னலங்கருவியோர்கழிந்தநாழிகை
மன்னவனடிமுதலுணர்த்திவாழ்த்தினார். (கஙச)

வாரணிமுலையவர்பரவமன்னவ
னீரணிப்பள்ளிபுக்கருளினானிரந்
தேரணியின்னியமிசைத்தவின்பமோ
டாரணிதெரியலானமிர்தமேயினான். (கஙரு)

வெள்ளிமைபொலிந்தொளிதுளுமடிமேனியன்
வள்ளிதழ்மலலிகைமலர்ந்தமாலைய
னள்ளிதழ்ப்புதுமலரடுத்தவீதிமேற்
கள்ளிதழ்க்கண்ணியான்காவிணேகினான். (கஙசு)

பொன்னவிர்மணிக்கழல்புலம்பத்தேனிநு
துன்னலர்தொடையலிற்சுரும்பொடார்த்தெழ
மன்னவனடத்தொறுமகரகுண்டல
மின்மலர்ந்திலங்குவில்விலங்கவிட்டவே. (கஙஎ)

நெய்யிலங்கெஃகினர்நிறைந்தவிஞ்சையா
கையிலங்கீட்டியர்கழித்தவாளினர்
மெய்யிலங்குறையினர்விசித்தகச்சையா
வையகங்காவலன்மருங்குசுற்றினார். (கஙஅ)

சுரும்புசூழ்பிணையலுஞ்சுண்ணமாரியுங்
கரும்புசூழ்கிளவியர்சொரிந்துகைதொழ
நிரம்புநூனிமித்திகன்மாடநீள்கடை
யரும்புசூழ்தெரியலானருளினெய்தினான். (கஙகூ)

எங்குலம்விளங்கவிங்கருளிவந்தவெங்
கொங்கலர்தெரியலாய்கொற்றங்கொள்கென
மங்கலவுழைக்கலம்பரப்பமன்னனுக்
கங்கலர்கேள்வியானுசிகூறினான். (கச௦)

கொண்டமர்ந்தகிற்புகைகமழுமீக்கோதைவாய்
விண்டமர்ந்தொழுகுவமதுக்கள்வீழ்ந்தீராய்
வண்டமர்ந்தொலிசெயமருங்குல்கொண்டதோர்
மண்டபமணித்தலமன்னனெய்தினான். (௧௪௧)

தழையவிழ்சந்தனப்பொதும்புபோன்மது
மழைதவழ்மண்டபமலிரவிற்றிருந்
துழையவர்குறிப்பறிந்தகலவொண்சுடர்க்
குழையவன்குமரிதன்கருமமெண்ணினான். (௧௪௨)

கனைத்தெழுகதிர்மணிக்கடகஞ்சூடிய
பனைத்திரளனையதோட்படலைமாலையான்
மனத்தினைமறுவினூல்வாயினாற்சொல
நினைத்திவைவிளம்பினானிமித்தநீதியான். (௧௪௩)

மணங்கமழ்மதுமலரலங்கன்மாலைபோல்
வணங்கெழினுடங்கிடைமாழைநோக்கிநங்
கணங்குழைகருமமாங்கருதிற்றென்றன
னணங்கெழில்விரிந்தநூலலர்ந்தநாவினான். (௧௪௪)

வெண்ணிலாவிரிந்தெனவிளங்குமாலையன்
கண்ணிலாங்கவர்தகைக்கண்ணிமன்னனை
மண்ணிலாமறுகிடைவலங்கொண்டெய்தினா
ளெண்ணிலாங்கதுதிருவெதிர்ந்தவண்ணமே. (௧௪௫)

பொன்சுலாஞ்சுடரிழைபொறுத்தபூண்முலை
மின்சுலாநுடங்கிடைமெல்லியாடிற
மென்சொலாளின்றியானியம்புநீரதோ
மன்சுலாவகலநின்றலரும்வாளினாய். (௧௪௬)

ஆதிநாளறக்கதிராழிதாங்கிய
சோதியான்றிருமொழிவிளக்கித்தோன்றுமாற்
போதுவார்புரிகுழற்பொலங்கொம்பன்னவிம்
மாதராள்வனமுலைக்குரியுமைந்தனே. (௧௪௭)

அம்மயிலனையவடிறத்திறரியன்
செம்மையில்விளம்பியுசெல்வங்கேட்டலு
மெய்ம்மையிற்றெரிந்தொளிதுளும்புமேனியன்
பொய்ம்மையில்புகழவன்பொலிந்துதோன்றினன். (கசஅ)

முன்னியவுலகுகண்விடுத்தமூர்த்தியான்
மன்னியதிருமொழியகத்துமாதரா
ளென்னைகொல்விரிந்தவாறெனலுமன்னனுக்
கன்னவனாதிமாபுராணமோதினன். (கசகூ)

மூவகையுலகினுணடுவண்மூரிநீர்த்
தீவினதகலமுஞ்சிந்துவட்டமு
மோவலவொன்றுக்கொன்றிரட்டிகண்ணறை
யேவலாய்விரிந்தவையெண்ணிறந்தவே. (கரு0)

மந்தரநெடுமலைநடுவின்வாய்ந்தது
சுந்தரவேதிகைமருங்குசூழ்ந்தது
நந்தியநளிசினைநாவன்மாமர
மந்தரத்துடையதிவ்வவனிவட்டமே. (கருக)

குலகிரியாறுகூர்கண்டமேழ்குலாய்
மலைதிரைவளர்புனலேழிரண்டதாய்க்
கொலைதருவேலினாய்கூறப்பட்டதிவ்
வலைதிரைநெடுங்கடலவனிவட்டமே. (கருஉ)

மாற்றவர்மண்டிலமதனுளூழியா
லேற்றிழிபுடையனவிரண்டுகண்டமாந்
தேற்றியவிரண்டினுந்தென்முகத்தது
பாற்றரும்புகழினாய்பரதகண்டமே. (கருங)

மற்றதுமணிமயமாகிக்கற்பகம்
பொற்றிரளணிபொழிற்போகபூமியாய்
முற்றியவூழிமூன்றேறிமீள்வழிப்
பிற்றகையூழிவட்பிரமர்தோன்றினர். (கருச)

வெங்கதிர்ப்பரிதியும்விரவுதண்பனி
யங்கதிர்வளையமுமாதியாயின்
விங்கிவர்படைத்தனரிழிந்ததிவ்வகை
பொங்கியபுரவியாய்போககாலமே. (௧௫௫)

ஊழிமூன்றாவதோய்ந்திறுதிமன்னுயிர
சூழ்துயர்பலகெடச்சோதிமூர்த்தியா
யெழுயருலகுடன்பரவவீணடரு
ளாழியங்கிழமையெம்மடிகடோன்றினார். (௧௫௬)

ஆரருடழுவியவாழிக்காதியாம்
பேரருள்மருவியபிரான்றன்சேவடி
காரிருள்கழிதரக்கண்கவின்றரோ
சீரருள்சரணெனவுலகஞ்சேர்ந்ததே. (௧௫௭)

அலந்தவரழிபசியகற்றும்வாயிலுங்
குலங்களுங்குணங்களுங்கொணர்ந்துநாட்டினான்
புலங்கிளர்பொறிநுகர்விலாதபுண்ணிய
னலங்கிளர்திருமொழிநாதனென்பவே. (௧௫௮)

ஆங்கவன்றிருவருளலரச்சூடிய
வீங்கியவிரிதிரைவேலிகாவல
னோங்கியநெடுங்குடையொருவனாயினான்
பாங்குயர்பரிதிவேற்பரதனென்பவே. (௧௫௯)

ஆழியாலகலிடம்வணக்கியாண்டவன்
பாழியானவின்றதோட்பரதனுங்கோநா
ளூழியானொளிமலருருவச்சேவடி
சூழிமால்யானையான்றொழுதுவாழ்த்தினான். (௧௬௦)

கதிரணிமணிமுடிவணங்கிக்காவல
னெதிரதுவினவினானிறைவன்செப்பினா
னதிர்தருவிசும்பிடையமிர்தமாரிசோர்
முதிர்தருமுகிலிடைமுழங்கிற்றென்பவே. (௧௬௧)

என்முதலிருபத்திரிருவர்நாதர்க
ணின்முதலீரறுவகையூர்நேமியர்
மன்முதல்பலவர்கேசவர்கண்மாற்றவர்
தொன்முதலவர்தொகையொன்பதொன்பதே. (கசூஉ)

மன்னவரின்மகன்மரிசிமாற்றிடைப்
பொன்னவிர்போதனமுடையபூங்கழற்
கொன்னவில்வேலவன்குலத்துட்டோன்றின
லன்னவன்கேசவர்க்காதியாகுமே. (கசூங)

கேசவனுந்திறங்கிளப்பின்வெண்மலை
காசறுவனப்பினோர்கன்னியேதுவா
வாசறவச்சுவக்கிரீவனுவியுந்
தேசறுதிகிரியுஞ்செவ்வன்வௌவுமே. (கசூச)

தேரணிகடற்படைத்திவிட்டன்சென்றுபி
ரூரணியறக்கதிராழிநாதனும்
பாரணிபெரும்புகழ்ப்பரதவென்றனன்
சீரணிதிருமொழித்தெய்வத்தேவனே. (கசூரு)

ஆதியுமந்தமுநடுவுநம்மதே
யோதநீருலகுடையுரிமையென்றரோ
காதுவேலரசர்கோக்களிப்புற்றுனிது
போதுசேரலங்கலாய்புராணநீர்மையே. (கசூசு)

அன்னணம்புராணநூலகத்துத்தோன்றிய
கன்னவிலிலங்குதோட்காளையானவன்
மின்னவில்விசும்பினின்றிழிந்துவீங்குநீர்
மன்னியவரைப்பகமலிரத்தோன்றினன். (கசூஎ)

திருவமர்சுரமைநாடணிந்துசெம்பொனுற்
பொருவருபோதனமுடையபூங்கழற்
செருவமர்தோளினன்சிறுவராகிய
விருவருளிளையவனீண்டநம்பியே. (கசூஅ)

கானுடைவிரிதிரைவையங்காக்கிய
மானுடவுடம்பினன்மறைந்துவந்தவத்
தேனுடையலங்கலான்றெய்வமார்பகந்
தானடைந்தமர்வதற்குரியடையலே. (கசுகூ)

ஆங்கவற்கீந்தபினாழிதாங்கிய
வீங்கவற்கொன்றுனக்கிரண்டுசேடியுந்
தாங்கியதிருவினூற்றருமற்றென்றலும்
வீங்கியவுவகையன்வேந்தனாயினன். (கஎ0)

கொங்கலர்தெரியலான்றிறத்திற்கொள்குறி
யிங்கியானிசைத்ததேயமையுமல்லதோர்
திங்களுளகவையிற்றிவிட்டனுங்கொரு
சிங்கம்வாய்பிளந்திடுந்தெளியிதென்னவே. (கஎக)

நிமித்தகனுரைத்தலுநிறைந்தசோதியா
* னுமைத்தகையிலாததோருவகையாழ்ந்துகண்
ணிமைத்திலனெத்துணைப்பொழுதுமீர்மலர்ச்
சுமைத்தகைநெடுமுடிசுடரத்தூக்கினன். (கஎஉ)

இருநிலத்தலைமகளியன்றநூற்கடற்
றிருநிதிச்செல்வனச்செம்பொன்மாரியாச்
சொரிநிதிப்புனலுடைச்சோதிமாலையென்
றருநிதிவளங்கொணடாளநல்கினன். (கஎங)

மன்னவன்பெயர்ந்துபோய்வாயுவேகைதன்
பொன்னகர்புக்கனன்பொழுதுஞ்சென்றது
கன்னிதன்பெருமையுங்கருமச்சூழ்ச்சியு
மன்னமென்னனடையவட்கறியக்கூறினன். (கஎச)

தொக்கிளமலர்துதைவிலாதசோலையும்
புக்கிளந்தாமரைநகாதபொய்கையு
மிக்கிளம்பிறைவிசும்பிலாதவந்தியும்
மக்களையிலாததோர்மனையுமொக்குமே. (கஎரு)

* உவகையின்விகாரம்.

தலைமகன்றுடனக்காகச்சாகைய
மிலைமைகொண்மனைவியாகிமிர்ந்தபூந்துண
நலமிகுமக்களாமுதியர்தேன்களாக்
குலமிகுகற்பகங்குளிர்ந்துதோன்றுமே. (௧௭௬)

சூழிநீண்முகத்தனதுளைக்கைம்மாவொடு
மாழைநீண்மணியிவையெளியமாண்பினை
வாழுநீர்மக்களைப்பெறுதன்மாதரார்க்
காழுநீர்வையகத்தரியதாவதே. (௧௭௭)

தகளிவாய்க்கொழுஞ்சுடர்தவிர்த்துங்கோழிரு
ணிகளவாய்ப்பிளந்தகஞ்சுடரகிற்குமே
துகளிலாச்சுடர்மணிதுளும்புபூணினாய்
மகளெலாத்திசைகளுமலிரமன்னினள் (௧௭௮)

வலம்புரிவயிற்றிடைப்பிறந்தமாமணி
நலம்புரிபவித்திரமாகுநாமநீ
பொலம்புரிமயிலனையப்பயந்தபூங்கொடி
குலம்புரிந்தவர்க்கெலாங்கோலமாகுமே. (௧௭௯)

மக்களையிலாதவர்மரத்தொடொப்பவென்
றொக்கநின்றுரைப்பதோருரையு * மூய்த்துநீ
நக்கவானிளமதிநிறைவளர்ந்தநாட்கதிர்ச்
செக்கர்வானனையதோர்திருவுமெய்தினாய். (௧௮௦)

மாவினைமருட்டியநோக்கினின்மகள்
பூவினுணமடந்தைபொற்பூவைநாளொளித்
தேவனுக்கமிர்தமாந்தெய்வமாமென
வோவினூற்புரோகிதனுணரவோதினான். (௧௮௧)

மத்தவார்மதகளிற்றுழவன்மற்றிவை
யொத்தவாறுரைத்தலுமுவகைகைமிக
முத்தவாண்முகிழ்நகையடக்கிமொய்குழற்
றொத்துவார்பிணையலாடொழுதுசொல்லினாள். (௧௮௨)

* மூய்த்தல் - மூடுதல், விலக்குதல்.

மின்னவிர்மணிமுடிவேந்தர்வேந்தவிக்
கன்னிகின்னருளினேகருதப்பட்டனள்
மன்னவரருளிலராயின்மக்களும்
பின்னவர்பெறுவதோர்பெருமையில்லையே. (௧௮௩)

பிடிகளைமகிழ்களிற்றரசர்பெய்மலர்
முடிகளின்மணிபொரமுரலுமொய்கழ
லடிகளதருளினாலம்மென்சாயலிக்
கடிகமழ்குழலினாள்கவினுமெய்தினாள். (௧௮௪)

திருமனைக்கிழத்திதன்றேங்கொள்சின்மொழி
மருமணிமுடியினானமகிழ்ந்துமற்றவள்
பருமணிபூணமுலைபாயமார்பிடை
யருமணித்தெரியறேனழிபவைகினான். (௧௮௫)

மற்றைநாண்மகனையுமமைச்சர்தம்மையுங்
கொற்றவாடடக்கையான்கூவிக்கொணடிரு
திற்றியான்கருதியதென்றுதொலைநூற்
கற்றகாவலனதுகதையுஞ்சொல்லினான். (௧௮௬)

வீங்கியமுலையவடிருவுமவெம்முலைக்
கோங்கியமுகிலவனுரிபபெற்றியுந்
தாங்கியபுகழவன்மொழியத்தாரவா
தேங்கியவுவகையாதெரிநதுசொல்லினா. (௧௮௭)

தெய்வமேதிரிகுழற்சிறுமியாவதற்
கையமேயொழிநதனமனலும்வேலினாய்
செய்யதோர்தூதினித்திவிட்டன்றுதையாம
வெய்யவேலவனுழைவிடுத்துமவேந்தனே. (௧௮௮)

கற்றவன்கற்றவன்கருதுங்கட்டுரைக்
குற்றனவுற்றவுய்த்துரைக்குமாற்றலான்
மற்றவன்மருகியேயவனைநாம்விடச்
சுற்றமுங்கருமமுஞ்சொல்லவல்லனே. (௧௮௯)

காரியந்துணிந்தவன்மொழியக்காவலன்
மாரியந்தடக்கையானவருகவென்றுரு
சீரியதிருமுகஞ்சிறப்பொடீந்தன
னாரியன்கழலடியவனும்வாழ்த்தினான். (கக௦)

மன்னவன்பணியொடுமருசிவானிடை
மின்னவிர்முகிற்குழாமுழங்கும்வீதிபோய்த்
துன்னினன்சுரமைநாட்டகணிசூடிய
பொன்னகர்ப்புறத்ததோர்பொழிலினெல்லையே. (ககக)

புதுமலர்ப்புட்பமாகரண்டமென்னுமப்
பொதுமலர்ப்பூம்பொழில்புகலும்பொம்மென
மதுமலர்பொழிதரமழலைவண்டினங்
கதுமலரிணையொடுகலவியாத்தவே. (ககஉ)

மந்திரசாலைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம்-சாடு௦.



ஆறாவது

# தூதுவிடுசருக்கம்.



மருவினியனமதுவிரிவனமலரணிவனவகுளந்
திருமருவியசெழுநிழலனசெங்குழையனதேமா
வரிமருவியமதுகரமுணமணம்விரிவனநாகம்
பொரிவிரிவனபுதுமலரனபுன்குதிர்வனபுறனே. (க)

நிழனகுவனநிமிர்தழையனநிறைகுளிர்வனசாந்த
மெழினகுவனவிளமலரனவெழுசண்பகநிகரங்
குழனகுவனமதுகரநிரைகுடைவனபலகுரவ
மழனகுவனவலர்நெரிதரவசைநிலையவசோகம். (உ)

எழுதுருவினவெழுதளிரனவிணரணிவனவிரத
மிழுதுருவினகொழுமலரிடையெழில்பொலிவனமதுகங்
கழுதுருவினகஞலிலையனகழிமடலினகைதை
பொழுதுருவினவணிபொழிலினபொழிதளிரனபுன்னை. (௩)

வளர்கொடியனமண்ணம்விரிவனமல்லிகையொடுமௌவ
னளிர்கொடியனநறுவிரையகநறுமலரணிநறவங்
குளிர்கொடியனகுழைமாதவிகுவிமுகையனகொகுடி
யொளிர்கொடியனவயாதிரளினொடொழுகினரவவோடை

குடையவிழ்வனகொழுமலரினகுளிர்களியனகோங்கம
புடையவிழ்வனபுதுமலரனபுன்னைகமொடிலவங்
கடியவிழ்வனகமழ்பாதிரிகலிகளிகைய * சாக
மிடையவிழ்வனமலரளவிலவிதுபொழிலினதியல்பே. (௫)

மதுமகிழ்வனமலர்குடைவனபணிவணடொடுதும்பி
குதிமகிழ்வனகுவிகுடையனநதிகொதுகுயிலகள்
புதுமகிழ்வனபொழிலிடையனபுணாதுணையனபூவை
விதிமகிழ்பவாமதியகிழ்வுறவிரவுற்றனவிரிவே. (௬)

அதுவழகுதனகமகிழ்வுறவலர்தாரவனடைய
விதுவழகியதிவணவருகெனவெழுபுள்ளொலியிகவா
விதி † வழகுடைவிரியிலையிடைவெறிவிரவியவேரிப்
பொதியவிழ்வனபுதுமலரணிபொய்கைக்கரைபுக்கான். (எ)

புணர்கொண்டெழுபொய்கைக்கரை பொருதிவலைகள்சிதறு
துணாகொணடனகரைமாகனிநுறுமலாபலதூவா [வ
வணாகொணடனமலலுற்றலைவளாவணடினமெழுவா [யே
வினாகொணடெதிரெழுதென்றலி னெதிாகொணடதவ்விட

புனல்விரவியதுளிபிதாவதுபுரிமுத்தணிபணன்பேன் [வய
மினல்விரவியசுடாபொன்னொளிா மிளிர்வேதிகைமிசையோ
கனல்விரவியமணியிடைகனகங்கணியணிதிரளின்
னனல்விரவியுவலரணியதொரசோகமதுகண்டான். (௯)

அதனின்னிழலவனடைதலுமதுகாவலனுவான்
பொதியின்னவிழ்மலாசிதறுபுபொலிகென்றுரைபுகலா
மதியின்னொளிவளர்கின்றதொர்மணியின்சிலைகாட்ட
விதுவென்னென விதுவென்னென வினையன்பலசொன்னான்.

---

* சாளமென்றும்பாடம். † வழகு—இலைசெறிபுள்ளி.

வேறு.

மின்ற்கொடிவிலங்கியுவிலங்கன்மிசைவாழும்
புனற்கொடிமலர்த்தொகைபுதைத்தபொலிதாரோய்
நினக்கெனவியற்றியநிலாநிழன்மணிக்கண்
மனக்கினிதினேதினைமகிழ்ந்திருமினென்றான். (கக)

அழற்கதிரியங்குறவலங்கினரசோக
நிழற்கதிர்மரத்தகையதாகநினைகில்லேன்
பொழிற்கடவுள்பொன்னிடமிதென்னைபுகுமாறென்
றெழிற்கதிர்விசும்பிடையிழிந்தவன்மொழிந்தான். (கஉ)

நிலாவளர்நிழற்கதிர்நிமிர்ந்தொளிதுளும்பும்
சிலாதலமிதற்குரியதெய்வமெனல்வேண்டா
வலாதவரிதற்குரியரல்லரவராவி
ருலாவியகழற்றகையினீரெனவுரைத்தான். (கங)

என்னவிதுவந்தவகையென்னினிதுகேண்மி
னன்னகரிதற்கிறைவன்முன்னாநனிகண்ணித்
தன்னிகரிகந்தவனங்கதனெனும்போர்ப்
பொன்னவிருநால்கெழுபுரோகிதனுரைத்தான். (கச)

மின்னவிர்விளங்குசுடர்விஞ்சையுலகாளும்
வின்னவிறடக்கைவிறல்வேலொருவன்வேண்டி
மன்னநின்மகற்கொருமகட்கருமமுன்னி
யின்னவனினைப்பகலுளீண்டிழியுமென்றான். (கரு)

மடங்கலையடுந்திறனெடுந்தகைதன்மாறு
படங்கலரடங்கவடுமொழியஃதாள்வா
னுடங்கவனுடன்றெரிதுளும்பவரும்வந்தா
னடந்தவனடுங்கவடுநம்பியிவனென்றான். (கசு)

ஆங்கவன்மொழிந்தபினடங்கலரையட்டான்
றேங்கமழ்பொழிற்றிகழ்சிலாதலமிதாக்கி
யீங்கவனிழிந்தபினெழுந்தெதிர்கொளென்ன
நீங்கலனிருந்தனனெடுந்தகையிதென்றான். (கள)

என்றவன்மொழிந்தபினிருந்தனனிருப்பச்
சென்றவன்வழிச்சிரமைதீர்மினெனநால்வர்
பொன்றவழ்பொருந்திழையணங்கினனையாரை
மின்றவழ்விளங்குகொடிவேந்தனும்விடுத்தான். (௧௮)

பொன்னவிர்மணிக்கலைசிலம்பொடுபுலம்ப
மின்னவிர்மணிக்குழைமிளிர்ந்தொளிதுளும்பச்
சின்னமலர் துன்னுகுழறேறலொடுசோர
வன்னமெனவல்லவெனவன்னணநடந்தார். (௧௯)

நலங்கனிமடந்தையர்நடந்தொறுமிணர்ப்போ
தலங்கலளகக்கொடியயற்சுடரவோடி
விலங்குபுருவக்கொடிமுரிந்துவெருவெய்த
மலங்கினவிலங்கினமதர்த்தவவர்வாட்கண். (௨௰)

அலத்தகமலைத்தனவடித்தலமரற்றுங்
கலைத்தலைமலைத்துவிரிகின்றகடியல்குன்
முலைத்தலைமுகிழ்த்தொளிதுளும்பியுளமுத்த
மலைத்தலைமயிற்கணமருட்டுமவர்சாயல். (௨௧)

கணங்கெழுகலாவமொளிகாலுமகலல்குற்
சுணங்கெழுதடத்துணைமுலைச்சுமையிடத்தாய்
வணங்கியுநுணங்கியும்வருந்தியமருங்கிற்
கிணங்குதுணையாய்ஞிமிறிரங்கினவெழுந்தே. (௨௨)

முலைத்தொழில்சிலைத்தொழிலினுருயிர்முருக்கு
நிலைத்தொழிலவென்றுளநினைத்தொழுகவின்பக்
கலைத்தொழில்கள்காமனெய்கணைத்தொழில்களெல்லாங்
கொலைத்தொழில்கொள்வாட்கணினகத்தகுறிகண்டீர். (௨௩)

துடித்ததுவர்வாயொடுதுளும்புநகைமுத்தம்
பொடித்தவியனீரொடுபொலிந்தசுடரோலை
யடுத்ததிலகத்திணுடணிந்தவளகத்தார்
வடித்தசிறுநோக்கொடுமுகத்தொழில்வகுத்தார். (௨௪)

பூவிரிகுழற்சிகைமணிப்பறவைபோகா
வாவிகொளகிற்புகைபுனர்விம்மியவரொண்கண்
காவியெனவூதுவனகைத்தலம்விலங்க
மேவியிவைகாந்தளெனவீழ்மிகநொந்தார். (உரு)

சுரும்பொடுசுழன்றுளகுழற்றெருகையெழிற்கை
கரும்பொடுகலந்துளகளித்ததவர்நிம்ப
ணரம்பொடுநடந்துளவிரற்றலையெயிற்றே
ரரும்பொடுபொலிந்ததுவர்வாயமிர்தமன்றே. (உசா)

கணங்குழைமடந்தையர்கவின்பிறழிருங்கண்
ணணங்குறவிலங்குதொறகம்புலரவாடி
மணங்கமழலங்கலுடைமைந்தர்தமனந்தாழ்
வணங்கிடைவணங்குதொறணங்கெனவணங்கும். (உஎ)

நெய்யலர்குழற்றெருகைநெருப்பினடுமென்பார்
மையலர்நெடுங்கணிவைவல்லகொலையென்பார்
தொய்யிலிளமென்முலையினீர்சுடுதிராயி
னுய்யலமெனத்தொழுதுமைந்தர்களுடைந்தார். (உஅ)

வேறு.

நாமநூற்கலைவிச்சையினன்னெறியிவைதாந்
தாமநீள்குழற்றளர்நடையுருவுகொண்டனையார்
வாமமேகலைமடவரலிவர்களைவளர்த்தார்
காமநூலினுக்கிலக்கியங்காட்டியவளத்தார். (உகூ)

இனியவீங்கியவிளமுலையிவர்களைவளர்த்தார்
பனியின்மென்மலரலர்ந்தனவுவகையிற்பயில்வார்
கனிபவேலிவர்கடல்விளையமிர்தெனக்கனிவார்
முனிபவேலிவரனங்களைங்கணையெனமுனிவார். (௩0)

புலவிதானுமோர்கலவியைவிளைப்பதோர்புலவி
கலவிதானுமோர்புலவியைவிளைப்பதோர்கலவி
குலவுவார்சிலைமதனனைங்கணையொடுகுலவி
யிலவுவாயுடையிளையவருடையனவிவையே. (௩க)

மன்னுவார்சிலைம்தனனோர்வடிவுகொண்டிலாதான்
றன்னைநாமுமோர்தகைமையிற்றணத்துமென்றிருப்பா
ரென்னைபாவமிங்கிவர்களைப்படைத்தனனிதுவாற்
பின்னையாங்கவன்பிறவிக்குமுதல்கண்டவகையே. (கஉ)

வாமமேகலைமுதனின்றுவயிற்றிடைவளர்ந்த
சாமலேகைகண்மயிர்நிரையலதலமீது
காமனீரெரியகத்ததுகனன்றெழுகிமிர்ந்த
தூமலேகைகள்பொடித்தனதுணைமுலையுறவே. (கங)

சனங்கடாஞ்சிலதவங்களைத்தாங்குதுமெனப்போய்
வனங்கள்காப்பவருளரெனமுனிவபற்றன்றெற்
றனங்கடாந்தவழ்சந்தனக்குழம்பிடைவளர்ந்த
கனங்கொள்வெம்முகங்கருப்பதென்காரணமுரையீர். (கச)

தூமமென்புகைதுழாவிவண்டிடையிடைதுவைக்குங்
காமவோதியர்தம்முகத்தனபிறர்மனத்த
காமனீள்சிலைகணையொடுகுனிவகண்டாலும்
யாமெமின்னுயிருடையமென்றிருப்பதிங்கெவனோ. (கரு)

என்றுமைந்தர்களிடருறவெழுதியகொடிபோற்
சென்றுகற்பகவனமனசெறிபொழிலடைந்தா
ரின்றுகாமுகர்படையினையிடர்படநடந்த
வென்றிகாமனுக்குரைத்துமென்றிரைத்தனர்விரைந்த. (கசா)

வேறு.

ஆடைகைத்தலத்தொருத்திகொண்டதங்கடைப்பையுமதன்
மாடுகைத்தலத்தொருத்திகொண்டதுமணிக்கலஞ்
சேடிகைத்தலத்தனசெறிமணித்திகழ்வசெங்
கோடிகைத்தலத்தனகுளிர்மணிப்பிணையலே. (கஎ)

வேறு.

வண்ணச்சந்தங்கணிறைந்தனமணிச்செப்புவளர்பூங்
கண்ணிச்சந்தங்கணிறைந்தனகரண்டகங்கமழ்பூஞ்
சுண்ணச்சந்தங்கணிறைந்தனசுடர்மணிப்பிரப்போ
டெண்ணச்சந்தங்கள்படச்சுமந்திளையவரிசைந்தார். (கஅ)

தகளிவெஞ்சுடரெனத்திகழ்மணிக்குழைதயங்க
மகளிர்மங்கலவுழைக்கலஞ்சுமந்தவர்பிறரோ
டுகளுமான்பிணையனையவருழைச்செலவொளிர் தார்த்
துகளில்விஞ்சையன்றுணிந்தனன்றுறக்கமீதெனவே. (௩௯)

துறக்கம்புக்கவர்பெறுவனவிவையெனத்துணியா
வெறிக்கண்விம்மியவிரைவிரிதாரவனிருப்பச்
சிறைக்கணேக்கமுஞ்சிறுநகைத்தொழில்களுஞ்சுருக்கி
யறைக்கண்மாந்தனுக்கதிதியந்தொழிலினிலமைந்தார். (௪0)

ஆட்டினார்வெறிகமழ்வனவணிகிளர்நறுநீர்
தீட்டினார்நறுஞ்சாந்தமுஞ்சிறிதுமெய்கமழச்
சூட்டினார்சிலர்நறுமலராறுசுவையடிசி
லூட்டினாரவனமருமொளருவனெத்தொளிர்ந்தான். (௪௧)

வயந்தமுன்னியதிலகைகல்வியாணிகைவடிவார்
வியந்தசேனைமென்கமலமாலதையெனவிளம்பு
மியங்குபூங்கொடியனையவரியல்புகணினையா
வயங்குதொல்புகழ்பாசரன்மகிழ்ந்திருந்தான். (௪௨)

வேறு.

ஆங்கெழிற்பொலிந்தவன்னிருந்தபின்னலங்குதார்
வீங்கெழிற்பொலிந்ததானைவேந்தனேவவீவில்சீர்ப்
பூங்கழற்பொலங்குழைத்திவிட்டனோடுபோர்க்கதங்
தாங்கெழிற்பெருங்கையானைசங்கவண்ணனேறினான். (௪௩)

தம்பியோடுசெங்கவண்ணனம்பொன்மாலைதாழ்முகப்
பைம்பொனோடைவீழ்மணிப்பகட்டெருத்தமேறினான்
செம்பொன்மாமலைச்சிகைக் கருங்கொண்மூவினோடெழூஉம்
வம்பவெண்ணிலாவிலங்குதிங்கள்போலமன்னினான். (௪௪)

ஆர்த்தபல்லியக்குழாமதிர்த்தகுஞ்சரக்குழாந்
தேர்த்தவீரர்தேர்க்குழாந்திசைத்தபல்சனக்குழாம்
போர்த்தசாமரக்குழாம்புதைத்தவெண்கொடிக்குழாம்
வேர்த்தவேந்தர்பல்குழாம்விரைந்தகூந்தன்மாக்குழாம். ( )

பாடுவார்வணங்குவார்பலாண்டுகூறிவாழ்த்துவா
ராடுவாரோடார்வமாந்தரன்னரின்னராயபின்
சூடுமாலைசோரவுந்தொடாரமாலைவீழவும்
மாடவாயின்மேலெலாமடந்தைமார்மயங்கினார் (சகூ)

கொண்டலார்த்தபொன்னெனிக்குழற்கொடிக்குழாமனார்
மண்டலந்நிறைந்ததிங்கள்வட்டமொத்தவாண்முகங்
குண்டலங்கொழும்பொனோலை யென்றிரண்டுகொண்டணீஇ
வண்டலந்துமாலைதாழ்ந்துமாடவாய்மறைந்தவே. (சஎ)

கூடுதும்பியூடுதோய்குழற்றொகைத்துணர்துஊதந்
தோடுமேலெருத்திடைக்குலைந்தகோதையோடுலாய்
மாடவாயின்மாலைஞாலமாடமேறுமாதரா
ராடமஞ்ஞைகோடுகொள்வதென்னலாவதாயினார். (சஅ)

தொண்டைவாய்மடந்தைமார்கள்சுடிகைவட்டவாண்முகங்
கொண்டகோவினீரவாயகோடிமாடமேலெலாம்
வண்டுசூழ்ந்தபங்கயமலர்க்குழாமிணைப்பஊஉக்
கெண்டையோடுநின்றலர்ந்த * கேழவாய்க்கிளர்ந்தவே. ( )

மாலைதாழுமாடவாய்நிலத்தகத்துமங்கைமார்
வேலவாயநெடியகண்விலங்கிநின்றிலங்கலாற்
சாலவாயிருமெலாமொர்தாமரைத்தடத்திடை
நீலமாமலர்க்குழாநிரந்தலர்ந்தநீரவே. (ரு0)

சுண்ணமாரிதூவுவார்தொடர்ந்துசேர்ந்துதோழிமார்
வண்ணவாரவளைநயங்குமுன்கைமேல்வணங்குவார்
நண்ணினாணெழிந்துசென்றுநம்பிமார்கண்முன்னரே
கண்ணிதம்மினென்றிரந்துகொண்டுநின்றுகண்ணுவார். (ருக)

பாடுவார்முரன்றபண்மறந் † தொர்வாறுபாடியு
மாடுவான்மறந்தணிமயங்கியாமையாடியுஞ்
சூடுவான்றொடுத்தகோதைசூழ்குழன்மறந்துகண்
ணுடுவாய்நிழற்கணிந்துநாணுவாருமாயினார். (ருஉ)

* கேழ்—நின்மை. † ஒருவாறு என்பதன்விகாரம்.

இட்டவில்லிரட்டையுமிரண்டுகெண்டைபோல்பவும்
விட்டிலங்குதொண்டையங்கனிப்பிழம்பொடுள்விராய்ச்
சுட்டிசூட்டணிந்துசூளிமைமணிசுடர்ந்துநீள்
பட்டம்வேய்ந்தவட்டமல்லதில்லைநல்லபாங்கெலாம். (ருங)

அலத்தகக்குழம்புதம்மடித்தலத்தொர்பாகமா
நிலத்தலத்தொர்பாகமாகநீடுவாயில்கூடுவார்
கலத்தலைத்தொகுத்தகோவைகண்ணெகிழ்ந்துசிந்தலான்
மலைத்தலைத்தழற்சிதர்ந்தபோன்றமாடவாயெலாம். (ருச)

பாடகந்துளங்கவும்பசும்பொனாலைமின்னவுஞ்
சூடகந்துளும்பவுஞ்சுரும்புசூழ்ந்துபாடவு
மூடகங்கசிந்தொசிந்துநின்றுசென்றுவந்துலாய்
நாடகங்கணன்னகர்க்கணங்கைமார்நவிற்றினர். (ருரு)

மாலையால்விளங்கியும்பொன்வாசச்சுண்ணம்வீசியுஞ்
சாலவாயிலாறுசந்தனக்குழம்புசிந்தியு
நீலவாணெடுங்கணார்நிரந்துநெஞ்சுதாழொரீஇ
ஞாலமாளுநம்பிமாரின்மாலுமாகிநண்ணினர். (ருசா)

வேய்மறிந்ததோள்விளர்த்துவெவ்வுயிர்ப்பொடுள்விராய்த்
தோமறிந்தசூழ்துகின்னெகிழ்ந்துடுத்துவீழ்ந்தசைஇப்
பூமறிந்ததேங்குழன்முடிப்பொதிந்துவீழ்த்துலாய்த்
தாமறிந்தமுல்லைவாயதாதுகுத்துடங்கினர். (ருஎ)

கொங்குவார்மலர்த்தடத்தமர்ந்தகோதைமாதகளோ
டங்கராகம்வீற்றிருந்தணிந்தவாரமாகுலாய்
மங்கைமார்கள்கண்ணும்வண்டுமாலையுமணங்களுந்
தங்குவாரினம்பிமார்கடானைசோலைசார்ந்ததே. (ருஅ)

மானளாயநோக்கினர்மனங்கலந்துபின்செல
வானளாயசோலைவாயின்மன்னவீரர்துன்னலுங்
கானளாயபோதணிந்துகாவிவிம்முகள்ளளைஇத்
தேனளாவுவண்டுகொண்டுதென்றல்சென்றெழுந்ததே. (ருக)

செம்முகப்பசும்பொனோடை சேர்மருப்பிணைக்கரும்
வெம்முகத்துவீழ்கடாத்துவேழநின்றிழிந்தபின்
கைம்முகத்துவேலிலங்குகாமர்தாங்கொலென்றுசென்
றம்முகத்ததும்பிவண்டுதேனொடாடியார்த்தவே. (௯0)

தாதுநின்றதேறனீர்தளித்திவற்றின்மேலளி
கோதுகின்றபோதுகொண்டுசிந்திநம்பிமார்களை
மாதுநின்றமாதவிக்கொடிகடந்தளிர்க்கையாற்
போதுகென்றிடங்கள்காட்டுகின்றபோற்பொலிந்தவே. (௯௧)

போதுலாயவேரியாரிசாரலாய்ப்பொழிந்துதேன்
கோதலானெரிந்ததாதுகால்குடைந்துகொண்டுமீஇ
மாதுலாயவண்டிரைத்துமங்குல்கொண்டுகண்மறைத்
தேதிலார்க்கியங்கலாவதன்றுசோலைவண்ணமே. (௯௨)

போதுலாயபூம்பொதும்பர்மேலதென்றல்வீசலாற்
றூதுலாயபோதணிந்துதாழ்ந்துதாமவார்குழன்
மாதரார்கள்போதவல்லியார்புபுல்லியைந்தரைக்
காதலால்வளைப்பபோன்றுகாவினுட்கலந்தவே. (௯௩)

புல்லிவண்டமர்ந்துதங்குபூந்தழைப்பொதும்பிடை
மல்லிகைக்கொடிக்கலந்துமௌவல்சூடவௌவுநீர்
வல்லிமண்டபங்கள்சென்றுமாதவிக்கொழுந்தணி
பல்லிமண்டபத்தயலசோகமாங்கணெய்தினார். (௯௪)

பஞ்சிலங்குமல்குலார்பலாண்டுகூறவாண்டுபோய்
மஞ்சிலங்கசோகநீழன்மன்னவீரர்துன்னலும்
விஞ்சையன்மகிழ்ந்தெழுந்துவென்றிவீரர்தங்களுக்
கஞ்சலித்தடக்கைகூப்பியார்வமிக்கிறைஞ்சினான். (௯௫)

ஆங்கவனிறைஞ்சலுமலர்ந்ததிங்கணீளொளிப்
பூங்கழற்பொலங்குழைப்பொலிந்திலங்குதாரினா
னீங்கருங்குணத்தினீவிர்நீடுகுரவராதலி
னீங்கெமக்குநீர்பணிந்ததென்னையென்றியம்பினான். (௯௬)

பானிறக்கதிர்நகைபரந்தசோதியானை
நீனிறக்கருங்கடனிகர்க்குமேனியானையும
வானெறிக்கண்வந்தவன்மகிழ்ந்துகண்மலர்ந்துத
ஞானெறிக்கண்மிக்கநீர்மையொக்கநின்றுநோக்கினன். (சுஎ)

வேல்கொடானைவீரர்தம்மைவிஞ்சையன்வியந்துநீ
ணூல்கொள்சிந்தைகண்கடாவநோக்கிநோக்கியார்கலன்
கால்கள்கொண்டுகண்ணிகாறுமுண்மகிழ்ந்துகண்டுகண்
மால்கொள்சிந்தையார்கள்போலமற்றுமற்றுநோக்கினன். ()

வேரிமாலைவிம்மவும்விளங்குபூண்டுளும்பவுந்
தாரொடாரமின்னவுந்தயங்குசோதிகண்கொள
வாரநோக்ககில்லனன்னனரசநம்பிமார்களைச்
சாரவாங்கொர்கற்றலத்திருந்துதான்விளம்பினன். (சுகூ)

செம்பொன்வானகட்டிழிந்துதெய்வயானையுண்மறைஇ
வம்புநீர்வரைப்பகம்வணக்கவந்தமாண்புடை
நம்பிமீர்கணுங்கள்பாதநண்ணிநின்றிறைஞ்சுவா
ரம்பொன்மாலைமார்பினீரருந்தவஞ்செய்தார்களே. (எo)

திங்கள்வெண்கதிர்ச்சுடர்த்ததிலதவட்டமென்றிரண்
டிங்கண்மாலுயிர்க்கெலாமெளிய்யவென்றுதோன்றலுந்
தங்கள்சோதிசாரலாவவல்லவன்னநீரவா
லெங்கண்முன்னைநுங்கடம்மையென்றுபின்னையேத்தினன்.

இமைகள்விட்டநோக்கமேறவின்னபோல்வசொல்லலு
மமைகமாற்றநும்மையெங்களடிகள்காணவேகுவாஞ்
சுமைகொண்மாலைதொடுகளிற்றெருத்தமேறுகென்றனர்
சிமைகொடேவர்போலநின்றுதிகழுகின்றசோதியார். (எஉ)

அம்பொன்மாலைகண்கவர்ந்தலர்ந்தசெல்வவெள்ளமேய்
வெம்புமால்களிற்றெருத்தம்விஞ்சையாளன்மேல்கொளப்
பைம்பொன்மாலைவார்மதப்பரூஉக்கையீருவாக்கண்மீச்
செம்பொன்மாலைமார்பர்சேர்ந்துதேவரிற்றுளும்பினர். (எங)

வே று.

கதிர்நகைக்கபாடவாயிற்கதலிகைக்கனகநெற்றி
மதிநகவுரிஞ்சுகோட்டமொளிகைநிரைத்தவீதிப்
புதுநகரிழைத்துமுந்துப்பொலங்கலத்தொகையும்பூவு
மெதிர்நகைத்துலகத்துமாதரெதிர்கொளநகரஞ்சேர்ந்தார். ()

விரைக்கதிரலங்கற்செங்கேழ்விண்ணியங்கொருவனோடும்
வரைக்கெதிர்ந்திலங்குமார்பின்மன்னவகுமரச்செல்வ
ரெரிக்கதிரேற்றைக்காலமெழுநிலாப்பருவமேக
நிரைத்தெழுமிருதுமன்றுநிரந்ததோர்சவியரானார். (எரு)

வார்கலந்திலங்குகொம்மைவனமுலைமகளிரிட்ட
வேர்கலந்தெழுந்ததூமவியன்புகைகமழுமிநான
நீர்கலந்துகுத்தமாலைநிறமதுத்துவலைசிந்தக்
கார்கலந்திருண்டபோலுங்கண்ணகன்றெருவுட்சென்றார். ()

தெளிர்முத்தமணலுஞ்செம்பொற் சுண்ணமுஞ்சிதர்ந்துதீந்
றளிர்முத்தமலரும்போதுஞ்சாந்தமுமுழக்கிவண்டா [தேன்
ரொளிர்முத்தமுறுவலார்தமுழைக்கலங்கலந்துமாலைக்
குளிர்முத்தநிழற்றுங்கோயிற்பெருங்கடைகுறுகச்சென்றார்.

மற்றவரடைந்தபோழ்தின்வாயிலோருணர்த்தக்கேட்டுக்
கொற்றவனருவிதூங்குங்குளிர்மணிக்குன்றம்போல
முற்றிநின்றிலங்குஞ்செம்பொன்முடிமிசைமுத்தமாலைக்
கற்றைகடவழச்சென்றோர்கனககூடத்திருந்தான். (எஅ)

மன்னவகுமரரோடும்விஞ்சையன்மகிழ்ந்துவையத்
தின்னருள்புரிந்தவேந்தனிறையறிந்தினிதினெய்திக்
கன்னவிறோளினான்றன்கழலடிதொழுதுநின்றா
னன்னவர்க்கிருக்கைத்தானமரசனுமருளிச்செய்தான். ()

வீரியக்குமரரோடும்விஞ்சையஞ்செலவனோடுங்
காரியக்கிழவர்சூழக்கவின்றுகண்குளிரத்தோன்றி
யாரியனலர்ந்தசோதியருங்கலப்பீடநெற்றித்
தாரகையணிந்துதோன்றுஞ்சந்திரவிசயனானன். (அ௦)

அல்கையிருளைவேந்தனம்பரசரனைநோக்கி
யுழுகுபசாரமாற்றமுரைத்தலுக்குரியகூறி
யிலகியகதிரவாகிவிளங்கொளிக்கடகக்கையான்
மலரகங்கழுமப்போந்துமன்மகிழ்ந்திருந்தபோழ்தின். (அக)

விஞ்சையனெழுந்துதங்கோன்வெள்ளிவேதண்டநோக்கி
யஞ்சலித்தடக்கைகூப்பியரக்கிலச்சினையின்வைத்த
வெஞ்சலிலோலைகாட்டவிறைமகன்குறிப்புநோக்கி
வஞ்சமில்வயங்குகேள்விமதிவரன்கரத்தில்வாங்கி. (அஉ)

நிகரிகந்தழகிதாகிநெரிவடுப்படாதவேழப்
புகர்முகப்பொறியதாயபுகழ்ந்தசொல்லகத்துப்போகா
மகரவாய்மணிக்கட்செப்பின்மசிகலந்தெழுதப்பட்ட
பகரரும்பதங்கணோக்கிப்பயின்றுபின்வாசிக்கின்றான். (அங)

போதனத்திறைவன்காண்கவிரதநூபுரத்தையாளுங்
காதுவேன்மன்னனோலைகழலவன்றனக்குநாளு
மாதியவடிசிலொண்கேழஞ்சனமுள்ளிட்டெல்லாந்
தீதுதீர்காப்புப்பெற்றுச்செல்கெனவிடுத்ததன்றே. (அச)

அல்லதூஉங்கருமமாவதலங்குதாரிவுளித்திண்டேர்
வல்லவனிளையநம்பிக்குரியளாவழங்கப்பட்டாள்
மல்லகமார்பினான்றன்மருமகளிவளைக்கூவி
வல்லிதிற்கொடுக்கமன்னன்வாழ்கதன்கன்னிமாதோ. (அரு)

என்றவனோலைவாசித்திருந்தனனிறைவன்கேட்டு
வென்றியம்பெருமைவிச்சாதரரென்பாரெம்மின்மிக்கா
ரின்றிவன்விடுத்தவிவ்வாறென்கொலோவென்றுசிந்தித்
தொன்றுமற்றுரைக்கமாட்டாதிருந்தனனுரங்கொடோளான்.

நீட்டருந்திலதக்கண்ணிச்செறிகழலரசர்கோமான்
மீட்டுரைகொடாதுசாலவிம்மலோடிருப்பநோக்கி
வாட்டரும்பெருமையெங்கோனோலையைமதியாவாறென்
றூட்டருங்கதத்தனாகிக்கேசரனுரைக்கலுற்றான். (அஎ)

மூன்னமோகருமம்வேண்டிமொழிபவேன்மனிதர் தமமா-
லென்னவரேனுமாகவிகழ்ந்திடப்படுபசீலா
மன்னதேயுலகவார்த்தையாவதின்றறியும்வண்ணம
மின்னவின்றிலங்குமவேலோய்நின்னுழைவிளங்கிற்றனறே.

பூவிரியுருவக்கணணிபபொலங்குழையிலங்குசோதித்
தேவரேயெனினுநதோனறச்சிலபகலசெலபவாயி
லேவரேபோலநோக்கியிகழ்நதுரைதலெழுவதனறே
மாவிரிதானைமனனுமனிதாதிபற்கையெனறுன. (அகூ)

வரைமலிவயங்குதோளாய்வியாதியானமயங்கினாகருச்
சுரைமலியமிாததிமபாலசுவைதெரிநதுணணலாமோ
விரைமலிவிளங்குபைநதாாவிஞ்சையாசெலவநதானு
நுரைமலிபொள்ளலயாக்கைமனிததாக்குநுகாலாமோ (கூ0)

அறவியமனத்தரன்றியழுங்குதலியலபினாக்குப
பிறவியையறுக்குஙகாடசிபபெருநிலையெய்தலாமோ
வெறிமயங்குருவக்கணணிவிஞசையாவிளங்குதான
மறவியினமயஙகிவாழுமனிததாக்குநிகழ்ததலாமோ. (கூக)

அருங்கடிகமழுநதாரையழிமதக்களிற்றினாற்றன்
மரங்கெடத்தினறுவாழுஙகளபக்குமதிக்கலாமோ
விரங்கிடுசிறுபுன்வாழ்க்கையிநிலத்தவாகடகென்றும
வரங்கிடநதெய்தலாமோமற்றெயாபெருமைமனனு (கூஉ)

உள்ளியமரங்கொள்சோலைமணமிசையுறைபுமாநத
ரொள்ளியரேனுநதக்கதுணாபவரிலலைபோலாம
வெள்ளியஞ்சிலம்பினெங்கோன்விடுத்ததேயேதுவாக
வெள்ளியோருரையுமீயாதிருநதனையிறைவவென்றுன். ()

ஆங்கவனுரைப்பக்கேட்டேயம்பரசரனைநோக்கித்
தேங்கமலழங்கன்மார்பசிவந்துரையாடல்வேண்டா
வோங்கியவோலைமாற்றக்குரியவாறுரைக்கமாட்டா
தீங்கியானிருந்ததென்றுனெரிசுடர்வயிரப்பூணன். (கூ௩)

வெஞ்சுடர்த்தெறு * தீவிச்சாதரரென்பர்மிக்கசீரார்
செஞ்சுடர்த்திலதக்கண்ணித்தேவரேதெரியுங்காலை
மஞ்சுடைமண்ணுள்வாழுமக்களுக்கவர்கடம்மோ
டெஞ்சியதொடர்ச்சியின்பமெய்துதற்கரிதுமாதோ. (கூரு)

ஈட்டியவூன்செய்யாக்கையெம்முறைமையின்னவாறு
வாட்டமில்வயங்குகண்ணிமணிமுடிமன்னனேலை
காட்டிநீயுரைத்ததெல்லாங்கனவெனக்கருதினல்லான்
மீட்டதுமெய்ம்மையாகவியந்துரைவிரிக்கலாமோ. (கூசு)

இன்னவனின்னநீரானின்னவேயெய்துகென்று
முன்னவன்செய்தமொய்ம்பின்வினைகளேமுயல்வதல்லாற்
பின்னவன்பிறந்துதன்னாற்பெறுதலுக்குரியவாய
துன்னுவதென்றுக்கான்றுதுணியுமோசொல்லவென்றான். ()

மெய்ப்புடைதெரிந்துமேலைவிழுத்தவமுயன்றுநோற்றார்க்
கொப்புடைத்துங்கள்சேரியுயர்நிலைச்செல்வமெல்லா
மெப்படிமுயறுமேனுமெங்களுக்கெய்தலாகா
தப்படிநீயுமுன்னர்மொழிந்தனையன்றேயென்றான். (கூஅ)

இறைவனுங்குரைத்தசொற்கேட்டென்னைபாவம்பொருந் தாக், கறையவாமொழிகள்சொன்னேன்காவலன்கருதிற்றே ரேன், பொறையினுற்பெரியன்பூபன் சிறியன்யானென்றுநா ணி, யறிவினுற்பெரியநீரானவிந்தனகதத்தனுனன். (கூகூ)

கிளர்ந்தொளிதுளும்புமேனிக்கேசரரோடுமண்மேல்
வளர்ந்தொளிதிவளும்பூணோர்மணவினைமுயங்கலில்லென்
றளந்தறிவரியசீரோற்கையமீதகற்றுகென்றாங்
குளர்ந்தனனுணர்வினாக்கியுரைக்கியவெடுத்துக்கூறும். ()

மஞ்சிவர்மணங்கொள்சோலைமணிவரைச்சென்னிவாழும்
விஞ்சையர்விச்சையாலேவிழுமியரென்பதல்லா
லஞ்சலிருனைவேந்தேமனிதரேயவரும்யாதும்
வெஞ்சுடர்விளங்குவேலோய்வேற்றுமையின்மைகேண்மோ.

* தீ, அறிவு.

மண்ணவின்முழவின்மாநீர்ப்பயபுரமுடையமன்னன்
பண்ணவில்களிநல்யானைப்பவனவேகற்குத்தேவி
கண்ணவில்வடிவிற்காந்திமதியவள்காதற்பாவை
வண்ணவிற்புருவவாட்கண்வாயுமாவேகையென்பாள்.(௧௦௨)

மற்றவளோடும்வந்தேன்மன்னயான்மருசியென்பே
னற்றமில்கேள்வியெந்தையஞ்சுமானென்னும்பேரான்
பெற்றதாயருசிமாலைபெருமகளருளினல்யான்
கற்றநூல்பல்லவாகுங்கருமணிக்கடகக்கையாய். (௧௦௩)

அலங்கைசாலாதிகாலத்தரசர்கடொடர்ச்சியெல்லா
முலகநூல்பலவுமோதியுணர்ந்தனனுரைப்பக்கேண்மோ
விலகியகதிரவாகிவிடுசுடர்வயிரக்கோலத்
திலதம்வீற்றிருந்தகண்ணித்திருமுடிச்செல்வவென்றான். ( )

ஆதிநாளரசர்தங்களருங்குலமைந்துமாக்கி
யோதநீருலகின்மிக்கவொழுக்கமுந்தொழிலுந்தோற்றித்
தீதுதீர்ந்திருந்தபெம்மான்றிருவடிசாரச்சென்று
நீதி * நூற்றுலகங்காத்துநிலந்திருமலரநின்றான். (௧௦௫)

பூசிநாட்சுரும்புபாயமுருகுடைந்துருக்குஞ்சோலைக்
காசிநாட்டரசன்செங்கோற்கதிர்முடிக்கச்சனென்பான்
மாசினற்கடலந்தானைமன்னமற்றவற்குத்தேவி
தூசினற்றிளும்புமல்குற்சுதஞ்சனைசுடரும்பூணாய். (௧௦௬)

வேய்ந்தகநிழற்றுங்கோதைமிளிர்மணிக்கலாபவட்டம்
போந்தகந்திகழ்ந்துமின்னுப்பூந்துகில்பொலிந்தவல்கு
லாய்ந்தகங்கமழுங்கோதையவள்பெற்றவரசசிங்க
நாந்தகக்கிழவர்கேசவேகமியென்பானலத்தின்மிக்கான். ( )

அங்கவனரசுவேண்டானறக்கடல்படைத்தநாதன்
பங்கயங்கமழுமேனிபவித்திரபரமயோகி
தங்கியதியானப்போழ்திற்றாழ்ந்துதன்றடக்கைகூப்பிப்
பொங்கியகாதல்கூரப்பாடினன்புலமைமிக்கான். (௧௦௮)

* நூற்றல்—கருதுதல்.

வேறு.

அழுகிலாஞானத்தகத்தடங்கநுங்கி
யுலகெலாநின்னுளொளித்தாயுநீயே
யொளித்தாயுநீயேயுயிர்க்கெலாங்கண்ணா
யளித்தாயுங்காத்தாயுநீயேவாழியறவேந்தே. (கoக)

அழுனுறும்வெங்கதிரோனணவலராது
நிழனுறுமூர்த்தியாய்நின்றாயுநீயே
நின்றாயுநீயேநிறைபொருளெல்லைக்கட்
சென்றாயும்வென்றாயுநீயேவாழிதிருமாலே. (கக0)

நிறைதருகேவலத்தோய்நின்னடியார்க்கெலலாங்
குறைதவிவின்பங்கொடுப்பாயுநீயே
கொடுப்பாயுநீயேயெங்குற்றேவல்வேண்டாய்
விடுத்தாயுநீத்தாயுநீயேவென்றபெருமானே. (ககக)

வேறு.

என்றவன்பாடக்கேட்டேயிறைஞ்சினகுறிஞ்சியேகா
நின்றனவிலங்குசாதிநிலங்கொண்டபறவையெல்லா
மன்றுமெய்ம்மறந்துசோர்ந்தார்கின்னரரமரர்தாழ்ந்தார்
வென்றவன்றியானத்துள்ளான்வியந்திலன்சிறிதும்வேந்தே.

மணிநிரைத்திலங்குந்தாரோய்மற்றவனுலோகநாதன்
குணநிரைத்திசைத்தகீதங்கேட்டலுமணிகொள்கோவைக்
கணநிரைத்திலங்குங்காய்பொன்முடிமிசையீரைஞ்ஞூறு
பணநிரைத்திலங்கப்புக்கான்பணதரரரசனன்றே. (ககஉ)

பன்னகருலகங்காக்கும்பாய்கதிர்ப்பசும்பொன்மேனி
மின்னவிர்வயிரச்சூட்டுவிடுசுடர்மணிப்பொழ்பூணன்
றன்னிகரிகந்ததோன்றல்சரணெனப்பரமன்பாத
மன்னர்கட்கரசன்முன்னேவலங்கொடுவணக்கஞ்செய்தான்.

தேந்துணரிலங்குகண்ணித்தேவனத்தேவர்கோனைத்
தீங்தொடைநரம்பின்றெய்வச்செழுங்குரல்கிலம்பவேத்தப்
பூந்துணர்க்கற்பலோகம்புடைபெயர்ந்திட்டபோற்று
வேந்துடைமானமெல்லாம்வேலினால்விடுத்தவேந்தே. ()

மாணடதன்னிலைமையுள்ளிவருபொருண்மெய்ம்மைநோக்கித்
தூண்டியசுடரினின்றதியானத்தைத்துளக்குவாய்போ
லீண்டுவந்திசைக்குற்றேவலெமிறையடிக்கட்செய்தாய்
வேண்டுவதெவன்கொலென்றான்மிடைமணிப்பூணினானே.

பண்மிசைபடாநதசிநதைப்பணதாற்பணிந்துமாற்றத்
துண்மிசைத்தொடாபுநோக்கியுறுபலியதனைக்கேளா
விண்மிசையவாகள்போலவேண்டியவிளைக்குஞ்செலவ
மண்மிசைபெறுவனுகமற்றிதென்மனத்ததென்றான். (கக௭)

இச்சையங்குரைபடக்கேட்டாங்கிமையவரியற்கையெய்தும
விச்சையுநதுணையும்வெள்ளிவிலங்கலுங்கொடுத்துவேந்தாய்
நிச்சமுநிலாகவென்றுநிறுவிப்போய்நிலத்தின்கீழ்க்த
னச்சமிலுலகஞ்சோநதானுயிரமபணத்தினானே. (கக௮)

ஆங்கவன்குலத்துளானெமமதிபதியவனோடொப்பா
வோங்கியகுலமுஞ்செலவப்பெருமையுமுடையைநீயு
மீங்கருங்குலத்துளீாக்குங்கருமமவந்திசைத்தபோழ்தி
னீங்கருநறுநெய்தீம்பாற்சொரிந்ததோரானீர்மைத்தென்றான்.

தங்குலத்தொடர்ச்சிகூறித் * தானவனிருந்தபோழ்தி
னுங்குலநிலைமையெலலாநூலினீயுணர்த்தவாறே
யெங்குலநிலைமையானுமுரைப்பனென்றெடுத்துக்கொண்டு
பொங்கலாபிணையலான்றன்புரோகிதன்புகலலுற்றான். ()

யாவனாற்படைக்கப்பட்டதுலகெலாம்யாவன்பாதத
தேவனால்வணக்கப்பட்டதியாவனதகலஞ்சேர்ந்து
பூவினுள்பொறியொன்றானுள்புண்ணியவுலகங்காண
வேவினன்யாவனம்மையாவனதுலகமெல்லாம். (கஉக)

மற்றவனருளின்வந்தான்மரகதமணிக்குன்றொப்பச்
சுற்றிநின்றிலங்குஞ்சோதித் † தோள்வலியெனும்பேரானக்
கொற்றவனுலகங்காத்தகோன்முறைவேண்டியன்றே
கற்றவரின்றுகாறுங்காவனூல்கற்பதெல்லாம். (கஉஉ)

---

* தானவன், மேலுலகத்தவன். † தோள்வலி, வாகுவலி.

கொடிவரைந்தெழுதப்பட்ட குங்குமக்குவவுத்தோளா
னிடிமுரசதிருந்தானையிறைதொழின்மகனுக்கீந்து
கடிமுண்மனுக்குந்தெய்வக்கழலடியரசர்தங்கண்
முடிபொரமுனிவிற்முன்போய்முனிவனமுன்னினுனே. ( )

விண்ணுயர்விளங்குகோட்டுவிடுசுடர்விளங்கமாட்டாக்
கண்ணுயர்கதலிவேலிக்கார்கயிலாயநெற்றி
புண்ணியக்கிழவன்போகிப்பொலங்கலம்புலம்பநீக்கித்
திண்ணியதியானச்செந்தீச்செஞ்சுடர்திகழநின்முன். (கஉ௪)

கழலணிந்திலங்குபாதங்கலந்தனகருங்கட்புற்றத்
தழலணிந்தெழுந்தவைவாயருமணியாடுநாகம
பொழிலணிந்தெழுந்தவல்லிபுதைந்தனபூமிநாதன்
குழலணிந்தெழுந்தகுஞ்சிகுடைந்தனகுருவிக்கூட்டம. ( )

அருமுடியரசர்தாழ்ந்தவடிமிசையரவமூரக்
கருவடிநெடுங்கணல்லார்கலந்ததோள்வலலிபுல்ல
மருவுடையுலகம்பாடல்வனத்திடைப்பறவைபாடத்
திருவுடையடிகணின்றதிறமிதுதெரியலாமோ. (கஉ௬)

வண்டவாங்குவளைக்கண்ணிமன்னர்தமகுடகோடி
விண்டவாம்பிணையலுக்கவிரிமதுத்துவலைமாரி
யுண்டவான்கழல்கள்சூழ்ந்ததிருவடியரவமூரக்
கண்டவாறிங்கணூர்க்குங்கருதுவதரிதுகண்டாய். (கஉஎ)

அடுக்கியவனிச்சப்பூவினமளிமேலரத்தச்செவ்வாய்
வடிக்கயனெடுங்கணூர்தம்வளைக்கையால்வளைத்தமார்பிற்
றொடுக்கியதொடுத்தபோலுந்துறுமலாக் * கத்திமாதா
கொடிக்கையாலிடுக்கறன்மேற்கொற்றவன்குலவப்பட்டான்.

புல்லியபொலங்கொம்பொப்பார்புலவியுட்கலவிசென்று
மெல்லியமாலைதம்மால்விசித்தலைவிடுத்துமீட்டு
மல்லுயரலர்ந்தமார்பின்மாதவிப்பேதையார்த்த
வல்லிகள்விடுக்கமாட்டாமனத்தினன்மன்னனுனன். (கஉ௯)

* கத்தி, குருக்கத்தியின்விகாரம்.

ஓவலில்குணங்களென்னுமொளிர்மணிக்கலங்கடாங்கித்
தேவர்களுலகமெல்லாஞ்செழுமணமுயர்ந்துகூட்டக்
கேவலப்பெண்ணெனன்பாளோர்கிளரொளிமடந்தைதன்னை
யாவியுளடக்கிப்பின்னையமரர்க்குமரியனானன். (கௗ0)

எங்கள்கோனிவன்கணின்றுமிக்குயர்குலத்துவேந்தா
தங்களோர்புறஞ்சொல்வாராத்தன்மையாலுலகங்காத்தா
ரங்கவர்வழிக்கட்டோன்றியகலிடம்வணங்கநின்ற
விங்கிவன்பெருமைநீயுமறிதியாலேந்தலென்றான். (கௗக)

சூடித்தொடரிரண்டுங்கேட்டேகுறுமயிரெறிந்துகண்ணுட்
பொடித்தநீர்த்திவலைசிந்தப்புகழ்ந்தனரிருந்தவேந்த
ரடுத்தெரியலர்ந்தசெம்பொனணிமணிமுடியினானங்
கெடுத்துரைகொடாதமுன்னங்கேசரனிதனைச்சொன்னான்.

இப்படித்தாயிற்பண்டையிசைந்ததுசுற்றமென்னை
யப்படியரியசெய்த * வடிகளெம்மரசனாய
கைப்புடையிலங்குசெவ்வேற்கச்சற்குமருகனாரென்
றெப்புடைப்புராணநன்னூலுரைப்பதியானறிவனென்றான்

மன்னவன்மனத்தினூற்றம்மிறைவனைவணங்கிவாழ்த்திப்
பின்னிவன்றன்னைநோக்கிப்பேசினன்பிறங்குதாரோய்
முன்னியவுலகநூலுங்குலங்களுமுறையுமுள்ளிட்
டின்னவூறறியுநீராரில்லைநின்போலவென்றான். (கௗச)

மந்திரக்கிழவர்கண்ணுமக்கடன்றாள்களாகச்
சுந்தரவயிரத்திண்டோடோழராச்செவிகளொற்று
வந்தரவுணர்வுநூலாவரசெனுமுருவுகொண்ட
வெந்திரமிதற்குவாயாத்தூதுவரியற்றப்பட்டார். (கௗரு)

ஆதிநூலமைச்சர்க்கோதுமாண்பெலாமமைந்துநின்றான்
றாதனுச்சொல்லிற்சொல்லாச்சூழ்பொருளில்லைபோலா
மேதிலார்க்காவதுண்டோவின்னனபுகுந்தபோழ்திற் [றான்.
கோதிலாக்குணங்கடேற்றிக் கொழித்துரைகொளுத்தலென்

* வாகுபலி.

மற்றிம்மாண்புடையநின்னையுடையவம்மன்னர்மன்ன
னெற்றை * நூற்றெய்தமாட்டானிதன்றிறநிற்கவெம்மைச்
சுற்றமாநினைந்துநின்னைத்தூதனுவிடுத்துச்செல்லப்
பெற்றியாம்பிறவிதன்னாற்பெறும்பயன்பெற்றதென்றான். ()

இன்றியானின்னைமுன்வைத்தினிச்சிலவுரைக்கல்வேண்டா
வொன்றியானுரைக்கற்பாலவுரையையுமுணர்திநீயே
வென்றியால்விளங்குதானைவிஞ்சையங்கிழவன்கண்ணு
நின்றியான்வாழ்வதல்லானினைப்பினியில்லைமன்னோ.(கந அ)

கொற்றவன்குறிப்பிதாயிற்கூவித்தன்னடியன்மாரை
யுற்றதோர்சிறுகுற்றேவற்குரியராய்க்கருதித்தானே
யற்றமிலலங்கல்வேலோனறிந்தருள்செய்வதலலான்
மற்றியானுரைக்குமாற்றமுடையனோமன்னற்கென்றான். ()

தூதன்மற்றதனைக்கேட்டேதொழுதடிவணங்கிச்செங்கோ
லேதமில்புகழினயானடிவலங்கொள்வனென்னப்
போதுசேரலங்கலானும்பொலங்கலம்பொறுக்கலாகாச்
சோதியசுடரச்சேர்த்திப்பெருஞ்சிறப்பருளிச்செய்தான். ()

அற்றைநாளங்குத்தாழ்ப்பித்தகனகர்ச்செல்வந்தன்னோ
டுற்றவனுவப்பகூறியுரிமைநாடகங்கள்காட்டிப்
பிற்றைநாட்குரவர்தம்மைப்பின்சென்றுவிடுமினென்று
மற்றவர்க்கருளிச்செய்தான்மருசியுநதொழுதுசென்றான. ()

வேறு.

உலனலனடுதிண்டோளூழிவேலோடையானைச்
சலநலசடியென்பேர்த்தாமரைச்செங்கணுன்றன்
குலநலமிகுசெல்கைக்கோவொடொப்பார்கள்வாழு
நலனமர்நளிசும்மைத்தொன்னகர்நண்ணினனே. (கசஉ)

தூதுவிடுசருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ருஎஉ.



* நூற்றல்—கருதுதல்.

ஏழாவது

# சீயவதைச்சருக்கம்.



மற்றமாநகர்மருசிபுக்கபின்
கொற்றவேலவன்கோயின்மாநெதி
முற்றுவான்கடைமூன்றுஞ்சென்றுகோன்
சுற்றுவார்கழறொழுதுதுன்னினான். (க)

விலங்குவார்குழைமிளிர்ந்துவில்விடக்
கலந்துமாமணிக்கடகமின்செய
வலங்கல்வேலினனங்கையாலவற்
கிலங்குமாநிலத்திருக்கையேவினான். (உ)

தொகுத்தமாண்புடைத்தூதன்மன்னவன்
வகுத்தமாமணித்தலத்தின்மேன்மனத்
தகத்தினாலமர்ந்திருப்பவாங்கவன்
முகத்தினாற்பொருண்முடிவுகண்ணினான். (ங)

தூதனின்முகப்பொலிவினாற்சுடர்க்
காதுவேலினன்கருமமுற்றுற
வோதிஞானிபோலுணர்ந்தபின்னது
கோதில்கேள்வியான்றொழுதுகூறினான். (ச)

வெல்கவாழிநின்வென்றிவார்கழல்
செல்கதீயனசிறக்கநின்புகழ்
மல்கநின்பணிமுடித்துவந்தனன்
பில்குமும்மதப்பிணர்க்கையானையாய். (ரு)

இங்குநின்றுபோயிழிந்தசூழலு
மங்குவேந்தனையணைந்தவாயிலும்
பொங்குதானையான்புகன்றமாற்றமுந்
தொங்கன்மார்பினாய்சொல்லுகேனெனா. (சு)

அள்ளிலைச்செழும்பலவினார்சுளை
முள்ளுடைக்கனிமுறுகிவிண்டெனக்
கள்ளுறைத்தொறுங்கழுமியூற்றறா
வள்ளிலைப்பொழின்மகிழ்ந்துபுக்கதும். (எ)

முள்ளரைப்பசுமுளரியந்தடத்
துள்ளிரைத்தெழுமொழிசெய்வண்டினங்
கள்ளிரைத்துகக்கண்டுவண்சிறைப்
புள்ளிரைப்பதோர்பொய்கைசார்ந்ததும். (அ)

நித்திலம்மணிநிரந்துவெள்ளிவேய்
பத்திசித்திரப்பலகைவேதிகை
சித்திரங்களிற்செறிந்துகாமனு
ரத்திரம்மெனவசோகங்கண்டதும். (கூ)

தண்ணிழற்சுடர்த்தபனியத்தினன்
மண்ணிழற்கொளமருங்குசுற்றிய
வெண்ணிழற்சுடர்விளங்குகற்றலங்
கண்ணிழற்கொளக்கண்டகாட்சியும். (கo)

சுரிந்தகுஞ்சியன்சுடருமேனிய
னெரிந்தபூணினனிலங்குதாரினன்
வரிந்தகச்சையனொருவன்வந்துவண்
டிரிந்துபாயவிங்கேறுகென்றதும். (கக)

மற்றவன்றனக்குரைத்தமாற்றமுங்
கொற்றவன்விடக்கொம்பனார்சில
ருற்றமங்கலக்கலங்களோடுடன்
முற்றவூண்டொழின்முடிந்தபெற்றியும். (கஉ)

பங்கயக்கணெண்பணிகொண்மாமுடித்
திங்கள்வண்ணனுஞ்செம்பொனீள்குழைப்
பொங்குவெண்டிரைப்புணரிவண்ணனு
மங்குவந்ததுமவர்கள்சொற்றதும். (கங)

நற்புறத்தனநாற்பதாம்வய
திப்புறத்தனவிளங்கருங்கைம்மா
மொய்ப்புறத்துமேன்முழங்குதானையோ
டப்புறத்தரசவையடைந்ததும். (கச)

மன்னவன்கழல்வணங்கிநின்றதும்
பின்னவன்றனுவிருக்கைபெற்றதும்
பொன்னிறப்பொறிபுகழ்ந்தசாதகந்
துன்னிவாசகந்தொழுதுகொண்டதும. (கரு)

ஓட்டிருனையாஞேலைவாசகங்
கேட்டமன்னவன்கிளர்ந்தசோதியன்
மீட்டோர்சொற்கொடாவிம்மிதத்தனு
யிட்டுமோனியாயிருந்தபெற்றியும். (கசா)

இருந்தமன்னன்மேலெடுத்தமாற்றமும்
வருந்திமற்றவன்மறுத்தவண்ணமும்
புரிந்துதொல்குலம்புகன்றபெற்றியு
மருந்தகைத்தொடாபமைந்தவாக்கமும. (கஎ)

பின்னைமன்னவன்பேணிநன்மொழி
சொன்னவண்ணமுஞ்சுற்றமாயதும்
பொன்னகைக்குலம்பொலிந்துகண்கொள
வின்னகைச்சிறப்பருளியீந்ததும. (கஅ)

அருங்கலக்குழாத்தரசன்றேவிமா
பெருங்குலத்தவர்பெயர்ந்துகண்டது
மொருங்குமற்றுளோருரைத்தவார்த்தையுஞ்
சுருங்கில்கேள்வியான்ருெழுதுசொலலினுன் (கக)

சொன்னவார்த்தையிஃதிருக்கச்சொல்லுவ
தின்னமொன்றுளதடிகள்யான்பல
மன்னர்தங்களைமகிழ்ந்துகண்டன
னன்னனீர்மயாரரசரில்லையே. (உ0)

கற்றநூல்பிறர்கற்றநூலெலா
முற்றநோக்கினுமுற்றநோக்கல
வுற்றநூலெலாமுற்றநூல்களாப்
பெற்றநூலவன்பெற்றிவண்ணமே. (உக)

எரியுமாணையான் குளிருமீகையான்
பெரியன்பெற்றியாற்சிறியன்ண்பிறு
லரியன்வேந்தர்கட்கெளியனுண்டையார்க்
குரியனோங்குதற்கோடையானையான். (உஉ)

எல்லைநீருலகினிதுகண்பட
வெல்லும்வேலவன்விளங்குதண்ணளி
யில்லையேலுலகில்லையாமென
நல்லனேயவனுமவேலினுய். (உ௩)

கற்றநூலினர்கலந்தகாதலா
லுற்றபோழ்துயிர்கொடுக்குமாற்றலாற்
கொற்றவேலவன்குடையினீழலார்
சுற்றமாண்பினர்சுடரும்வேலினுய். (உ௪)

கோதிலார்குலமக்கண்மாக்கண்மற்
றேதிலாரெனவியைந்ததின்மையா
ராதலாற்றமர்பிறர்களாவதங்
கோதிலாரவர்க்குள்ளஃதில்லையே. (உ௫)

வையமின்புறின்பன்னனின்புறும்
வெய்யதொன்றுறிற்றுனும்வெய்துறுஞ்
செய்யகோலினுய்செப்பலாவதன்
றையதாரினனருளின்வண்ணமே. (உ௬)

வீவிலுங்குநீர்வேலிவாழ்பவர்க்
காவியாபவரரசராதலாற்
காவலோவுங்கொல்லென்றுகண்படான்
மாவருனையம்மன்னர்மன்னனே. (உஎ)

மங்குன்மாமழைமாரிவண்கையான்
பொங்குகாதலம்புதல்வர்தாமுமற்
றிங்கண்வேந்தர்கட்கேனைமான்கண்முன்
சிங்கவேறெனச்செப்புநீரரே. (உஅ)

கையவார்சிலேக்காமனிங்கிரு
மெய்யினுல்வெளிப்பட்டனீரதால்
வையமாள்பவன்புதல்வர்வார்கழ
லேயன்மார்கடம்மழகின்வண்ணமே. (உகூ)

சங்கவண்ணனுர்தம்பிதானுநீர்
பொங்குகார்முகில்புரையுமேனிய
னங்கணிவ்வுலகாளாாட்டிய
மங்கலப்பொறிமன்னகாண்டியால். (௩௦)

செங்கண்மாலவன்றெய்வமார்பகம்
பங்கயத்துமேற்பாவைதன்னுட
னங்குலக்கொடிநங்கைசேர்வதற்
கிங்கன்மாதவமெவன்கொல்செய்ததே. (௩க)

நங்கையங்கவனலத்திற்கொப்பவ
ளிங்கிவட்குவேறேந்தலில்லிவர்
பொங்குபுண்ணியம்புணர்த்தவாறிது
வெங்கண்யானேயாய்வியக்குநீரதே. (௩உ)

என்றுகூறலுமேந்துநீண்முடி
வென்றிநீள்புகழ்வேகயானேயா
னன்றுமுற்றவற்கருளியீந்தன
னின்றுமின்சுடர்நிதியினீத்தமே. (௩௩)

மற்றவன்றனேமனேபுகப்பணித்
துற்றமந்திரத்தவர்களோடிருந்
தெற்றுநாமினிச்செய்வதென்றனன்
வெற்றிநீள்குடைவேந்தர்வேந்தனே. (௩௪)

செங்கணீண்முடிச்செல்வசென்றொரு
திங்களுளினுட்டிவிட்டனுங்கொரு
சிங்கம்வாய்பகத்தெறுவனென்பது
தங்குகேள்வியான்முன்முன்சொன்னதே. (௩௫)

ஆதலாலஃதறியும்வாயிலா
வோதுமாண்பிஞெருவனெற்றனுய்த்
தீதிருனேயாய்செல்லவைப்பதே
நீதியாமெனநிகழ்த்தினரரோ. (௩௬)

உய்த்துணர்ந்தவருரைத்தநீதிமேல்
வைத்தவொற்றினன்மன்னனனபி
னத்திறத்தினேயமர்ந்தசிந்தைய
னெத்தசுற்றமோடுவகையெய்தினன். (௩௭)

வேறு.

இத்திசைக்கணிவ்வாறிதுசெல்லுநா
ளத்திசைக்கணஞ்சப்படுமொழியா
னெத்திசைக்கும்வெய்யோனியன்முன்னுற
வைத்திசைத்தனமற்றதுங்கூறுவாம். (௩௮)

பஞ்சிமேன்மிதிக்கிற்பனிக்குந்தகை
யஞ்சிலோதியரம்முலைநாஞ்சிலா
மஞ்சுதோய்வரைமார்பமடுத்துழத்
துஞ்சலோவுந்தொழிலினனுயினன். (௩௯)

மூத்தவாணகைமொய்பவளத்துணி
யொத்தவாயமுதொண்கடிகைத்திரள்
வைத்தவாயினனுய்மடவார்கடஞ்
சித்தவாரிகளுட்சென்றுதங்கினன். (௪0)

ஆரந்தங்கியமார்பனுமந்தளிர்க்
காருங்கொம்பனேயாருங்கலந்துழித்
தாருங்கொங்கைகளும்பொரத்தாஞ்சில
வாரம்பட்டணிவண்டினமார்த்தவே. (௪௧)

வண்டுதோய்மதுவாக்கிவெள்ளத்தினுட்
கொண்டுகொம்பனேயார்கள்கொடுப்பவஃ
துண்டுமற்றவரொண்டுவர்வாயொளித்
தொண்டையங்கனியின்சுவையெய்தினன். (௪௨)

தாமமென்குழலார்தடங்கண்ணெனுந்
தேமயங்கியசெங்கழுநீரணி
காமமென்பதொர்கள்ளதுவுண்டரோ
யாமமும்பகலும்மயர்வெய்தினான். (சங)

சுற்றுவார்முலையார்தந்துகிற்றடம்
முற்றுமூழ்கும்பொழுதுமுனிவவ
ருற்றபோழ்துணர்த்தும்பொழுதும்மலான்
மற்றோர்போழ்திலன்மன்னவனாயினான். (சச)

மண்கனிந்தமுழவின்மடந்தையர்
கண்கனிந்திடுநாடகக்காட்சியும்
பண்கனிந்தவின்றீங்குரற்பாடலும்
விண்கனிந்திடவேவிழைவெய்தினான். (சரு)

வாவியும்மதுமண்டபச்சோலையுந்
தூவிமஞ்ஞைதுதைந்தசெய்குன்றமும்
பாவும்வெண்மணலும்புனற்பட்டமு
மேவுநீர்மையனாய்விளையாடினான். (சசா)

மின்னுஞ்செங்கதிர்மண்டிலம்வெய்தொளி
துன்னுந்திங்கட்பனிச்சுடர்தண்ணிது
வென்னுமித்துணையும்மறியான்களித்
தன்னனாயினனச்சுவகண்டனே. (சஎ)

சீறிற்றோர்ந்துணர்வின்றிச்செருத்திடு
மாறுண்டென்பதொர்மாற்றம்பொருள்மனந்
தேறின்யாரையுந்தேறுஞ்செருக்கொடிவ்
வாறுசென்றதவற்கரசென்பவே. (சஅ)

தோடுமல்குசுரும்பணிகோதையார்
கோடிமென்றுகிற்குய்யத்தடம்படிந்
தாடித்தன்னணையாமையிற்பூமக
ளூடலுற்றிடம்பார்த்துளளாயினள். (சகூ)

ஆங்கொர்நாளிறைபெற்றறிவின்கட
ருங்கினன்சதவிந்துவென்பானுள
னீங்கலாப்புகழான்றன்னிமித்திகன்
வீங்குவெல்கழலாற்குவிளம்பினன். (ருo)

மன்னகேள்வளேமேய்திரைமண்டிலந்
தன்னையாள்பவர்க்கோதினதங்கணை
பன்னிறுபகைக்குலமாமவை
முன்னம்வெல்கவென்றுன்முகநோக்கினன். (ருக)

தன்னைவென்றதண்டார்வயவேந்தனைப்
பின்னைவேறல் * பிறக்கரிதாதலான்
மன்னமற்றவனுளும்வரைப்பகம்
பொன்னின்மாரிபொழிந்திடுகின்றரோ. (ருஉ)

மாசிறண்டன்னதோண்மன்னமன்னிய
கோசிறண்டத்தனுய்விடிற்கொற்றவ
னேசிறண்டம்பரவவிவ்வையக
மாசிறண்டத்தனுயினிதாளுமே. (ருங)

பெற்றதன்முதலாப்பின்பெறுகதுஞ்
சுற்றிவந்தடையும்படிசூழ்ந்துசென்
றுற்றவான்பொருள்காத்துயர்கையுங்
கற்றவன்பிறர்காவலனுகுவான். (ருச)

அருக்கன்றன்னறிவாகவலர்ந்தநீர்த்
திருக்கவின்றசெல்வச்செழுந்தாமரை
செருக்கெனப்படுந்திண்பனிவீழுமேன்
முருக்குமற்றதனைமுகத்தாரினய். (ருரு)

இகழ்ச்சியிற்கெடுவார்களையெண்ணுக
மகிழ்ச்சியுண்மதிமைந்துறும்போதெனப்
புகழ்ச்சிறாலுட்புகன்றனர்பூவினுட்
டிகழ்ச்சிசெம்பொன்மணிமுடிமன்னனே. (ருசா)

* பிறக்கு, அசை.

நெறியினீதிக்கணேரிவையொப்பவு
மறிதிரீயவைசிறக்கவழன்றுசீ
செறுதியேனுஞ்செம்பொன்முடிமன்னவோ
ருறுதியானுரைபபானுறுகின்றதே. (ருஎ)

என்றலும்மிணர்வேப்முடிமாலையா
னன்றுசொலலுகவென்றுநகைமணிக்
குன்றமன்னதிணடோணமிசைக்குண்டலஞ்
சென்றுமின்சொரியச்செவிதாழ்த்தினன். (ருஅ)

பூமிமேற்புரிசைமதிற்போதன
நாமநன்னகராளுநகைமலாத்
தாமநீண்முடியான்றன்புதலவர்கள்
காமவேளனையாருளாகாணடியால். (ருகூ)

ஏந்துதோளவருள்ளிளையானமக்
காய்ந்ததொலபகையாகுமென்றேயுறப
போந்தொாபுன்சொன்னிமித்தமபுறப்பட
வேந்தயான்மனத்தின்மெலிகெனரோ. (சூ0)

மூத்தநீண்முடியாய்முன்னமற்றதற்
கொத்தவா * றுணாநதிபெனவென்செயும
மைத்தகைமனத்தான்மனித்தன்னெனக்
கைத்தலங்கதிாவீசமறித்தனன். (சூக)

மிகையின்வநதவிச்சாதரவேந்தாதந்
தொகையைவென்றவெனறோதுலங்கபிற
பகையினிப்படர்ந்தென்செயுமென்றனன்
நகைகொணீணமுடிநச்சரவம்மனன். (சூஉ)

மாசிலாலவட்டத்தெழுமாருதம்
வீசவிண்டொடுமேருத்துளங்குமோ
பேசின்மானிடப்பேதைகளாற்றலா
லாசிறேளிவைதாமசைவெய்துமோ. (சூங)

* உணார்நீ, உணர்ந்தருள்.

வேழத்தின்மருப்புத்தடம் * வீறுவ
வாழைத்தண்டினுளூன்றமழுங்குமோ
வாழித்தானவர்தானையையட்டவென்
பாழித்தோள்மனித்தற்குப்பணியுமோ. (௬௪)

வேகமாருதம்வீசவிண்பாற்சிறு
மேகசாலம்விரிந்தெதிர்செல்லுமோ
† வேகமாயவென்சீற்றமஞ்சாதெதி
ராகமானுடர்தாமசைகிற்பவோ. (௬௫)

குலிசமிந்திரன்கொண்டுபணிக்குமேன்
மலையின்மாசிகரங்களும்வீழ்த்திடு
நிலையவெஞ்சுடராழிநினைப்பனேற்
றொலைவில்வானவர்தோளுந்துணிக்குமே. (௬௬)

விச்சைமற்றவர்தம்மைவிடுப்பதோ
ரிச்சையென்கணுண்டாமெனின்யாவரே
யச்சமின்றிநிற்பாரந்நிமித்தநூல்
பொச்சலாங்கொல்புலந்தெழுநீர்மையாய். (௬௭)

புலவர்சொல்வழிபோற்றிலனென்பதோ
ரலகில்புன்சொலுக்கஞ்சுவனல்லதே
லுலகமொப்பவுடன்றெழுமாயினு
மலைவன்மற்றதன்கண்மதிப்பில்லையே. (௬௮)

ஆதலாலதற்கேற்றதமைச்சர்க
ளோதியாங் ‡ குணர்ந்தீகவென்றொட்டினான்
யாதுந்தன்கணல்லார்செயற்கேன்றதோ
ரேதமுண்டெனுமெண்ணமில்லாதவன். (௬௯)

அலங்கலாழியினானதுகூறலுங்
கலங்குறாற்கருமத்தொழின்மாக்கடாம்
புலங்கொள்சூழ்ச்சியராகிப்புகன்றன்
றலங்கொடோளவனுக்குணர்வாயினார். (௭0)

* வீறுவ, கீறுவ. † ஏகம், ஒப்பற்றது. ‡ உணர்ந்தீக, உணர்ந்தருள்க.

எரியுந்தீத்திரளேட்டிணைத்தாயினுங்
கரியச்சுட்டிடுங்காந்திக்கனலுமேற்
றெரியிற்றேல்பகைதான்சிறிதாயினும்
விரியப்பெற்றபின்வென்றிடுகிற்குமே. (எக)

முட்கொணச்சுமரமுளையாகவே
யுட்கிள்க்கினுகிரினுங்கொல்லலாம்
வட்கிநீண்டதற்பின்மழுவுந்தறு
கட்குடாரமுந்தாங்களைகிற்பவோ. (எஉ)

சிறியவென்றிகழார்பகைசென்றுசென்
றறியலாவவன்றேலணிமாமலர்
வெரியும்வேரியும்விம்மிவிரிந்துதேன்
செறியுந்தொங்கற்செம்பொன்முடிமன்னனே. (எக)

அஞ்சிநின்றவர்கூறியபின்னரி
மஞ்சுவென்பவன்சொல்லுமற்றாங்கவன்
செஞ்செவேபகையாமெனிற்றேர்ந்துகண்
டெஞ்சிறேல்புகழாய்பின்னையெண்ணுவாம். (எச)

பகையலாதவரைப்பகையாக்கலு
நகையிறீமனத்தாரைநண்பெண்ணலு
முகையின்வேய்ந்தமென்மொய்ம்மலர்க்கண்ணியாய்
மிகையின்மற்றவைபின்னைவெதுப்புமே. (எரு)

அறியத்தேறுந்திறத்ததெவ்வாறெனிற்
றிறையிற்கென்றுவிடுதும்விட்டாற்றிறை
முறையிற்றந்துமுகமன்மொழிந்தெதிர்
குறையிற்கொற்றவகுற்றமங்கில்லையே. (எசா)

என்றலும்மிதுநன்றெனவேந்தொளி
நின்றநீண்முடிநீடிணர்க்கண்ணியான்
சென்றுதூதுவர்தாந்திறைகொள்கென
வென்றிவேலவன்மேல்விடையேயினன். (எஎ)

உள்ளட்டரக்குண்டகோலரொண்கோலத்த
ரோட்டரும்பொறிமெற்றியவோலையர்
நாட்டியம்புணர்வாரொருநால்வர்சேண்
மேலிட்டெழுமின்முகிலசூழ்நெறிமுன்னினார். (எஅ)

வேறு.

தீதறுதென்மலைமாதிரமுன்னுடு
தூதுவர்சூழ்சுடர்சூழ்யசூளிகை
யோதினரோதியுலப்பறவோங்கிய
போதனமாநகர்புக்கனரன்றே. (எகூ)

செஞ்சுடர்மின்னொளிசென்றுதிபாத்திட
மஞ்சொடுவைகியமாமணிமாளிகை
வெஞ்சுடர்வீதிவிலக்குவகண்டுதம்
விஞ்சையர்செல்வம்வெறுத்தனரன்றே (அ௦)

மூரிமுழாவொலிவிம்மிமுரன்றெழு
காரிமிழார்கலியான்மயிலாலுவ
சோரிமுழாமுழவிற்றெருதுற்றபின்
சீரிமிழாற்பொலிவெய்தினாசென்றே. (அக)

சூளிகைசூடியசூலவிலைந்தலை
மாளிகைமேன்மழைமாமுகிலபோழ்தலி
னீளியநீருவித்திரள்வீழ்வன
காளைகடாதைநகாப்பலகணடாா. (அஉ)

கூடுநர்கோவைமணிக்கலையுக்கவு
மூடினர்சிந்தியவொண்சுடர்மாலைபு
மூடியமூரிநெடுந்தெருவொப்பவு
மூடுசெலற்கரிதாயிடருற்றார். (அங)

மூரிநடைக்களிமொய்யின்மதத்தினொ
டேரியினக்கலிமாதம்விலாழியு
* மோரிநுரைப்பவுகுத்தபெருங்கடை
வேரிவெறிக்களமொப்பதுகண்டார். (அச)

* ஓரி, விலங்கின்படுக்கை.

வண்டுபடக்குவளைப்பிணைவாயலர்
விண்டுமரைப்பதிமே * லனமாமதர்
கொண்டுநடைஇக்களிகூரவிரைப்பதொர்
மண்டுபுனற்புரிசைக்கரைவந்தார்: (அ௫)

கோயின்முகத்ததுகோடுயர்சூளிகை
வேயின்முகத்திரண்மாமழைவீழ்வது
ஞாயின்முகத்தநகைத்திரண்முத்தணி
வாயின்முகத்துமடுத்திதுசொன்னார். (அ௬)

வேய்தலைநீடியவெள்ளிவிலங்கலி
† னோய்தலிலொண்சுடராழியினான்றமர்
வாய்தலினின்றனர்வந்தெனமன்னன்மு
னீதலைசென்றுரைநீள்கடைகாப்போய். (அ௭)

என்றவர்கூறவிருங்கடைகாவல
னன்றெனநாறொளிநீள்முடியானடி
மன்றவணங்கிமொழிந்தனன்மன்னனு
மொன்றியபோதகவென்பதுரைத்தான். (அ௮)

பொன்னவிர்நீள்கடைகாவலன்போதக
வென்னலினெய்திலங்கொளிநீண்முடி
மன்னவன்வார்கழல்வாழ்த்திமடக்கிய
சொன்னவிலோலைகைதொழுதனரீந்தார். (அ௯)

வாசகன்மற்றதுவாசினைசெய்தபின்
மாசகனீண்முடிமன்னவன்முன்னிலை
தேசகமூசியவாழியன்சீர்த்தம
ரோசைகளோலைகொடொப்பவுரைத்தார். (௯0)

ஊடகமோடியெரிந்தொளிமுந்துறு
மாடகமாயிரகோடியுமல்லது
சூடகமுன்கையர்தோடகமெல்லடி
நாடகராயிரநாரியர்தம்மையும். (௯௧)

---

* அன்னந்நோக்கது. † ஆய்தலிலென்றும்பாடம்.

தெண்டிரைசிந்தியசங்கொடுசெங்கதி
ரெண்டராளம்பவழக்கொடியீட்டமுங்
கண்டிரண்முத்தொடுகாழகிலந்துகில்
பண்டருநீர்னவும்பலபண்டமும். (கூஉ)

வெண்கதிர்முத்தகில்வேழமருப்பொடு
கண்கவர்சாமரைவெண்மயிரின்கணந்
தண்கதிர்வெண்குடையாய்தரல்வேண்டுமிஃ
தொண்சுடராழியினுனுரையென்றார். (கூஙூ)

வேறு.

வேந்தனமற்றதனைக்கேட்டேவேற்றுவனெறிந்தகல்லைக்
காந்தியகந்தாகக்கவுட்கொண்டகளிறுபோலச்
சேந்தவருளைரத்தமாற்றஞ்சிந்தையுளடக்கிவைத்து
நாந்தகக்கிழவர்கோமானயந்தெரிமனத்தனானன். (கூச)

கருத்துமாண்குலனுந்தேசுங்கல்வியும்வடிவுந்தம்மிற்
பொருத்தினற்பழிக்கலாகாப்புலமைமிக்குடையரேனு
மொருத்தனுக்கொருத்தன்கூறக்கேட்டுற்றுச்செய்துவாழந்
திருத்தினனிறைவனேகாண்செய்வினைக்கிழவனென்பான். ( )

மதியினைமலரச்சூழ்ந்துவருந்தித்தாம்படைக்கப்பட்ட
நிதியினைநுகர்துமென்றநினைத்தினிதிருந்தபோழ்திற்
பதியினைக்கலக்கிச்சென்றுபறித்துத்தாம்பிறர்க்குநீட்டும்
விதியினைவிலக்கமாட்டாமெலிபவால்வெளியநீரார். (கூஞ)

ஒளியினற்பெரியனுயவொருவனுக்குவப்பச்செய்தோ
ரளியினல்வாழ்துமென்னுமவாவினுளழுந்துகின்றுந்
தெளியநாமிதனைக்கண்டுஞ்செய்வினைத்திறங்களோரா
மளியமோவளியஞ்சாலவறிவினற்பெரியமேகாண். (கூஎ)

அன்றுநாமுயலப்பட்டவினைகண்மற்றனையவாக
வின்றுநாமவலித்தென்னையினிச்செய்வதெண்ணினல்ல
வென்றியான்விளங்குமாழியவர்கட்குமேலைவேந்த [ன்றே.
ரொன்றியாங்குவப்பித்தாண்டதுரைப்பக்கேட்டுணர்ந்தாம

என்றுதன்மனத்தினெண்ணியிலங்குகோற்கையராகி
நின்றகேசரரைநோக்கிநிலமன்னனனைப்சொன்னார்க்
கொன்றியாமிங்கணுள்ளதொருப்படுத்துய்ப்பக்கொண்டு
சென்றுநும்மிறைவர்க்கெம்வா யின்னுரைதெரிமினென்றான்.

ஆளிகட்கரசனன்னவரசர்கோனதனைக்கூறி
வாளிவிற்றடக்கைவெம்போர்மணிவரையனையமார்பிற்
காளைகளிதனைக்கேட்பிற்கனல்பவாலிவரையின்னே
மீளுமாறமைப்பனென்றுவேண்டுவவிதியினீந்தான். (கOO)

செய்யவாய்ப்பசும்பொனோலைச்சீறடிப்பரவையலகு
லைய நுண்மருங்குநோவவடிக்கொண்டகுவவுக்கொங்கை
வெய்யவாய்த்தண்ணெனீலம்விரிந்தெனவிலங்கிநீண்ட
மையவாமழைக்கட்கூந்தன்மகளிரை வருகவென்றான். ( )

அணிமுழாவனையதோளானருளியதறிந்தபோழ்தின்
மணிமுழாச்சிலம்பக்கொண்டமண்டலவரங்கினங்கட்
குணிமுழாப்பெயர்த்தபாணிகுயிற்றுதலிலயங்கொண்ட
கணிமுழாமருங்குற்பாடற்கலிப்பிவைதவிர்த்துச்சென்றார்.

மஞ்சிடைமதர்த்தமஞ்ஞைவான்குழாமென்னவாங்கண்
வெஞ்சுடர்விளங்குமாடத்திடைநிலைவிரவித்தோன்றி
வஞ்சிநன்மருங்குனோவமணிநகைக்கலாவமின்னச்
செஞ்சுடர்ச்சிலம்புபாடத்தேன்றிசைபரவச்சேர்ந்தார். ( )

மாடலாமெரிந்துமின்னும் வயிரக்குண்டலத்தோடம்பொற்
றோடுலாந்துளங்கித்தோன்றுஞ்சுடிகைவாண்முகத்துநல்லார்
பாடலாநரம்பின்றெய்வம்படிவங்கொண்டனையநீரா
ராடலாலரம்பையொப்பாரவரிலாயிரரையீந்தான். (கOச)

காய்ந்தொளிபவழச்சாதிக்கடிகைகள்காணமின்னுப்
பாய்ந்தெழுசுடர்ச்சங்கீன்றபருமணித்தரளக்கோவை
யேய்ந்தெழிற்காகதுண்டமருப்பிணைகவரிக்கற்றை
யாய்ந்தெழின்மகரப்பூணுனுவப்பனவனைத்துமீந்தான். ( )

அஞ்சுடர்வயிரப்பூணைனருளினன்விடுப்பவாங்கண்
விஞ்சையர்விமானங்தோற்றமேலருங்கலங்களேற்றிச்
செஞ்சுடர்த்திலகச்செவ்வாய்மகளிரைவிமானஞ்சேர்த்திக்
கஞ்சிகைமறைக்கும்போழ்திற்காளைகளதனைக்கண்டார். ( )

என்னிதுவிளைந்தவாறித்தூதுவர்யாவரென்று, கன்னவி
ல்வயிரத்திண்டோட்கடல்வண்ணன்வினவயாருஞ், சொன்
னவின்றுரைக்கமாட்டார் துட்கென்றுதுளங்கவாங்கோர்,
கொன்னவில்பூதம்போலுங்குறமகளிதனைச்சொன்னாள். ( )

அறைகழலரவத்தானையச்சுவக்கிரீவனென்பா
னிறைபுகழாழிதாங்கிநிலமெலாம்பணியநின்றான்
றிறைதரவேண்டுமென்றுவிடுதரச்செருவந்தானை
யிறைவனுமருளிச்செய்தானிதுவிங்குவிளைந்ததென்றாள். ( )

வேறு.

திறைக்கடனென்னுமத்தீச்சொற்கேட்டலு
நிறைக்கடனிரம்பியநெஞ்சத்தீங்கலுண்
முறைக்கடமுளைப்பதோர்முனிவினொள்ளெரி
கறைப்படுபடையவன்கனலமூட்டினான். (௧௦௯)

முடித்தலைமுத்துதிர்ந்தாங்குநெற்றிமேற்
பொடித்தனசிறுவியர்ப்புள்ளியொள்ளெரி
யடுத்தெழுசுடரகத்துக்கநெய்த்துளி
கடுத்தசெங்கண்ணுநீர்த்திவலைகான்றவே. (௧௧௦)

படத்திடைச்சுடர்மணிதீண்டப்பட்டெரி
கடுத்திடுமரவெனக்கனன்றநோக்கமோ
டடுத்தெரிந்தழனகைநக்குநக்கிவை
யெடுத்துரைகொடுத்தனனிளையகாளையே. (௧௧௧)

உழுதுதங்கடன்கழித்துண்டுவேந்தரை
வழிமொழிந்தின்னணம்வாழுமாந்தர்போ
லெழுதியதிறையிறுத்திருந்துவாழ்வதே
வழகிதுபெரிதுநம்மரசவாழ்க்கையே. (௧௧௨)

நாளினுந்திறைநுமக்குவப்பத்தந்துநா
டாளுந்துமன்றெனிலொழிதுமேயெனிற்
றோளினுந்தொடுகழல்வலியினுமிவ்
வாளினும்பயனெனைமயரிமாந்தர்காள். (௧௧௩)

விடமுடையெரிக்கொடிவிலங்குநோக்குடை
யடலுடைக்கடுத்தொழிலரவினூரழற்
படமுடைமணிகொளக்கருதிப்பார்ப்பதோர்
மடமுடைமனத்தனம்மயரிமன்னனே. (௧௧௪)

இருங்கலிப்படையினுமிகலினுமெம்
மருங்கலமிவைபெறற்கரியதாவதோர்
மருங்குளதெனினதுமகளிராற்சில
பெருங்கலந்தாங்கினூற்பெறலுமாகுமே. (௧௧௫)

பாழியான்மெலிந்தவர்திறத்துப்பண்டெலா
மாழியால்வெருட்டிநின்றடர்த்திர்போலுமஃ
தேழைகாளினியொழிந்திட்டுச்செவ்வனே
வாழுமாறறிந்துயிர்காத்துவாழ்மினே. (௧௧௬)

அன்றெனிற்றிறைகொளக்கருதினுங்கொரு
குன்றின்மேற்பெறுவதென்வந்துகொள்கயா
னின்றுதன்னெஞ்சகநிறையவீழ்வன
வென்றியம்பகழியும்விசும்புமீவனே. (௧௧௭)

இறைவனைமகளிர்போற்கழறியென்னையெங்
குறையிதுகூறுமின்சென்றுதூதிர்கா
டிறையினைமறுத்தவர்திறத்துச்செய்வதோர்
முறையுளதெனினதுமுயன்றுகொள்கவே. (௧௧௮)

உட்கவாங்குரைத்தலுமொளிர்பொன்மாழையுங்
கட்கமழ்கோதையர்கணமுமீண்டுது
வட்கிநம்மிறைவற்குவலிதுதெவ்வெனத்
துட்கெனுமனத்தினர்தூதரேகினார். (௧௧௯)

வேறு.

போகியதூதர்தங்கோன்பொலங்கழறொழுதலஞ்சி
யாகியதறிந்துசூழுமரிமஞ்சுவவனைக்கண்டே
யேகியபுகழினானைக்கண்டதுமீயப்பட்ட
தோகையஞ்சாயலார்தங்குழாங்களுநெறியுஞ்சொல்லி. ( )

மீட்டிளங்குமரர்கண்டுவிடுசுடரிலங்கநக்கு
மோட்டிளங்கண்ணிதீயமுனிந்தழன்முழங்கநோக்கி
யூட்டிலங்குருவக்கோலோர்தங்களுக்குரைத்ததெல்லாங்
கோட்டிலங்குருவந்தொங்கலமைச்சற்குச்சொல்லிவிட்டார்

அரும்பெறலறிவன்செல்வனரிமஞ்சுவதனைக்கேட்டே
யிரும்பகையதனைக்கேட்பிற்பெரியவன்சிறிதுநோனா
னிரும்பகையிதனையென்கொல்விலக்குமாறென்றுதானே
சுரும்பிவர்தொடையன்மார்பன்சூட்சிகொண்மனத்தனானான்

மின்றொடார்ந்திலங்குபூணான்விளைவுறுவிளைமைதன்னா
னன்றுதீதென்னுந்தேர்ச்சிநவின்றிலனாதலால்யா
னொன்றவோர்மாயங்காட்டியுளைவித்துக்குறுகவோடிக்
குன்றிடைச்சீயந்தன்மேற்கொளப்புணர்த்திடுவனென்றான்.

அன்னணமனத்தினாலேயிழைத்தரிகேதுவென்னு
மின்னணங்குருவப்பைம்பூண்விஞ்சையன்றன்னைக்கூவிக்
கன்னவிற்றோளினாற்குக்கருமமீதென்றுகாட்டி
மன்னுமோர்மாயச்சீயமாகெனவகுத்துவிட்டான். (கஉ௪)

ஒள்ளெரிநெறிப்பட்டன்னசுரியுளைமலைகண்போழும்
வள்ளுகிர்மதர்வைத்திங்கட்குழவிவாளெயிற்றுப்பைங்க
ணுள்ளெரியுமிழநோக்கியுருமெனவதிரும்பேழ்வாய்க்
* கொள்ளரியுருவுகொண்டான் கொடியவன்கடியசூழ்ந்தான்.

இலைத்தடஞ்சோலைவேலியிமவந்தமடைந்துநீண்ட
சிலைத்தடந்தோளினார்தஞ்சிந்துநாடதனைச்சேர்ந்து
மலைத்தடம்பிளந்துசிந்தமண்புடைபெயரமுந்நீ
ரலைத்துடன்கலங்கிவிண்பாலதிரநின்றுரறியிட்டான். (கஉ௬)

---

* கோளரியின்விகாரம்.

பொடித்தலைபுல்ம்பிக்கானம்போழ்ந்துபோநெரிந்துவீழ
வடித்தலைகலங்கிவேழம்பிடிகளோடலறியாழப்
புடைத்துழிப்பதடிபோலத்துறுகற்கள்புரண்டுபொங்க
விடித்தலின்மனித்தரெல்லாமெயிறுறவிறுகிச்சோர்ந்தார். ( )

அப்படியவனையவ்வாறமைத்தபினமைச்சனுங்கண்
மெய்ப்புடைதெரிந்துசொன்னதூதுவரவரைமீட்டே
யிப்படியிவைகள்சொல்லிப்பெயர்மினீரென்றுவென்றிக்
கைப்படைநவின்றவெம்போர்க்காளையைக்கனற்றவிட்டான்.

வேறு.

ஆங்குந்தூதுவரதிர்முகிலாறுசென்றிழிந்து
பூங்கட்டேமொழிப்போதனத்திறைவன்றன்புதல்வர்
வீங்குபைங்கழல்விடுசுடர்மிடைமணிப்பூணோ
ரோங்குதானையோடலப்போந்தவிடஞ்சென்றீதுரைத்தார்.

திறையின்மாற்றமுந்திறையினைவிலக்கியதிறமுங்
குறையென்றெங்களைக்குமரநீபணித்ததுங்கூற
வறையும்பைங்கழலாழியந்தடக்கையெம்மரைச
னறையுங்குஞ்சியானன்றுநன்றெனச்சொல்லிநக்கான் (௧௫௦)

தளையின்விண்டுதேன்றயங்கியதடங்கொடார்மார்ப
விளையையென்பதுமெங்கள்வாய்க்கேட்டபினிறைவ
ளொளியும்மாற்றலுந்தன்கணென்றுள்ளதுநினையா
னளியன்பிள்ளைதானுரைத்தவென்றழன்றிலனமர்ந்தான். ( )

அறியுமாயிற்றனரும்பெறனுட்டினையரிய
வெறியுமின்னுருமெனவிடித்திறுவரைமுழையு
ளுறையுங்கோளரியொழிக்கலாநமக்குவந்தீயுந்
திறையுமீட்கியவலித்தவச்செருக்குடைச்சிறியோன். (௧௫௨)

என்றுமற்றதுமொழிமினென்றுரைத்தெமைவிடுத்தா
னென்றமாற்றமஃதிசைத்தலுமிளையவனென்னே
சென்றநாட்டகஞ்சிலம்பனின்றிடித்துயிரலறக்
கொன்றோர்கோளரிகொடுமுடியுறைவதோவென்றான். ( )

உரைதுவாழிநின்னெஞ்சபுனற்சிந்தூனன்னாட்டிற்
களைதல்யாவர்க்குமரிதுகனமணிக்குன்றி
னுள்ளதுகோளரியுருமெனவிடித்துயிர்பருகி
யளவிலாமுழையுறைகின்றத்திகளென்றுரைத்தார். (கரு௪)

ஆயின்மற்றதனருவரைப்பிலமெனவகன்ற
வாயைப்போழ்ந்துடலிருபிளப்பாய்வகுத்திடுவ
னேயிப்பெற்றியேவிளைத்திலனுயினும்வேந்தன்
பேயிற்பேசியபிள்ளையேயாகென்றுபெயர்ந்தான். (கரு௫)

புழற்கைத்திண்ணுதிமருப்பினபொருகளிறிவைதா
நிழற்கணேக்கிநின்றழன்றனநிலையிடம்புருக
வழற்கணுறுபவடுபடைதொடுதலையடியாத்
தொழிற்கணுளருந்தவிர்கெனச்சூளுற்றுமொழிந்தான். ( )

இவருமாமணிக்கொடுஞ்சிலைபிவுளித்தேர்காலாள்
கவரிநெற்றியபுரவிதங்காவிடம்புருக
வெவருமென்னெடுவரப்பெறார்தவிர்கெனவெழில்சே
ருவரிநீர்வண்ணனுழையவரொழியுமாறுரைத்தான். (கருஎ)

நகரமாசனமிரைப்பதுதவிர்த்தபினளிநீர்ப்
பகருமாகடல்படிவங்கொண்டனையவன்படரச்
சிகரமால்வரைதெளிந்தனன்றிருவமார்பினன்பின்
மகரமாகடல்வளைவண்ணனுடன்செலவலித்தான். (கருஅ)

புழைக்கைமால்களிற்றெருத்திடைபுரோசையிற்பயின்ற
கழற்கொள்சேவடிகருவரையிடைநெறிகலந்த
வழற்கொள்வெம்பொடியவைமிசைபுதையவவ்வரிமான்
றெழிற்கொண்டாருயிர்செகுக்கின்றசூழல்சென்றடைந்தார்

அடைந்தவீரரைக்காண்டலுமழலுளேயரிமா
வுடைந்துபோகவோரிடியிடித்தெனவுடன்றிடிப்ப
விடிந்துபோயினவிருவரைதுறுகலங்குடனே
பொடிந்துபோயினபொரியெனநெரிவொடுபுரளா. (க௪O)

காளைகாளொளிமுகில்வண்ணன கழல்சூளைவிசியாத்
தோளின்மேற்செலச்சுடர்விடுகடகங்கள்செறியாச்
சூளிமாமணித்தொடர்கொண்டுசூரிகுஞ்சிபிணியா
வாளிமொய்ம்பனங்கார்த்தனனுடைந்ததவ்வரியே. (கசக)

எங்குப்போவதென்றுடைநெறியிறுவரைநெரியப்
பைங்கட்கோளரியுருவுகொண்டவன்மிசைப்படர்ந்து
வெங்கட்கூற்றமுந்திசைகளும்விசும்பொடுநடுங்கச்
செங்கட்காரொளிநெடியவன்விசையினாற்சிறந்தான். (கசஉ)

கழலங்கார்த்திலகால்களுநிலமுறுமுடங்கா
வழலுஞ்செஞ்சுடர்க்கடகக்கையவைபுடைபெயரா
குழலுங்குஞ்சியுமாலையுங்கொளுவியதொடரு
மெழிலுந்தோளிலுமெருத்திலுங்கிடந்திலவெழுந்தே. (கசங)

மரங்கள்வேரொடுங்கீழ்ந்தெனவழிதொடர்ந்தெழுந்த
நிரந்தமான்களும்பறவையுநிலங்கொண்டுபதைத்த
வரங்கொள்வெம்பரலணிவரைக்கொடுமுடியவைதா
முரங்கொடோளவன்விரனுங்கியுறவுடைந்தொழிந்த. (கசச)

மூடியிட்டனமுகிற்கணமுரன்றிடைநொறுங்காய்க்
கூடியிட்டனகொடுமுடித்துறுகற்கள்குளிர்ந்தாங்
காடியிட்டனவனதெய்வமரியுருவுடையா
னோடியிட்டனனொளிவரைமுழையகத்தொளித்தான். ( )

உலத்தின்வீங்கியவோளிமணிச்சுடரணிதிணிதோ
ணலத்தின்வீங்கியநளிர்புகழினையவன்விசையி
னிலத்தின்கம்பமும்நெடுவரையதிர்ச்சியுமெழுவப்
பிலத்தின்வாழரியரசுதன்றுயில்பெயர்ந்ததுவே. (கசரு)

ஈங்குவாழியவிருள்கெழுமுழையகத்தொளித்தா
யோங்குநோல்வரைபிளந்திடுகெனவுளைந்துரவோ
னுங்கமாமுழைமுகத்துலகதிரநின்றார்த்தான்
வீங்குவாய்திறந்தொலித்ததுவிலங்கலிற்சிலம்பே. (கசஎ)

அதிரவார்த்தலுமமூன்றுதன்னெயிற்றிடையலர்ந்த
கதிருங்கண்களிற்கனலெரிச்சுடர்களுங்கனல
முதிர்வில்கோளரிமுனிந்தெதிர்முழங்கலினெரிந்து
பிதிர்வுசென்றதுபெருவரைபிளந்ததப்பிலமே. (கசஅ)

எரிந்தகண்ணிணையிறுவரைமுழைநின்றவனைத்தும்
விரிந்தவாயொடுபிணைத்தனவெளியுகிர்பரூஉத்தாள்
சுரிந்தகேசரஞ்சுடரணிவளையெயிற்றொளியா
லிரிந்ததாயிடையிருணின்றங்கெழுந்ததவ்வரியே. (கசகூ)

தாரித்திட்டதன்றறுகண்மைக்குணங்களினுலகை
வாரித்திட்டிவண்வந்ததோரரியெனமதியாப்
பூரித்திட்டதன்பெருவலியொடுபுகழரிமாப்
பாரித்திட்டதுபனிவிசும்புடையவர்பனித்தார். (கருo)

அளைந்துமார்பினுளழிதருகுருதியைக்குடிப்பா
னுளைந்துகோளரியெழுதலுமுளைமிசைமிதியா
வளைந்தவாளெயிற்றிடைவலித்தடக்கையிற்பிடித்தான்
பிளந்துபோழ்களாய்க்கிடந்ததப்பெருவலியரியே. (கருக)

சீயமாயிரஞ்செகுத்திடுந்திறலதுவயமா
வாயவாயிரமாயிரமடுதிறலரிமா
வேயெனுமுனிங்கழித்தனனிவனெனத்தத்தம்
வாயின்மேல்விரல்வைத்துநின்றமரர்கண்மருண்டார். (கருஉ)

அழிந்தகோளரிகுருதியதடங்கடங்களிற்றோ
டொழிந்தவெண்மருப்புடைந்தவுமொளிமுத்தமணியும்
பொழிந்துகல்லறைப்பொலிவதுகுலிகச்சேறலம்பி
யிழிந்தகங்கையினருவியொத்திழிந்தவவ்விடத்தே. (கருங)

யாதுமற்றதற்குவந்திலன்வியந்திலனிகலோ
ஞேதகித்திலம்புரிவளையொளியவற்குறுகி
யேதமற்றிதுகடிந்தனனின்னினியடிகள்
போதும்போதனபுரத்துக்கென்றுரைத்தனன்புகழோன். ( )

தம்பியாற்றல்கண்டுவெந்துதன்மனந்தளிர்த்தொளியால்
வம்புகொண்டவன்போனின்று வளைவண்ணன்மொழிந்தான்
நம்பிநாமினிநளிவரைத்தாழ்வர்கண்டல்லா
லிம்பர்போம்படித்தன்றுசெங்குருதியதிழிவே. (௧௫௫)

ஆங்கண்மால்வரையழகுகண்டரைசர்கள்பரவும்
வீங்குபைங்கழலிளையவன்வியந்துகண்மலர
வீங்கிமாண்பினவினையினவிவையெனவினிதின்
வாங்குநீரணிவளைவண்ணனுரைக்கியவலித்தான். (௧௫௬)

புள்ளுங்கொல்லெனவொலிசெயும்பொழில்புடையுடைய
கள்ளினுண்டுளிகலந்துகாலசைத்தொறுங்கமழ
வுள்ளுந்தாதுகொண்டேதுவண்டறுதனவொளிசேர்
வெள்ளென்றேன்றுவகயமல்லபளிக்கறைவிறலோய். (௧௫௭)

காளைவண்ணத்தகளிவண்டுகதுவியதுகளாற்
றாளைமூசியதாமரைத்தடம்பலவவற்று
ளாளிமொய்ம்பவங்ககலிலையலரொடுங்கிழிய
வாளைபாய்வனகயமல்லவனத்திடர்மறவோய். (௧௫௮)

மன்னுவார்துளித்திவலையமலைமருங்கிருண்டு
துன்னுமாந்தர்கள்பனிப்புறத்துணைமையோடதிர்வ
வின்னவாம்பலவுருவுகளிவற்றினுளிடையே
மின்னுவார்ந்தனமுகிலல்லகளிறுகள்விறலோய். (௧௫௯)

உவரிமாக்கடனுரையெனவொளிர்தருமயிர
வவரைவார்புனத்தருந்திமேயருவிநீர்பருகி
யிவருமால்வுரையிளமழைதவழ்ந்தெனவிவையே
கவரிமாப்புடைபெயர்வனகடல்வண்ணகாணாய். (௧௬0)

வேறு.

துள்ளிவாரும்புனற்றுளுங்குபாறைக்கலத்
துள்ளுராவிக்கிடந்தொளிருமொண்கேழ்மணி
நள்ளிராவின்றலைநகுபவானத்திடைப்
பிள்ளைநாளம்பிஙறபிறழ்தல்போலுங்களே. (௧௬௧)

வழையும்வாழைத்தடங்காடுமூடிப்புடங்
கழையும்வேயுங்கலந்திருண்டுகொண்டற்கரு
முழையுமூரிம்மணிக்கல்லுமெல்லாநின
திழையினம்பொன்னொளியெறிப்பத்தோன்றுங்களே.(கசுஉ)

பருவமோவாமுகிற்படலமூடிக்கிடந்
திரவுண்டேனைப்பகலில்லையொல்லென்றிழிந
தருவியோவாபுரண்டசும்புபற்றித்தட
வரையின்றாழ்வார்நிலம்வழங்கலாகார்களே. (கசுங)

சூரலப்பித்தொடர்ந்தடர்துளங்கும்மரில்
வேரலோடும்மிடைந்திருண்டுவிண்டுவ்விடா
ரூரலோவாதனன்றுயிரையுண்டிடுதலாற்
சாரலாகாதனசாதிசாலப்பல. (கசுச)

பரியபாறைத்திரள்படர்ந்தபோலக்கிடந்
திரியவேழங்களைவிழுங்கியெங்குந்தமக்
குரியதானம்பெறாவுறங்கியூறுங்கொளாப்
பெரியபாம்பும்முளபிலங்கொள்பேழ்வாயவே. (கசுரு)

அவைகள்கண்டாய்சிலவரவமாவிப்பன
வுவைகள்கண்டாய்சிலவுளியமொல்லென்பன
விவைகள்கண்டாய்சிலவேழவீட்டம்பல
நவைகள்கண்டாயிவைநம்மலாதார்க்கெலாம். (கசுசா)

குழல்கொடும்பிக்கணங்கூடியாடநகு
மெழில்கொடாரோய்வியந்தியங்கலிங்குள்ளநின்
கழல்களார்க்குங்களேகலங்கிமேகக்குழாம்
பொழில்கொள்வெள்ளத்திடைப்புரளநூறுங்களே. (கசுஎ)

ஆக்கலாகாவசும்பிருந்துகண்ணிற்கொரு
நீக்கநீங்காநிலம்போலத்தோன்றிப்புகிற்
காக்கலாகாகளிறாழவாழும்புறந்
தூக்கந்தூங்குந்தொளிதொடர்ந்துபொன்றுங்களே. (கசுஅ)

இதுவித்தாழ்வர்ர்நிலத்தியற்கைமேலாற்பல
மதியம்பாரித்தனமணிக்கற்பாறையின்மிசை
நிதியம்பாரித்தொளிநிழன்றுதுஞ்சன்னிலைக்
கதியின்வாழ்வாரையுங்கண்கள்வாங்குங்களே. (௧௬௯)

வே று.

இருதுவேற்றுமையின்மையாற்
சுருதிமேற்றுறக்கத்தினோ
டரிதுவேற்றுமையாகவே
கருதுவேற்றடங்கையினாய். (௧௭௦)

வே று.

தொல்லுறுசுடர்போலுஞ்சூழொளிமணிப்பாறைக்
கல்லறையவைகோங்கின்கடிமலர்கலந்துராய்
மல்லுறுவரைமார்பவளரொளியின்முளைக்கு
மெல்லுறுசுடர்வானத்தெழிலவாயினியவ்வே. (௧௭௧)

வே று.

திரைத்தசாலிகை
நிரைத்தபோணிரந்
திரைப்பதேன்களே
விரைக்கொண்மாலையாய். (௧௭௨)

வே று.

வரைவாய்நிவந்தவடுமாவடுமா
விரைவாய்நிவந்துவிரியாவிரியா
புரைவாய்சும்புபுலராபுலரா
விரவாயிருட்செயிடமேயிடமே. (௧௭௩)

வே று.

இளையாரிளையாருடனாய்முலையின்
வளையார்வளையார்மனம்வேண்டுருவம்
விளையார்விளைபாட்டயருந்தொழிருன்
றளையார்தளையார்பொழிலின்றடமே. (௧௭௪)

வே று.

அளியாடுமமரங்களமரங்கள்மகிழ்ந்தாறு
விளையாடும்விதமலர்ந்தவிதமலர்ந்தமணிதூவும்
வளையார்கண்மகிழ்பவான்மகிழ்பவான்மலர்சோர்வ
விளையாரையிளையவேயிளையவேயிடமெல்லாம். (௧௭௫)

வே று.

தாமரைத்தடத்திடைமலர்ந்தசாரல்வாய்த்
தாமரைத்துளையொடுமெறலித்தாவில்சீர்த்
தாமரைத்குகுணச்செல்வன்சண்பகந்
தாமரைத்தடித்தலர்ததைந்துதோன்றுமே. (கஎசு)

வே று.

நாகஞ்சந்தனத்தழைகொண்டுளிர்வண்டுகடிவ
நாகஞ்சந்தனப்பொதும்பிடைநளிர்ந்துதாதுமிழ்வ
நாகஞ்செஞ்சுடர்நகுமணியுமிழ்ந்திருள்கடிவ
நாகமற்றிதுநாகர்தம்முலகினைநகுமே. (கஎஎ)

வே று.

நாகுமலரனநறவம்மவைசொரிவனநறவந்
தொகுமலரனதுருக்கம்மவைசொரிவனதுருக்க
மகமலரனவசோகம்மவைதருவவசோகம்
பகுமலரனபாங்கர்பலமலையனபாங்கர். (கஎஅ)

அணங்கமர்வனகோடலரிதவைபிறர்கோடல்
வணங்கிளர்வனதோன்றிவகைசுடர்வனதோன்றி
பிணங்கிணர்வனவிஞ்சியெரிபொன்புடையிஞ்சி
மணங்கமழ்வனமருதம்வரையயல்வனமருதம். (கஎகூ)

வே று.

சாந்துந்தண்டழையுஞ்சுரமங்கையர்க்
கேந்திநின்றனவிம்மலையாரமே
வாய்ந்தபூம்படையும்மலர்க்கண்ணியு
மீந்தசாகையவிம்மலையாரமே. (கஅ0)

இயங்குகின்னரரின்புறுநீரவே
தயங்குகின்றனதானமந்தாரமே
பயங்கொள்வார்பயங்கொள்பவனைத்தையுந்
தயங்குகின்றனதானமந்தாரமே. (கஅக)

வே று.

பொன்விரிந்தனையபூங்கோங்கும்வேங்கையு
முன்விரிந்துக்கனமொய்த்தகற்றல
மின்விரிந்திடையிடைவிளங்கியிந்திரன்
வின்முரிந்திருண்முகில்வீழ்ந்தபோலுமே. (கஅஉ)

நிழற்பொதிநீலமாமணிக்கலந்திரள்
பொழிற்பொதியவிழ்ந்தபூப்புதைந்துதோன்றுவ
கழற்பொதிர்கெனத்துகிறரித்தகாஞ்சியர்
குழற்பொதிதுறுமலர்க்கொண்டைபோலுமே. (கஅ௩)

மேவுவெஞ்சுடரொளிவிளங்குகற்றலந்
தாவில்பூந்துகளொடுததைந்துதோன்றுவ
பூவுகவிளையவர்திளைத்தபொங்கணைப்
பாவுசெந்துகிலிடைப்பள்ளிபோலுமே. (கஅ௪)

வேறு.

அழலணியசோகஞ்செந்தாதணிந்துதேனாற்றநின்று
நிழலணிமணிக்கன்னீலநிறத்தொடுநிமிர்ந்ததோற்றங்
குழலணிகுஞ்சிமைந்தர்குங்குமக்குழம்புபூசி
பொழிலணிதிகழநின்றாலெனையநீரனையதொன்றே. (கஅ௫)

இணைந்துதேன்முழங்கவிண்டவேழிலம்பாலைவெண்பூ
மணிந்துதாதணிந்துதோன்றுமரகதமணிக்கற்பாறை
மணங்கெழுகளிவண்டாலப்பாசடைகலந்தபொய்கை
கணங்கொளிவிடாதவெண்டாமரைததைந்தனையதொன்றே

காரிருட்குவளைக்கண்ணிக்கதிர்நகைக்கனபொற்றோட்டுக்
கூரிருள்சுரிபட்டன்னகுழலணிகொடுநுண்கூந்தற்
பேரிருள்கிழியத்தோன்றும்பிறையெயிற்றமாநோக்கிற்
சூரமகளிர்வாழுமிடமிவைசுடர்பவெல்லாம். (கஅ௭)

வாரிருபுடையும்விம்மிக்கிவடஞ்சுமந்தெழுந்துவேங்கை
யேரிருஞ்சுணங்குசிந்தியெழுகின்றவிளமென்கொங்கைக்
காரிருங்குழலங்கொண்டைக்கதிர்நகைக்கனகப்பைம்பூ
ணீரமகளிர்கண்டாய்நிறைபுனற்றடத்துவாழ்வார். (கஅ௮)

மேகமேற்றவழ்ந்துவேய்கண்மிடைந்துகீழிருண்டதாழ்வ
ரேகமாமலையினெற்றியிருஞ்சுனைத்தடங்களெல்லா
நாகமாமகளிரென்னுநங்கையர்குடையப்பொங்கி
மாகமேற்றரங்கஞ்சிந்திமணியறைகழுவுமன்றே. (கஅ௯)

ஆவிவீற்றிருந்தகாதலவரொடுகேவரிவேய்ந்து
நாவிவீற்றிருந்துநாறுங்குளிர்வரைச்சிலம்பின்மேயார்
காவிவீற்றிருந்தகண்ணார்கந்தர்வமகளிர்கண்டாய்
பாவின்வீற்றிருந்தபண்ணினமுதினுறபடைக்கப்பட்டார். ( )

அலங்கிணரணிந்தவிஞ்சையரிவையரிடங்கள்கண்டாய்
விலங்கலின்விளங்குகின்றவெள்ளிவெண்கபாடமாட
மிலங்கொளிமகரப்பைம்பூணியக்கியரிடங்கள்கண்டாய்
நலங்கிளர்பசும்பொற்கோயினகுகின்றநகரமெல்லாம். (கக௩)

போய்கிழற்றுளும்புமேனிப்புணர்முலையமிர்தனுரா
டாய்கிழற்றுளும்பவானோரசதியாடிடங்கள்கண்டாய்
சேய்கிழற்றிகழுஞ்செம்பொற்றிலதவேதிகையவாய
பாய்கிழற்பவழச்செங்காற்பளிக்குமண்டபங்களெல்லாம். ( )

எழின்மணிச்சுடர்கொண்மேனியிமையவரிடங்கள்கண்டாய்
முழுமணிப்புரிசைவேலிமுத்தமண்டபத்தவாய
கழுமணிக்கபாடவாயிற்கதிர்நகைக்கனகஞாயிற்
செழுமணிச்சிகரகோடிச்சித்திரகூடமெல்லாம். (கக௫)

தும்பிவாய்துளைக்கப்பட்டகீசகம்வாயுத்தன்னால்
வம்பவாங்குழலினேங்கமணியறையரங்கமாக
வும்பர்வான்மேகசாலமொலிமுழாக்கருவியாக
நம்பதேன்பாடமஞ்ஞைநாடகநவில்வகாணாய். (கக௪)

பொன்னவிர்மகரப்பைம்பூட்பொலங்குழையிலங்குசோதிக்
கன்னவில்வயிரத்திண்டோட்கடல்வண்ணனுவப்பக்காட்டி
மன்னவின்றிறைஞ்சுஞ்செய்கை வளைவண்ணன்மலையின்மே
லின்னனபகர்ந்துசொல்லுமெல்லையுணீங்கலுற்றார். [௰

பாசிலைப்பாரிசாதம்பரந்துபூநிரந்தபூங்கா
மூசினமணிவண்டார்க்குமுருகறாமூரிக்குன்றங்
காய்சினவேலினன்றன்கண்களிகொள்ளக்காட்டி
யோசனையெல்லைசார்ந்துபின்னையிஃதுரைக்கலுற்றான். ( )

வலிக்கற்றமதாவைப்பைங்கண்வாளெயிற்றரங்கச்சீயங்
கலிகற்றகளிறுண்பேழ்வாய்க்கலிங்கிறுளிழிந்துபோந்து
குலிகச்சேறலம்பிக்குன்றங்கொப்புளித்திட்டதொப்ப
வொலிகற்றவுதிரநீத்தமொழுகுவதின்னநோக்காய். (கக௭)

வெம்பவெங்குயிரையெல்லாம் விழுங்கியவெகுண்டுநோக்கி
கம்பமாவுலகந்தன்னைக்கண்டிடுங்களிகொள்சீய [க்
நம்பநீயழித்ததல்லானகையெயிற்றதனைநண்ணல்
வம்பறுமகரப்பைம்பூண்வானவர்தமக்குமாமோ. (கக௮)

ஆங்குநீமுனிந்தபோழ்தினரியதுவகலநோக்கி
வாங்குநீர்வண்ணகேளாய்மாயமாமதித்துநின்றே
னேங்குநீண்மலையின்றாழ்வரொலிபுனலுதிரயாறு
வீங்கிவந்திழிந்தபோழ்துமெய்யெனவியப்புச்சென்றேன். ()

குன்றிற்குமருங்குவாழுங்குழூஉக்களிற்றினங்களெல்லா
மன்றைக்கன்றலறக்கொன்றுண்டகலிடம்பிளப்பச்சீறி
வென்றிக்கண்விருப்புநீங்காவெங்கண்மாவிதனைக்கொன்று
யின்றைக்கொண்டுலகமெல்லாமினிதுகண்படுக்குமன்றே. ()

உரைசெய்நீளுலகின்வாழுமுயிர்களுக்குறுகண்கண்டால்,
வரைசெய்தோண்மைந்தர்வாழ்க்கைமதிக்கிலார்வனப்பின்மி
க்கார், திரைசெய்நீருலகங்காக்குஞ்செய்கைமேற்படைக்கப்ப
ட்ட,வரசர்தம்புதல்வர்க்கையாவறம்பிறிததனினுண்டோ.()

கற்றவர்கடவுட்டானஞ்சேர்ந்தவர்களைகணில்லா
ரற்றவரந்தணாளரன்றியுமனையநீரார்க்
குற்றதோரிடுக்கண்வந்தாலுதவுதற்குரித்தன்றாயிற்
பெற்றவிவ்வுடம்புதன்னாற்பெறுபயனில்லைமன்னே. (உ0௨)

மன்னுயிர்வருத்தங்கண்டும்வாழ்வதேவலிக்குமாயி
லன்னவனாண்மையாவதலிபெற்றவழகுபோலா [ன்னு
மென்னையான்கொடுத்தும்வையத் திடுக்கணைக்கெடுப்பனெ
ன்னையேபோலுநீரார்கிலமிசைசிலவின்றார். (உ0௩)

ஒருவனதிரண்டியாக்கையூன்பயினரம்பின்யாத்த
வுருவமும்புகழுமென்றாங்கவற்றினூழ்காத்துவந்து
மருவியவுருவமிங்கேமறைந்துபோமற்றயாக்கை
திருவமர்ந்துலகமேத்தச்சிறந்துபின்னிற்குமன்றே. (௨௦௪)

வே று.

என்றுதங்கதையோதிருணீண்முகிற்
குன்றுசூழ்ந்தகுழூமலர்க்கானகஞ்
சென்றோர்வேங்கடஞ்சேர்ந்தனருச்சிமே
னின்றுவெய்யவனாகிலங்காய்த்தினான். (௨௦௫)

ஆங்கவேங்கடஞ்சேர்ந்தபினையகா
ணீங்கிவ்வெங்கடுங்கானகத்திடை
வேங்குநீர்க்கடல்வண்ணனுக்கின்னணம்
வீங்குவெண்டிரைவண்ணன்விளம்பினான். (௨௦௬)

முழையுடைந்தழல்காலுமுரம்பயற்
கழையுடைந்துகுகண்கவர்கித்தில
மழையுடைந்துகுநீரெனவாய்மடுத்
துழையுடைந்துகுகின்றனவாங்கெலாம். (௨௦௭)

மிக்கநீள்கழைமேல்விளைவுற்றழ
லொக்கவோடியுறைத்தவினான்மிசை
புக்கநெற்பொரியுற்றொருசாரெல்லாந்
தொக்ககற்றலமேற்றுடிக்கின்றவே. (௨௦௮)

ஈங்குவெங்கதிரோனெறிப்பநிழல்
வேங்கொலென்றொளித்திட்டிபம்வீழ்ந்துசே
பாங்கலார்மனைபோலப்பறைந்தரோ
வோங்கிநின்றுலவுற்றனவோமையே. (௨௦௯)

அற்றநீரழுவத்திடைநெல்லியின்
வற்றலஞ்சினையூடுவலித்தரோ
மற்றவெவ்வெயிலுங்கிழல்வாயழ
லுற்றுவீழ்ந்ததுபோன்றுளவாங்கெலாம். (௨௧௦)

மைபத் தலைப்படா நாகமழன்றுதம்
பொய்த்தளைத் தலைபோதரக்கார்செய்வான்
கைத்தலம்முகிழ்க்கின்றனகாந்தளென்
றத்தலைச்சிலமானயர்வெய்துமே. (உகக)

விசையினோடுவெண்டேர்செலக்கனாடுநீ
நசையினேடியநவ்வியிருங்குழா
மிசையிலகீழ்மகன்கண்ணிரங்கெய்திய
வசையின்மேன்மகன்போலவருந்துமே. (உகஉ)

அடியர்தொண்டகப்பாணியர்வாளியா
கொடியசெய்துமுனைப்புலங்கூட்டுணுங்
கடியநீர்மையர்கானகங்காக்குநின்
னடியரலலதல்லாரவணில்லையே. (உகங)

வேறு.

அங்கவெங்கடங்கடந்தலங்குதாரிலங்குபூண் [த்
சிங்கமவென்றசெங்கண்மாலொடம்பொன்மாலைவெணகட
திங்கள்வண்ணன்வெங்கண்யானைவேந்துசோர்ந்தநாடுசார்ந்
திங்கணின்னவின்னகாணெனப்புகழ்ந்தியம்பினான். (உக௪)

மாலுமவாரிதிங்கண்மூன்றும்வந்தரூதமாண்பினா
லாலுமாவுமூனைநம்மடிகளாளுநாட்டகங்
காலமாண்பினன்றியுங்கார்கவின்றநீரவே
போலுமாண்பினேர்கலந்துபொங்குநீரபுறணியே. (உகரு)

கொண்டல்வாடையென்னுங்கூத்தன் யாத்தகூத்தின்மாட்
விண்டமாமலர்ப்பொதும்பரங்கமாவிரும்புநீ [சியால
வண்டுபாடவல்லியென்னுமாதராடுநாடகங்
கண்டுகொன்றைபொன்சொரிந்தகாந்தள்கைமறித்தவே. ( )

கைமலர்த்தகாநதளுங்கரியநீர்கருவிளை
மைமலர்த்தடங்கணேர்வகுத்தலர்ந்தவட்டமும்
மொய்மலர்ப்பொதும்பின்மேன்முறுவலித்தமுல்லையுங்
கொய்மலர்க்குழற்றிரட்சிகொண்டுகொய்த்தகொன்றையும். (

தொண்டைவாய்திறங்கொளக்கனிந்துதூங்குகின்றவும்
வண்டுபாயவார்கொடிமருங்குலாய்வளர்த்தவுங்
கண்டபாலெலாங்கலந்துகண்கவற்றுமாதலால்
விண்டுமாலைமாதராரின்மேவுநீரகானமே. (உகஅ)

தண்ணிலாவிரிந்தமுல்லைதாறுசோர்தளிர்மிடைந்
தெண்ணிலாயசாயலம்மிடாமலர்ப்பிறங்கன்மேற்
பண்ணிலாயவண்டுபாடுபாங்கரோடுபாங்கணிந்து
வெண்ணிலாவிரிந்தவெல்லைபோலுமிங்கோர்பாலெலாம். ( )

தேனவாவிமூசுகின்றதேம்பிறழ்பூதாங்கலந்து
கானநாவல்கொம்பினிற்கனிந்துகாலசைந்தவற்
றேனமாடுவண்டிருந்திருண்டகானமிங்கிதற்
கூனமாயிருட்பிழம்புறங்குகின்றதொக்குமே. (உஉ0)

வாயிதழ்த்திறங்கொளக்கனிந்ததொண்டைவந்தொசிந்து
தூயிதழ்த்துணர்துதைந்துதோன்றுகின்றதோன்றியின்
பாயிதழ்ப்பரப்பின்மேலரத்தகோபமூர்ந்தயற்
சேயிதழ்ப்பொலிந்தகாடுசெக்கர்வானமொக்குமே. (உஉக)

ஆடிணர்க்கொடிப்படரகிற்பொதும்பயற்பொலிந்த
கூடிணர்க்குழாகிலைக்கொழுமலர்க்குமிழ்மிசைக்
கோடிணர்க்குலைக்கொசிந்த கொன்றைவிண்டதாதுசோர்ந்
தோடிணர்ச்சுடர்ப்பொனுக்ககானமொக்குமூங்கெலாம். ( )

பார்மகிழ்ந்தபைஞ்சுருட்பயிர்மிசைப்பயின்றெழுந்
தேர்கலந்துபாசிலைப்பரப்பினூடிரைத்தரோ
கார்மகிழ்ந்தகார்மயிற்கலாபமொய்த்தகானகம்
நீர்மகிழ்ந்தநீர்க்கடனிரந்ததொக்குநீரதே. (உஉ௩)

ஏறுகொண்டகோவலரேந்துதண்ணவக்குரன்
மாறுகொண்டகோடியர்மணிமுழாமுழங்கலிற்
றாறுகொண்டதோகைமஞ்ஞைபாடல்கண்டுகண்மகிழ்ந்து
சாறுகொண்டுமான்கணந்தயங்குநீரசாரெலாம். (உஉச)

காார்மணந்தகானயாறுகல்லலைத்திழிந்தொலிக்கு
நீர்மணந்தநீள்கரைநிரைத்தெழுந்தநாணல்சூழ்
வார்மணற்பிறங்கன்மாலைவல்லிவிண்டதாதணிந்து
தார்மணந்தவாரமார்பயாகசாலைபோலுமே. (உஉரு)

கறவைகன்றுவாய்மிகுத்தவமிழ்திறேடுகண்ணகன்
புறவின்மாமரைம்முலைப்பொழிந்தபாறெகிழ்ந்தெழப்
பறவையுண்டுபாடவும்பால்பரந்தபூமிநின்
னறவுவிண்டநாகுமுல்லைவாய்திறந்துநக்கவே. (உஉசு)

வேரல்வேலிமால்வரைக்கவானின்வேய்விலங்கலிற்
சாரன்மேகநீர்முதிர்ந்துதண்டளிதுளித்தலான்
மூரல்வாயசும்பருந்தமுல்லைவிள்ளுமெல்லைபோய்
நீரவாளைபூவின்வைகுநீள்பரப்புநண்ணினார். (உஉஎ)

வேறு.

புதுநாணமலர்விண்டுபொழிந்திழியும
மதுநாறுபுனன்மருதத்தினைமற்
றிதுகாணெனவின்னனசொல்லினனே
விதுமான்மிகுசோதிவிளங்கொளியான். (உஉஅ)

அயலோதமிரட்டவலம்பொலிநீர்
வயலோதமயங்கமயங்கவதிர்ந்
தியலோர்தையிளஞ்சிறையன்னமெழக்
கயலோடியொளிப்பனகாண்கழலோய். (உஉகூ)

வளவாசநிலப்பல்வின்சுளையு
மிளவாழையினின்னெழிலங்கனியுங்
களமாங்கனியின்றிரளுங்கலவிக்
குளமாயினயோசனைகொண்டனவே. (உநூ0)

வனமாவினிருங்கனியுண்டுமதர்த்
தினவாளையிரைத்தெழுகின்றனகாண்
கனவாழைமடற்கடுவன்மறையப்
புனமாணரமந்திபுலம்புவகாண். (உநூக)

வளமாகிலைமேதிமருப்பினிட
விளவாழைநுதிக்கமழ்தேனொழுகிக்
குளமார்குளிர்தாமரைகொண்டநகைத்
தளவாயுகுகின்றனகாண்டகவோய். (உகஉ)

இவைசெங்நெலிடைக்கருநீலவன
மவையங்நெலிடைக்கழுநீரழுவ
முவையொண்டுறைவிண்டொளிவிம்முநகுந
நவைவென்றனதாமரைநாண்மலரே. (உகங)

கழையாடுகரும்பினறைக்கடிகைப
பொழிசாறடுவெம்புகைபொங்கியயற்
றழையோடுயர்சோலைகடாம்விரவி
மழையாடுமலைத்தடமொத்துளவே. (உகச)

கருநீலமணிந்தகதுப்பினயற்
கருநீலமணிந்தனகண்ணிணைகள்
கருநீலமணிக்கதிர்கட்டியெனக்
கருநீலமணிந்தகருங்குழலே. (உகரு)

வளர்செங்கிடையின்னெழில்வைத்தநுதல
வளர்செங்கிடையின்னொளிவவ்வியவாய்
வளர்செங்கிடையின்விளையாடுமவயல
வளர்செங்கிடைமாமலர்மலகுசிகை. (உகசு)

வயலாம்பனெறித்தவகைத்தழையள்
வயலாம்பன்மலைத்தவடிச்சவியள்
வயலாம்பன்மலிந்தபரப்பிடையள்
வயலாம்பனமலர்த்தொகைமாலையினள். (உகஎ)

வளர்தாமரையல்லிமலர்த்தியகை
வளர்தாமரையல்லிமயக்குமொளி
வளர்தாமரையல்லிமகிழ்ந்தனபோல்
வளர்தாமரையல்லிவனத்திடையாள் (உகஅ)

நளிர்வார்கழலர்ப்புகழ்நாடிநயந்
தொளிர்வார்குழலாளொருமாதவருந்
துளர்வார்கனியும்மதுவுந்தெகிழக்
கிளர்பார்வையுறக்கிளர்கின்றதுகேள். (உங்கூ)

மதிகாணரிமிர்ந்தமதிற்சிகர
நுதிமாளிகைமேலநுடங்குகொடி
கதிரோனொளிமாழ்கவெழுந்துகலந்
ததுகாணமதாரொளிமாநகரே. (உ௪௦)

அறவேதியராகுதியம்புகையா
ருறவேதிகைவிம்மியவொண்புறவ
நிறவேதிகைமீதுநிமிர்ந்தபொழிற்
புறவேதிகையேறுவகாண்புகழோய். (உ௪க)

வேறு.

இன்னனவிளையவற்கியம்புமெல்லையுட்
பொன்னகரடைந்தனர்பொழுதுஞ்சென்றது
நன்னகரிரைத்ததுநான்றவின்னிய
மன்னவகுமாரும்வறுமைநீங்கினார். (உ௪உ)

இளங்களிக்குஞ்சரமிரட்டித்தாயிரந்
துளங்கொளிக்கலினமாத்தூளியெல்லைய
வளங்கெழுகுமரரைவலங்கொண்டெய்தின
வளந்தறிந்திலமகன்படையினெல்லையே. (உ௪௩)

துன்னியதுணரிள்ந்தோன்றிமென்கொடி
மன்னியவனத்திடைமலர்ந்துநீண்டபோற்
கன்னியர்கைவிளக்கேந்தக்காவலன்
பொன்னியல்வளநகர்பொலியத்தோன்றினார். (உ௪௪)

காவியங்கருங்கணார்கமழவூட்டிய
வாவியங்கொழும்புகைதழுவியாய்மலர்க்
கோவையங்குழிநிலைமாடம்யாவையும்
பாவியபனிவரைப்படிவங்கொண்டவே. (உ௪௫)

மல்லிகைமணங்கமழ்மதுப்பெய்மாலையு
முல்லையம்பிணையலுமொய்த்தபூண்கடை
யெல்லியங்கிளம்பிறைக்கதிர்கள்வீழ்ந்தன
தொல்லையங்கடிநகர் துயில்வபோன்றவே. (உசசு)

செம்பொன்மாமணிநகர்ச்செல்வவீதியுட்
கொம்பனாரடிதொழக்கோயிலெய்தலு
நம்பிமார்வருகெனநாறுநீரொளி
யம்பொன்மாமணிமுடியரசனேயினான். (உசஎ)

அருளுவதென்கொலென்றஞ்சிவெஞ்சுட
ரிருளுகவெழுந்ததொத்திருந்தகோனடிச்
சுருளுறுகுஞ்சிகடுதையத்தாழ்ந்தனர்
மருளுறுமனத்தினன்மன்னனாயினான். (உசஅ)

திருவரையனையதோட்சிறுவர்தம்மையக்
கருவரையனையவெங்களிநல்யானையா
னிருவரும்வருகெனவிரண்டுதோளினு
மொருவரையகலத்தினொடுங்கப்புல்லினான். (உசகூ)

மானவாமதகளிற்றுழவன்மக்கடங்
தேனவாஞ்செழுமலர்செறிந்தகுஞ்சியுட்
கானமாமலர்த்துகள்கமழ்விழ்ந்தன
வானவாந்தடக்கையான்மகிழ்ந்துநோக்கினான். (உருo)

என்னைநும்மீரலர்க்குஞ்சிதம்முளித்
துன்னியவனத்துகடுதைந்தவாறென
மன்னவனருளலுமகரவார்குழை
மின்னிவர்மணிக்கழல்விசயன்செப்பினான். (உருக)

போற்றிநம்புறணிசூழ்காடுபாழ்செய்வான்
சீற்றமிக்குடையதோர்சீயஞ்சேர்ந்தது
வேற்றுவன்றமர்கள்வந்துரைப்பவெம்பியிவ்
வீற்றல்சாலடியன்சென்றதனைநீக்கினான். (உருஉ)

யானுமங்கிவனொடுமேடிகளேகினன்
வானுயரிமகிரிமருங்கிலென்றுபூந்
தேனுயரலங்கலான்சிறுவன்சொல்லலுந்
தானுயிர்தளிர்ப்பதோர்சவியனாயினான். (உருரு)

வேறு.

சுடரொளிமிகுசோதிசூழ்கழற்காளைமார்த
மடரொளிமுடிமன்னனேவலானுய்பொன்னகத்
தொடரொளிசுடர்ஞாயிற்சூளிகைசூழுநெற்றிப்
படரொளிநெடுவாயிற்பள்ளியம்பலங்கள்சேர்ந்தார். (உருச)

சீயவதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - அஉசு.



எட்டாவது

# கல்யாணச் சருக்கம்.



செங்கணமாலசிங்கமவென்றுசெழுமலர்த்திலதக்கணணிந்
திங்கண்மாவண்ணனோடுந்திருநகாபெயர்ந்தபின்னை
யங்கண்மாற்குரியநங்கையரும்பெறலவட்குத்தாதை
வெங்கண்மாலகளிறன்னான்றன்றிறமினிவிளமபலுற்றேன். ()

உற்றவான்குழவித்திங்களொளிமுளையகட்டுப்போந்து
முற்றுவான்முளைத்தபோலுமெயிறுடையுரிச்சிங்க
மற்றம்மாலழித்ததெல்லாம்வானமாறுகச்சென்ற
வொற்றனாலுணர்ந்துவேந்தனுவகையங்கடலுளாழ்ந்தான். ()

கரியவாய்விலங்கிநீண்டுகெளிக்கயலிரண்டுதம்முட்
பொரியபோகின்றபோலும்பொங்கரித்தடங்கட்பேதைக்
குரியமாலவற்குச்சென்றுகொடுப்பனென்றுலகங்காக்கும்
பெரியவன்றமரோடெண்ணிக்கடிவினைபெருக்கலுற்றான். ()

கிளரொளிமாடக்கோயிற்கின்னரர்கெழுவலோவா
வளரொளிவ்யங்குதோன்றல்வருத்தமானத்துமன்ன
னுளரொளிபூமிழும்பூணுன்பிரீதிவர்த்தனனென்றேதுந்
தளிரொளிதயங்குமேனித்தாமரைச்செங்கணானே. (ச)

மண்ணலங்கனியுஞ்சாதிமணிமுழாவதிருமாடக்
கண்ணலங்கனியுந்தோன்றல்கந்தர்வநகரங்காப்பான்
விண்ணலங்கனியுஞ் * சீர்த்திவிருகவெல்கடிகொள்பேரான்
பெண்ணலங்கனியுநீர்மைபெருகியவுருவத்தோளான். (ரு)

பூமருபொலிங்கொள்சோலைப்பொன்னணிபுரிசைவேலிக்
காமருகபாடவாயிற்கந்தமாதனத்தைக்காப்பான்
றேமருதிலதக்கண்ணித்திவாகரதேவனென்பான்
றாமரைதயங்குசோதித்தாரணிதுரகத்தேரான். (சு)

சுந்தரப்பொடியும்பூவுஞ்சுரும்பொடுதுதைந்துவீசிச்
சந்திரன்றவழுமாடச்சக்கிரவாளமன்னன்
மந்தரமலைக்கும்யானைவச்சிரதாடனென்பா
னந்தரத்தமரர்கோமானணிந்துபோந்தனையநீரான். (எ)

காரணங்குருவமேகங்கருவுகொண்டதிர்ந்துவெய்யோன்
றேரணங்குறுக்குமாடத்தேவரவணத்துச்செல்வ
னேரணங்குறுக்கும்பைந்தாரிரமியதரனென்றெங்குஞ்
சீரணங்குறுக்குஞ்செய்கைச்செஞ்சுடர்த்திலகப்பூணான். (அ)

கண்ணிலாங்கனகமாடக்கதலிகைமுகிலோடாடி
விண்ணிலாவிருண்டுதோன்றும்விசயகூடத்துமன்னன்
வெண்ணிலாவிரிந்தபூணான்வேகமாரதனீண்முந்நீர்
மண்ணெலாம்வணங்கநின்றமழகளிற்றரசோடொப்பான். (கூ)

மென்னரம்பனுக்குந்தீஞ்சொன்மெல்லியலார்தம்பாடல்
கின்னரம்பிணிக்குஞ்செய்கைக்கிருதமாதனத்தைக்காப்பா
கைநவின்றிலங்குஞ்செவ்வேற்காவலன் † கருடன்சேர்ந்த[ன்
மெய்நவின்றிலங்குஞ்செம்பொனங்கதன்விளைத்தபேரான். ()

* விருககடி. † கருடாங்கதன்.

ஓங்குநீர்ப்புரிசைவேலியொண்டுறைக்குவளைவேய்ந்த
தூங்குநீருடுத்தபாங்கிற்சோபனமுடையதோன்ற
றேங்குநீர்க்கடலந்தானேச்சித்திரதரனிவ்வையந்
தாங்குநீரொளியோடொன்றித்தண்ணளிதயங்கநின்றான். ()

என்றிவரெண்மர்தம்மையிரதநூபுரத்துளாளு
நின்றநீர்காமினென்றுநிறீஇயபின்னீதிமன்ன
னென்றியவுலகமெல்லாமொருங்குடன்விழுங்கலுற்றுச் [ன்.
சென்றுயர்கடலோடொக்குஞ்சேனைபண்ணமைக்கவென்று

வெண்ணிலாக்குழவித்திங்கண்மேகத்துப்பதித்தபோலு, மொண்ணிலா வுருவக்கோட்ட வோடைமால்களிற்றின் மேலோா, பண்ணெலாமணிந்துதோன்றப்பருமித்துக்கருவியேற்றிக், கண்ணிலாம்பதாகைசேர்த்திக்காழகில்கழுமவிட்டார.

கடடியகம்மச்செய்கைக்கதிர்மணிக்கனகச்சூலம்
பட்டமொடிலங்கப்பண்ணிப்பக்கரைபதைப்பயாத்து
மட்டவிழலங்கல்வீரர்சேர்தலும்வலத்துமுன்னூற்
கொட்டியகுரத்தவாலித்தெழுந்தனகுதிரைச்சேனை. (கச)

மணித்தொழில்வளைந்தகூட்டின்மருப்பறுத்தியற்றப்பட்ட
வணித்தொழிலாரக்கோவையாடகக்கொடிஞ்சியம்பொன்
றுணித்திடைபதித்ததட்டிற்சுடர்மணித்துரகத்திண்டேர்
கணித்தளப்பரியநேரகல்லெனக்கலந்தவன்றே. (கரு)

ஒட்டியகலிங்கந்தாண்மேற்றிரைத்துடுத்துருவக்கோடிப்
பட்டிகைபதைப்பயாத்துப்பரட்டையநரலவீக்கிக்
கட்டியகழலர்தாரர்கதிரொடுகனலும்வாளர்
மட்டுயரலங்கல்சூடிமறங்கிளர்மள்ளர்சூழ்ந்தார். (கசா)

இன்னிசையமரர்போர்கொண்டியன்றமாநகரங்காக்கும்
பொன்னவில்கடகப்பைம்பூட்புரந்தரனனையமாண்பின்
மன்னவற்கிளையவேந்தன்வயங் * கெரிப்பெயர்கொடோன்
கன்னியைக்காக்குநீர்மைக்கடற்படைபரப்பிச்சென்றான். ()

* சுலனரதன்; சுலனன், அக்கினி.

அங்கலமலர்ந்ததோன்றலரிபுரத்தவர்கள்கோமான்
பொங்கலரணிந்தபைந்தாரப் * புலிப்பெயர்ப்பொலங்கழலோ [ரான்
மங்கலக்களிற்றினன்றன்மருமகன்மகரமுந்நீர்த்
தங்கொலிமிகுத்ததானையொடுகெதிரெதிர்ப்பச்சார்ந்தான். (கஅ)

வாரணிமுரசமார்ப்பவரிவளைவயிரொடேங்கத்
தாரணிமறவர்சூழத்தமனியக்கலங்கடாங்கி
யாரணியுருவத்திண்டேரானைமேலருக்கீர்த்தி
நீரணிகடலந்தானைநிலநெளிபரப்பநின்றான். (கசு)

சேனைபண்ணமைத்துச்சென்றுதிருக்கடைசெறிந்தபோழ்தி [ற்
றானையுள்படுநேர்மாண்பிற்றரவர்தொழுதுகூற
† வேனவிற்றடக்கைவேந்தன்விண்ணியல்விமானமொன்று
வானவில்லுமிழ்ந்துமின்னமனத்தினனிருமித்திட்டான். ()

மற்றதன்வடிவுகேட்பின்மரகதமணிக்கறன்மேற்
பெற்றதன்னிலையிற்றகிப்பெருகியவளமைதோன்றிச்
சுற்றியபசும்பொற்சோதிசொரிந்துபோய்த்துறக்கங்காண
முற்றியமுகட்டுநீலக்குவட்டிடைமுடிந்ததன்றே. (உக)

பாரித்தபவழத்திண்காற்பளிங்குபோழ்பலகைதன்மேற் [று
பூரித்தசுடரின்செம்பொற்போதிகைப்புடங்கடோறு
மூரித்தண்சுடர்வெண்முத்தின்பரூஉத்திரண்முயங்கினான்
வேரித்தண்டுவேலைகாலமாலைகள்விசித்தவன்றே. (உஉ)

தடுத்துவில்லுமிழுஞ்செம்பொற்றண்டிகைதிரள்கடாங்க
மடுத்தனவயிரத்தம்பமாடநீண்மதலைதோறுந்
தொடுத்தனசுரும்புபாயுந்துணரணிதயங்குமாலை
யடுத்தனநிறத்தவாகவழுத்தினமணிகளெல்லாம். (உங)

ஊன்றியமகரப்பேழ்வாயொளிமுகந்தெளிப்பவீழ்ந்து
நான்றனமணிசெய்தாமநகைமுகநிறைந்தசோதி
கான்றனகனகசாலங்கலந்தன ‡ கங்கணீகந்
தோன்றினபதாகைசூழ்ந்துசுடர்ந்தனசூலநாயில். (உச)

---

* வியாக்கிரரதன். † வேனம், அழகு.
‡ கங்கணீகம், கங்கையலை.

அஞ்சிறைப்பறவைச்சோதியாலிப்பவஞனிந்துமேலால்
விஞ்சையர்மிதுனத்தேவர்விண்ணியங்குருவமெல்லாஞ்
செஞ்சுடரெறிப்பச்சேர்ந்துசெங்கதிர்ப்பரவைசிந்தி
வெஞ்சுடர்விலங்கநீண்டுவிண்ணிடைவிரிந்ததன்றே. (உரு)

வாரணிபசும்பொன்வாழைமரகதக்கமுகொடோங்கித்
தோரணத்தூண்கடோறுஞ்சுடர்மணிசிலம்பநான்று
நீரணிநிழல்கொண்முத்தமணன்மிசைநிரந்துதோன்றிப்
பூரணக்குடங்கள்செம்பொற்கொழுங்கதிர்புதைந்தகீழ்ால். ()

கொழுந்திரள்வயிரக்கோடிக் கூர்முளைசெறித்தச்செம்பொ
செழுந்திரட் * புடகஞ்சேர்ந்ததிருவளர்கபாடவாயிற் [ற்
பொழிந்ததண்சுடரவாகிப்பொலங்தொடர்புலம்பத்தூங்கி
யெழுந்தொலிசிலம்பவிம்மியிணர்கொண்டமணிகளெல்லாம்.

பாய்கதிர்ப்பளிங்கிற்கோத்துப்பருமணிவயிரஞ்சூழ்ந்த
வாய்கதிர்ச்சாலவாயிலகிலயாவுயிர்த்தவாவி
மாயிருவிசும்பின்மான்றுமழைதவழ்குன்றம்போலச்
சேயவர்க்குருவங்காட்டித்தேநிறைகொண்டவன்றே. (உஅ)

செம்பொனங்களியிற்செய்துசித்திரந்தெளிப்பத்தீட்டி
வம்பவெண்முத்தஞ்சாந்தின்மட்டித்துமணிகளெல்லா
நம்பியவொளியவாகத்தெளித்துநன்கெழுதப்பட்டுத்
தம்புலந்தெரிந்துதோன்றுந்தடத்தினதலங்களெல்லாம். ()

பாடகமிலங்கச்செங்கேழ்ச்சீறடிப்பரவையல்கு
ணடகமகளிராடுநாடகவரங்குநன்பொன்
மாடகந்தெளிப்பவேய்ந்தமண்டபத்தலமும்வண்ண
வாடகமணிந்தகூடநிலைகளுமயலவெல்லாம். (௩0)

மரகதமணிகளீன்றகதிரெனுந்தளிர்கள்வார்ந்து
சொரிகதிர்வயிரங்கான்றசுடரெனுங்கொழுந்துதோன்றிப்
புரிகதிர்முத்தமென்னும்புதுநகையரும்புபம்பி
விரிகதிர்ச்செம்பொன்பூத்துவிண்ணணங்குறுப்பவீங்கி. (௩க)

---

* புடகம், தாமரை.

கதிர்நகைக்கனபொற்சோதிக்கனகசாலங்களொன்னு
மதுநகப்பருதிமான்றமணிவண்டுமெயங்கிவானோர்
விதிநருவிமானமென்னுங்கற்பகம்விரிந்தபோழ்திற்
பதிநகர்க்கிறைவன்பாவைசயம்பவைவருகவென்றான். (கஉ)

வேறு.

இன்னதருண்மன்னவனதென்றுகடைகாக்குங்
கன்னியருணர்த்தலினிணர்க்கொடிகடுப்பாள்
பன்னியபளிக்கறையொர்பஞ்சணையின்மேலாண்
மன்னுமணிமாடமிசைமஞ்ஞையினிழிந்தாள். (கங)

மாகமலையன்னமணிமாடநிலையுள்ளாற்
போகமிகுபூந்தவிசின்மீதுபுனைதவுற்ற
வாகைவனமாலைபுனைமன்னன்மகள்செல்வாண்
மேகபடலத்திடைமினற்கொடியொடொத்தாள். (கச)

அங்கையினயிற்படையராணுடையர்பூணர்
கொங்கைவளராதகுழலார்கள்புடைகாப்பப்
பங்கயமுகத்தவர்பலாண்டுபலகூறி
நங்கையடிபோற்றியெனநங்கைநடைகற்றாள். (கரு)

காவன்மிகுகன்னிநகர்கன்னியர்கள்காக்கும்
வாவியகிறுமணிவாயிலவைநீங்கி
நாவிகமழ்கொம்பனையநங்கைநகைவேலான்
றேவியமர்கோயிலதுசெவ்வனமடைந்தாள். (கசா)

மௌவன்மலர்வேய்ந்துமதுநாறுமணிமைம்பாற்
கொவ்வைதுயில்கொண்டதுவர்வாய்க்கொடியொடொப்பா
டெய்வமணநாறுதிருமேனிபுறங்காக்கு
மவ்வையரொடெய்திமுதலவ்வையடிசேர்ந்தாள். (கஎ)

வணங்கியகனங்குழையைவாங்கிமுலைநோவக்
குணங்கெழுகுலத்தலைவிகொண்டுமிசைபுல்லி
மணங்கமழ்குழற்சிகையுள்வண்டிரியமோந்தாங்
கணங்கினனையாளுவகையாழ்கடலுளாழ்ந்தாள். (கஅ)

செம்பொனணிசீரியனசேரினிடைநேருமென்
றம்பொனணிநொய்யனவணிந்தலர்மிலைச்சி
வம்பினணிவாட்கணிடைமைபிறழவைத்துக்
கொம்பினனையாள்குளிருமாறுகுயில்வித்தாள். (௩௯)

அன்னவகைதேவியர்களோடமருமெல்லை
முன்னுமுகவோரையொடுமூர்த்தநலநோக்கி
மன்னுபுலவோர்கள்சொலமன்னன்மகடன்னை
யின்னகைவிமானதலமேறுகினிதென்றான். (௪0)

தொண்டைதொலைவித்ததுவர்வாய்மகளிர்சூழக்
கண்டுவளர்தாயரொடுகஞ்சுகியர்காப்ப
விண்டுவளர்சோதிகொள்விமானமதுசேர்வாள்
வண்டுவளர்கற்பமுறைவான்மகளொடொத்தாள். (௪௧)

முன்னிமுடிவித்தமிகுவிஞ்சையின்முதிர்ந்தா
ரன்னநடையாட்கடிமையார்வமொடடைந்தார்
பின்னிவிடுகூந்தலர்பிடித்தவயில்வாளர்
கன்னியரிராயிரவர்கன்னிபுடைகாத்தார். (௪௨)

அஞ்சுடர்மணிக்குழவியாடுகழன்மாடம்
பஞ்சுடையபந்துகிளிபாவையொடுபூவை
மஞ்சுடையமின்னினனையாண்மகிழுநீர
செஞ்சுடர்விமானமதுசேர்ந்தனசெறிந்தே. (௪௩)

கற்பகமலர்ப்பிணையல்சேர்ந்துகமழ்கின்ற
பொற்பமைசெங்கோடிகமொடாடைபுதைவுற்ற
நற்புடையபேழைநறுஞ்சாந்துநனிபெய்த
செப்பொடுகடப்பகமடுத்தனசெறிந்தே. (௪௪)

பெருங்கலநிறைந்தமிகுபெட்டகமொடெல்லா
வருங்கலமுமார்ந்தவறையாயினபிறய்பொன்
னெருங்கொளிநிறைந்தமிகுசோதிநிழல்சூழப்
பொருங்கலிவிமானமதுபோந்ததுபெயர்ந்தே. (௪௫)

வே று.

முரசமார்த்தனமுழன்றனமுரிவளைமுகிலிடைவயிரேங்க, வரியொடாகுளியாலித்தவதிர்ந்தனவணிமுழவருகெல்லாம், விரைசென்மாவொடுவிரவினகளிறுகண்மிடைந்தனகடுமான்றேர், புரைசையானையினெருத்திடையரசனும்புகழொடுபொலிவுற்முன். (சசு)

சிகரயானையின் கவிழ்மணிசிலம்பின சிலம்பினபணிலங்கண், முகரவாயினபணவங்கண்முரன்றனமுரன்றனமுகிலெல்லா, மகரமால்கடல்வரைமிசையெழுந்தெனவெழுந்ததுபடைமாற்றம்; நகரவாயிலின்புறம்பணைநடுங்கினநடுங்கினகொடியெல்லாம். (சஎ)

ஒளிறுவாட்படையுளர்ந்ததுகிளர்ந்தன நுழைக்கலவுழையோர்கள், களிறுகாத்திரமுறுத்தலினெறித்தலைகருமுகினெறிவுற்ற, குளிறுமின்னியங்குழுமலிற்செழுமலைக்கொடுமுடியுடனார்த்த, வெளிறில்கேள்வியான்பெரும்படைவிசும்பிடைநிரந்தொளிவிரிந்தன்றே. (சஅ)

அமிதமாகியபெரும்படையகன்கடலகல்விசும்பழகெய்த
வமிதமாகியபெருவரைநிமிர்சிகையதனயலமர்ந்தேதக
வமிதமாகியநிலைத்தலைமலையணியருவிகளவையெல்லா [ள்.
*மமிதமாபவைசயம்பவைக்கடிதொழுதவையவையறிவித்தா

நங்கைகாணிதுநம்மலைக்கும்பரப்பொன்மலைப்புடைவீழுங், கங்கையாறிதன்கரையனகற்பகக்காவுகளிவைகண்டா, யிங்குநாமிருவிசும்பிடையியங்கலிற்சிறியவொத்துளவேனு, மங்கணூர்க்குநம்முலகினையளப்பவொத்துளவவையறியுங்கால்.

இரைக்குமஞ்சிறைப்பறவைகளெனப்பெயரினவண்டுபுடைசூழ, நுரைக்கவெள்ளனுமக்குழம்புகொண்டெதிர்ந்தெழநுடங்கியவிலையத்தாற், றிரைக்கரங்களிற்செழுமலைச்சந்தனத்திரள்களைக்கரைமேல்வைத், தரைக்குமற்றிதுகுணகடற்றிரையொடும்பொருதலதவியாதே. (ருக)

* அமிர்தப்பிரபை.

பூந்துமற்றிதன்முதன்மலைப்பிறந்தாம்மலையதுமுழைப் பேருஞ், சிந்துவெண்பதுவலத்ததுசெழுங்கலஞ்சிதர்கின்றநி கழ்யாறு, நுந்துபொன்னொளித்திரையெனுங்கரநலப்புடங் களினுரையென்னும், பந்துபொங்கநின்றடித்திடத்திளைப்ப தொத்துளததுபக்குங்கால. (ருஉ)

உயருஞ்சந்தனப்பொழிலலைத்தொளிர்மணிக்கலங்களையு மிழ்ந்திட்டுப், பெயருந்தெண்டிரைப்பிறங்கலுட்பிணங்கிய பெருவரையகிறேக்கி, வயிரவேதிகைமலைவதுகோபுரவாய் தலின்படிதீண்டி, யயிரைவார்கரைக்குடகடற்றிரையொடும் பொருதலதவியாதே. (ருங)

தேனெய்பாலொடுகலந்தனசின்மொழிச்சிறுநுதற்றிருவே நஞ், சேனைமாமுகிற்படலங்கண்மிசைச்செலச்சினைமுகில் முரலக்கேட், டேனையானைகளிணையெனவிருந்திடவிருங் கைம்மாவினங்காக்குங், கானயானைகள்கருவரையனையன கனல்வனவிவைகாணாய். (ருச)

பேய்மயானங்கொண்டிருந்தன்னபெருவரைநெரிதரத்தி ரைசிந்தித், தீமையானைகள்செவிபுகுசெறிகடாந்திளைத்தலிற் றிசைநாறிப், போய்மையானங்கொண்டிழிதரும்பெருந்திசை ப்புடையனபுனல்யாறு, சேய்மையானமக்கொளிர்முத்தின்ப ருவடந்தெளிப்பவொத்துளபாவாய். (ருரு)

கருவிவானத்தினகடுதொட்டனவெனநிலத்திடைகவின் செய்ய, மருவிநங்கட்குமணிவட்டுச்சிதர்ப்பவொத்துளசிலம லையெல்லா, மருவிவெண்டிரைசொரிகின்றவருவரைக்குவடு களவைமுன்றாற், பரவைவெண்கொடியெடுத்துநம்படைக் கெதிரெழுவதொத்துளபாவாய். (ருசா)

அலங்கல்வார்குழலமிர்தன்னசின்மொழியரிவைநம்மரு ங்கெல்லாம், விலங்கல்போல்வனவெண்மருப்பிரட்டையவே ழங்கள்விளையாடி, யிலங்குமால்வரையிறுவரைத்தடங்குத்தி யிடந்திடவிருபாலுங், கலங்கொள்பேழைகள்கவிழ்ந்தெனக் கதிர்மணிசொரிகின்றவவைகாணாய். (ருஎ)

அங்கண்மால்வரையருவிதந்தடக்கையிற்புடைத்துன்ற மர்ந்தாடிப், பைங்கட்செம்முகப்பரூஉக்கையம்பகடுதஃபாற் பிடிக்கணஞ்சூழச், செங்கற்றாளிதஞ்செவிப்புறத்தெறித்தலி ற்சிகரங்களிடையெல்லாம், பொங்கிக்குங்குமப்பொடியொத் துப்பொலிகின்றபொலங்கொடிபுடைநோக்காய். (ருஅ)

துளங்குவார்குழைத்துவரிதழ்த்துடியிடைச்சுடர்நுதற் சுரிகோதாய், விளங்குவெங்கதிர்விலங்கியவிசும்பிடையியங் குதல்புலன்கொள்ளார், பளிங்கினுள்ளறைப்பரப்பிடைப் பாய்வித்தபருமணிநெடுமான்றேர், வளங்கொணம்படைக்க டலிடைமறித்தவைசுழல்கின்றவகைநோக்காய். (ருகூ)

எடுத்தமாருதமெறிதலினெகிழ்ந்தனசிகழிகையிணரோடு ங், தொடுத்தமாலைகள் துணர்கொளப்புனைவன துகிலிடைபு டைசோர, வுடுத்தகாஞ்சியினொளிமணிக்கதிர்நகைப்பட்டங் களுடையாக, வடுத்துவீழுமொரணியிழையிளையவள்படுகின் றததுகாணாய். (சுo)

மல்குமும்மத மழகளிறுழக்கலின் மயங்கியமழைமேகம், பில்குநுண்டுழியுறைத்தலிற் பனித்தநம் பெரும்படைமடவா ர்க, ணல்குகாதலரகலத்துளொடுங்குதல் பலர்முன்னைநனி நாணி, மெல்குபூந்துகில்விரித்தவாவருகின்றவிதலைகண்மிக னேக்காய். (சுக)

இலையநாடகத்தெழில்கெழுவிமானமஃதியல்கின்றவிசை தன்னுன், மலையினம்மொடுவருவவொத்துளவ்வைவரவிலம டனேக்கி, யுலைவில்வையகத்தொளிசெய்ம்பகலவனுறுசுடர் சொரிகின்ற, வலையங்கையலவருவதுமற்றிதன்சலத்ததுவலி கண்டாய். (சுஉ)

இன்னபோல்வனவிளையவட்குழையவளினியனபலகாட் டிப், பன்னுமாயிடைப்பழனங்கள்வளாவியபடுகலிக்கெடினீ த்தங், துன்னுநீர்வயற் சுரமியத்தகணியுட்சுடரணிநகர்சார்ந் து, தென்னென்றேனிமிர்திருநிலையகமெனுஞ் செறிபொழில துசேர்ந்தார். (சுங)

வே று.

மோடுவிட்டலர்மொய்மலர்க்காவினுட்
பாடிவிட்டதுபாவைதன்கோன்படை
கூடிவிட்டிளையாரனகோதைமேன்
மூடிவிட்டமர்தேன்முரிவித்தவே. (சுசு)

ஆர்ந்தவெங்களியானைக்கவுட்புடை
வார்ந்துவீழ்மதமூசியவண்டினஞ்
சோர்ந்துவீங்கெருத்திற்றொடர்கண்ணிடைப்
பேர்ந்துவீழ்வனபோலப்பிறழ்ந்தவே. (சுரு)

முந்திநின்றிமிர்தேன்முரன்றுக்கிய
மந்தவின்னிசைவாங்கவனத்திடைச்
சந்தனத்தடந்தாளொடுசார்ந்தன
கந்திணைக்கனலுங்களியானையே. (சுசா)

குங்குமக்குளிர்பூணெரிதூளிமேற்
பொங்குளைக்கலிமாக்கள்புரண்டுவிற்
றங்கொளிப்பலகைத்தலம்பாவிய
மங்கலப்பெரும்பந்தியின்வந்தவே. (சுஎ)

பட்டமார்நெடுந்தேர்பைம்பொனுண்மிடை
கொட்டில்சேர்ந்தனகோனுறைகோயிலும்
வட்டமாகவ்வகுத்தனர்வானுல
கிட்டமாய்வந்திழிந்ததுபோலுமே. (சுஅ)

செம்பொன்மாளிகையும்வயிரத்திரட்
டம்பமுற்றதமனியக்கூடமு
மம்பொன்னூரங்கும்மகிற்சேக்கையும்
வம்புநீர்மையவாய்வளங்கொண்டவே. (சுகூ)

தெள்ளுவெண்பவழத்திரளூன்றிய
வெள்ளிமண்டபமும்விரைநாறுப
பள்ளியம்பலமும்பகற்கோயிலும்
வள்ளனன்னகர்வாய்மலிவுற்றவே. (எO)

வெளவுநீரென்னவாவியுமாடெலாந்
தெய்வநாறுவதேங்கொள்செய்குன்றமு
மௌவன்மண்டபமும்மணற்றுழ்வரு
மெவ்வபாலுமிசைந்துளவென்பவே. (எக)

கொற்றவன்கொடிக்கோயிற்புறம்பணை
சுற்றிவிட்டதுசுற்றும்பெரும்படை
மற்றைமன்னரெல்லாம்வனத்தின்புடை
முற்றிமுன்னினர்முத்தணிமாலையார். (எஉ)

கன்னிமூதெயில்சூழ்கடிகாவினுட்
கன்னிதாதைகண்ணுர்நகரிஞ்சியுட்
கன்னிமார்பலர்காக்குங்கடையதோர்
கன்னிமாநகர்கன்னிக்கியற்றினர். (எந)

மின்னினார்ந்தவிமானத்தலத்திடைப்
பொன்னனார்பலர்போற்றவிழிந்துதன்
மன்னனாருளான்மணிமாளிகைக்
கன்னிமாநகரெய்தினள்கன்னியே. (எச)

வே று.

மற்றவரிருத்தலுமருகிசென்றுபின்
சுற்றுநீர்வளவயற்சுரமைநாடுடைக்
கொற்றவன்கழலடிதொழுதுகூறலும்
வெற்றிவேலவனெளிதுளும்பவீங்கினன். (எரு)

ஏரணிமணிக்கலமணிகயாருமென்
றூரணிவளநகரறைகவோடணை
தோரணந்திசைதொறுஞ்சுடரநாட்டுக
பூரணபொற்குடம்பொலியவைக்கவே. (எசு)

இரவலரிருநெதிகவர்கவீண்டியற்
புரவலர்வருகெனப்போகதூதுவர்
திருவலர்சினகரன்செல்வப்பொன்னகர்
விரவலர்மழையொடுவிழவுசெய்கவே. (எஎ)

எரிமணிச்சுடரணியிலங்குநங்கைதன்
றிருமணிக்காவினுட்செல்லுஞ்செய்கையாற்
புரிமணிப்பொலங்குழைப்பொம்மல்வெம்முலைக்
குருமணிக்கொம்பனார்கோலஞ்செய்கவே. (எஅ)

உழைக்கலமகளிரொடுவந்துசெல்வன
புழைக்கையவிளம்பிடிபுகுந்துபண்ணுக
தழற்புகைநவின்றகைத்தானைவீரர்த
மழற்படையொடுபுகுந்தமைககாவலே. (எகூ)

இன்னனவுழையவர்க்கருளியேந்துதோண்
மன்னவன்மருசியைமருளக்கட்டுரைத்
தென்னெடும்பெயர்திரும்பாடிக்கென்றொரு
பொன்னகர்மாளிகைபுகுதன்மேயினான். (அ0)

வேண்டுபவவன்றிறத்தருளிவேந்தர்கோ
னீண்டியமந்திரக்கிழவர்க்கென்னையாங்
காண்டகுதிறலவற்காணுமாறென
வாண்டகைக்கவர்களுமறியச்செப்பினார். (அக)

விண்ணியல்விஞ்சையர்க்கிறைவன்வேநதரா
கண்ணியபெருங்குலக்கடலுட்டோன்றினா
னண்ணியதொடர்ச்சியுமிக்கநண்ணுமா
லெண்ணுவவவன்றிறத்திறைவவில்லையே. (அஉ)

குலத்தினுங்குணத்தினுங்கொண்டகோலமா
நலத்தினுநின்னெடுநிகர்க்குநன்மையன்
மலைத்தலில்வ்யத்தினும்பெரியன்மல்லினு
முலத்தினும்பெருகியவுருவத்தோளினான். (அங)

ஆதலாலவன்றிறத்தியாதுசெய்யினு
மேதமாங்கில்லைகோவிறைவவென்றனர்
கோதிலாக்குணம்புரிகுன்றனார்க்கொரு
நீதிநூற்கடலினின்றனையநீர்மையார். (அச)

வேறு.

ஆங்கவர்மொழியைக்கேட்டேயறிவினுக்கரசரென்று
வாங்கிருங்கடலந்தானைமன்னவன்மகிழ்ந்துமற்றைப்
பூங்குழைமகளிர்காக்கும்பொன்னணிவாயில்போகித்
தேங்கமழலங்கன்மார்பன்றிருநகர்முற்றஞ்சேர்ந்தான். (அரு)

அடுகடாமாவிநாறுமழிமதங்கருவிவீழத்
தொடுகடாவயிரத்தோட்டியுடையனதொடர்கணூன்ற
விடுகொடாவியாளநிற்பமெல்லவன்பணிகள்செய்யும்
படுகடாக்களிறுந்தேரும்புரவியும்பண்ணுகென்றான். (அசு)

பணித்தசொல்லதனைக்கேட்டேபகைநிலைக்கந்திறுடுமெ
பிணித்தபொற்றொடர்கண்விட்டுப்பெயர்ந்தகானிகளநீக்கி
மணித்தொடர்மருங்கின்வீழ்த்துவரிபுரிக்கச்சைவீக்கி
யணித்தகைப்பாகர்பண்ணிக்கொடியெடுத்தருகுசேர்ந்தார்.

செம்பொன்செய்கிடுகுகோத்துத் திகிரிவாய்ப்புளகஞ்சே
ர்த்திப், பைம்பொன்செய்பரவைத்தட்டிற்பருமணிபதித்ததி
ண்டேர், கம்பஞ்செய்துலகமெல்லாங்கைவளைக்கொள்வ
போல, வம்பொன்செய்கொடிஞ்சிநெற்றிகொடியெடுத்தணைந்
தவன்றே. (அஅ)

முற்றத்தானெரியுஞ்செம்பொன்முகனணிகருவிசேர்த்திச்
சுற்றுந்தாதணிந்துகாமர்சூழ்மணிக்கோவைசூழ்ந்து
மற்றுத்தாம்வகுக்கற்பாலமங்கலமரபிற்பண்ணிப்
பொற்றத்தார்க்கவரிவேய்ந்துபோந்தனபுரவியெல்லாம். ()

ஒட்டியவூழினன்றியுயிர்கொளலொழிகவென்று
சுட்டினர்சொல்பவாயிற்கூற்றமுந்துளங்குநீரார்
கட்டியகழலர்தாழ்ந்தகச்சையர்கனலும்வாளர்
மட்டுயரலங்கல்சூடிவயவருமவந்துசூழ்ந்தார். (கூ0)

அன்னணந்தானைபண்ணியணைந்தபின்னமைச்சரோடு
மன்னவன்மருங்கினின்றமருசியைவருகவென்று
பொன்னுதல்வேழமொன்றுபொலங்கலம்புலம்பவேற்றி
முன்னுறநின்றுகாதன்முறுவலோடருளிச்செய்தான். (கூக)

தேங்கமழலங்கன்மார்பன்சித்திரதரனைக்கூவிப்
பாங்கமைபஞ்சும்பட்டுந்துகில்களும்பரப்பிமேலால்
வீங்கியசுடரவாயமிடைமணிக்கலன்கள்விஞ்சை
நீங்கருந்திறலினான்றனெடுநகர்நிறைக்கவென்றான். (௯௨)

பொன்னணிகலத்தின்குப்பைபுரிமணிக்கோவைப்போர்வை
மன்னியவயிரக்குன்றம்வலம்புரிமணியின்கோவை
பின்னியபவழவல்லிப்பிறங்கலோடனையவெல்லாங்
கொன்னவில்வேலினான்றன்கோயின்முன்குவிக்கவென்றான்.

ஆண்டுறவிரைந்துவேதித்தழிகின்றமதுவின்றண்டோடா
டண்டிநின்றினவண்டார்க்குமின்சுவைநறவின்சாதி
வேண்டுநர்வேண்டுமாறுவிருந்தயர்ந்துயரும்வண்ணந்
நீண்டரும்விஞ்சைவேந்தன்றிருநகர்ச்செறிக்கவென்றான். ( )

* தேங்கனிகுழவித்தீநீர்செம்பழத்திரளின்கண்ணி
பாங்கமைபளிதச்சாதிபாசிலைத்தழையின்கற்றை
தீங்கழைகரும்பின்கட்டிதிரளரைக்கடிகையின்ன [ன்.
தோங்கலந்திலாதபொல்லான்றொன்னகர்ச்சொரிகவென்று

கணணியுங்கமழுஞ்சூட்டுங்கற்றையாக்கட்டப்பட்ட
தண்ணியமலருந்தாமமாலையுஞ்சதங்கைதம்மோ
டெண்ணியவண்ணமாலையெழினகரெல்லையெல்லாம்
விண்ணியல்விமானவீதிவெறிகொளமிடைவிவேலோய். ( )

குங்குமக்குழம்புகொட்டிச்சந்தனத்தொளிகண்கூட்டி
யங்கலுழ்விரையின்சேற்றாடகநகரளறுசெய்து
மங்குலாய்விசும்புமூடவகிற்புகைமயங்கமாட்டிப்
பொங்குபொற்சுண்ணம்வீசிமணவினைபுனைவியென்றான். ( )

அனையனவவனையேவியரசிளங்குமரர்தம்மைப்
புனைமலர்க்கண்ணிசூடிப்பொன்னெழிலாரந்தாங்கி
நனைகவுள்வேழமேறிநம்மொடுவருகவென்றான்
கனைகுரன்முரசமார்க்குங்கடிபடைக்காலவேலான். (௯௮)

* காயின்புணர்ச்சியே கனிக்குமாயினது.

திங்களையிரண்டுகூறுச்செய்துமுன்செறித்தபோல
மங்கலவடிவின்வந்தவாலனுயர்வயிரக்கோட்டுச்
செங்களிதிதித்தபோலுஞ்செம்பொறிச்சிறுகண்வேழம்
வெங்களிவியாளம்வல்லவிறலதுவருகவென்றான். (கூகூ)

அருளறிந்துழையரோடியரசுவாவருகவென்ன
மருளிவண்டுழலுந்தாரைமழகளிறதனைமெய்ப்பா
னிருளிருங்குன்றமெய்க்குமிரும்பிணரெருத்தமேறி
வெருவருமொழியிற்றேறிமேன்முறைத்தொழிலனானான். ()

அரசுவாவதனோடாடியியலறிந்தணைந்தபாகன்
புரைசைதானெகிழ்த்துமற்றோர்புதுவடம்புரளவீக்கி
யுரைசெய்காற்சுவடுநுங்கச்செறித்தொன்றுபுறத்ததாகி
நிரைசெய்கானிகளம்விட்டுநிலத்தவரேறுகென்றான். (க0க)

பின்னவனேறித்தூசப்பெருவடம்பிடித்தபின்னைப்
பொன்னவிர்தொடர்கண்விட்டுப்புறத்துக்காற்புரோசைகோ
மன்னவனருளுமாறுமங்கலக்கோலஞ்செய்வான் [த்து
றுன்னருங்கவைமுட்கோலோர்சூழ்ந்துவந்தணகவென்றான்

கருமபொடுமுடித்தகாய்நெற்கதிரணிக்கவளக்கற்றை
யிரும்புடைவயிரக்கோட்டினிடையனபயிரினீக்கிச்
சுரும்பொடுமலர்கள்வாய்ந்ததுகளையுமகலவாரி
யரும்புடையலங்கன்மார்பன * ரத்தநீரெறிவித்தானே. ()

குங்குமக்குழமடுகோட்டிச்சநதனவெள்ளைகொண்டு
மங்கலவயிரக்கோட்டுவலங்கொளவரைந்துமற்றுச்
சங்கினதுருவினாலும்வலம்புரிச்சவியினாலு
மங்கதன்பாகத்திரத்தருகெலாமணிவித்திட்டான். (க0ச)

பொற்றிரட்கடிகைபூட்டிப்புரிமணியோடைசேர்த்தி
முற்றியபுளகச்சூழிமுகம்புதைத்திலங்கவீழ்த்துச்
சுற்றிநின்றெரியுஞ்செம்பொற்சுடர்நிலைப்பட்டஞ்சேர்த்திக்
கற்றையங்கவரிக்கண்ணிகருணமூலத்துவைத்தான். (க0௫)

---

* செஞ்சந்தனக்குழம்பு.

தாரணிதயங்கச்சாத்தித்தவிசின்மேல்விரிந்துமஞ்சி
லேரணிதிருவில்லேய்ப்பவிருவடம்விலங்கவீக்கிச்
சீரணிமணிகள்வீழ்த்துச்செம்பொன்செய்சுண்ணஞ்சிந்திக்
காரணிமின்னிற்றோன்றக்கதலிகைநடுவித்தானல். (காசா)

வேழமாங்கணிந்தபின்னைவேந்தர்போற்றிசைப்பவேறிச்
சூழொளியாரமின்னச்சுடர்க்குழைதிருவில்வீச
வேழையர்கவரியேந்தவெரிகதிர்விரிவதொத்தா
னூழிநீருலகங்காக்குமுழவுத்தோளுருவத்தாரான். (கா0எ)

ஒத்துநின்றுலகமெல்லாமொருங்குடன்குளிரவேம்பி
வித்தகர்புகழுமோரார்வெள்ளிவெண்குடையொன்றோங்கி
முத்தவெண்மாலைநான்றுமுடிமிசைநிழற்றவூரி
மத்தமால்களிறுநுந்திவளநகர்மருவச்சென்றான். (கா0அ)

வேறு.

அரசிறையரசரொடெழுதலுமதிர்தரு
முரசெறியிமிழிசைமுழவொடுகெழுமின
திரைசெறிநெடுவரைகடைதொறுதிசைதிசை
கரைசெறிகடலொலிகடுகியதெனவே. (கா0கூ)

துளைபடுகுழலிசைதுடியொடுசிறுபறை
கிளையொடுபடலிகைகிளையொடுகிளர்தர
வளையொடுவயிரிசைமருவினமழையென
வளைபடுமணியரவறிவயர்வுறவே. (காக0)

சொரிவனமலர்மண்முசுழல்வனவெழுபுகை
யிரிவனமதுகரமிருள்வனதிசைமுக
மெரிவனசுடர்மணியெழுவனகதலிகை
தெரிவனவரியனதெருவொடுதிசையே. (காகக)

கொடியொடுகுடையிடைமிடைவனவிருள்செய
முடியொடுசுடர்குழைமுளைவெயிலொளிசெய
வடியொடுபுனைகழலரசிறைபடையெழ
விடையிடையிரவொடுபகலிசைவனவே. (காகஉ)

புரவியகுரமுகமிடுதொறுபொடியெழு
மருவிகொண்மதமழைபொழிதொறுமளறெழு
மருவியமகிதருமனநனியயர்வுறு
தெருவுகள்படுவதுசிலரிடைதெரிவார். (ககந)

செருவியல்களிறுகள்செவிபுடையரவமு
முருவியலிவுளிகளொலிகலவரவமுங்
கருவிகொள்வயவர்கள்கழலர்லரவமும்
விரவியசெவிபிறவிளிகொளலிலவே. (ககச)

வளையவர்மனநிறையழிதருவடிவுடை
யிளையவரிருபுறவுரைகளினிடையிடை
திளையொடுநகைநனிசிலபலகனிவன
விளைவுடையவர்களும்விழைவுறுதகவே. (ககரு)

குயிலுவரொலியொடுகுடமுழவதிர்வொடு
மயிலினமகளிர்தமவிநயமடநடை
யயிலியலரசர்தமருகவைபெருகலி
னியலியவளநகரிடமிடமிலவே. (ககசு)

சுரமையரதிபதிவருவதுமருசியி
னருமைகொள்புகழவனறிதலினெதிர்கொள
வரமிகுநெடுவரைமணிமுடிநெடியவ
னுரமிகுபுடையெழவுரைநனியரிதே. (ககஎ)

கருவரைவருவனவெனவுளகளிறுகள்
பெருவரையருவிகளெனவுளபெயர்கொடி
யருவரையடுபுலியெனவுளரிளையவர்
பருவரையிறைபுடையெழுவதொர்படையே. (ககஅ)

நிலமிசையவர்படைநிலநெளிவுறவரு
மலைமிசையவர்படைமலைநெரிவுறவரு
மலைதிரையொலிகடலவைபுடைபெயர்தரு
நிலைபெரிதரிதிபநெடுவரைநிரையே. (ககசு)

முகிலிடைபுகுமுறைபுரவிகளெனினவை
முகிலிடைபுகுவதொர்முறைமையையுடையன
வகிலிடுநுழைபுகையவைகமழ்வனவெனி
னகிலிடுநுழைபுகையவாடுகழதுவே (கஉ0)

வனமலர்பொழிவனமழைமுகினமழைமுகி
லினமலரிடையிடைவிரைமழைசொரிவன
கனமலிகழனமணிவரையவனுழையவ
ரினமலியமாரினிழிவநர்சிறிதே (கஉக)

அலர்மிசையிளையவரடியிடவடியிட
மிலைமிசையியலபவரியலுகளெழினவை
நிலமிசையவரொடுநிலநடைபடாகென
மலைமிசையவரிறையருளியவகையே (கஉஉ)

வேறு.

சங்குபோலொளியவன்றுதைதன்படை
கங்கைபோறபடாநததுகலகருங்காதலா
லிங்குநீயமுனையினிழிவதொத்தது
மங்குலசோமணிவரைமன்னன்றனையே (கஉ௩)

மாவியலகடற்படைமயங்கிவானிடைப
பூவியலிணரொடுகவரிபொங்கலாற்
பாவியபளித்திரைபபரவைபாற்கடன்
மேவியவிசும்பிடைவிரிந்ததொத்ததே. (கஉச)

கழுமியமுகிலொடுகளிறுகான்மிடைந்
தொழுகியவருவிநீருகுக்குமாதலான்
மழைமுகின்மீழகளிறென்னுமவேற்றுமை
யுழையவருழையவர்க்குணர்த்தலவேண்டுமே. (கஉரு)

புணணியமணிநிரைபரநதுபூவுதிர்ந்
தெணணியலகொடிமிடைந்திருண்டுபொங்கெலாங்
கண்ணியல்கவரிமாக்கலந்துகானக
மண்ணியலபரவையாய்வருவதொக்குமே. (கஉசா)

நந்தியசுடர்மணிநாகமீமிசைப்
பைந்துகிற்கதலிகைபரந்துதோன்றுவ
நந்தியசுடர்மணிநாகமீமிசைப்
பைந்துகிற்கதலிகைபரந்தபோலுமே. (கஉஎ)

கணங்கெழுகவரிகள்கலந்துகாழகி
லணங்கிவர்நாவிகாலளைந்துநாறலா
லிணங்கியகடற்படைப்பரவையிவ்வழி
மணங்கமழ்மகிரிவருவதொக்குமே. (கஉஅ)

காமருபூங்குழைக்காமவல்லிகட்
டார்மரியனையவர்தயங்கியுண்மையாற்
காமருபூங்குழைக்காமவல்லிகட
டாமரியனையதத்தானைவண்ணமே (கஉகூ)

மணிமருங்குடையனவயிரக்கோட்டின
வணிமருங்கருவியவரைகளன்னவான்
மணிமருங்குடையனவயிரக்கோட்டின
வணிமருங்கருவியவரசவேழமே. (கசு0)

மஞ்சிவர்வணிவரைமகளிர்சீறடி
விஞ்சையந்தொழிலியலவிடுத்தமெலவியற்
பஞ்சின்மேன்மிதிப்பினும்பதைத்துப்பையவே
யஞ்சிமேலிவர்வதற்கார்வஞ்செய்யுமே. (கசுக)

மணிவரையரசனுமகரமால்கட
லணிவரைநிலமுடையானைவேந்தனுங்
கணிவரைப்பொழுதினுற்கண்ணுற்றாரரோ
பணிவரையிலாத்தொழிற்பரவைத்தானையார். (கசுஉ)

அம்மலரலங்கலான்றடக்கையென்னுமம்
மொய்மலர்த்தாமரைமுகிழ்க்குமெல்லையுண்
மைமலர்நெடுவரைமன்னன்மற்றவன்
செம்மலரங்கையிற்செறியப்புல்லினன். (கசுசு)

வலம்புரிவண்ணனுமகரமால்கட
னலம்புரிநல்லொளிநம்பிதானுமவ்
வுலம்புரிதோளினுனெளிகொள்பைங்கழல்
கலம்புரிதடக்கையாற்கதழக்கூப்பினார். (கீகூச)

காமருகவினெளிக்காளைமார்களைத்
தாமரைச்செங்கணுற்றழுவிப்பின்னவர்
பூமருபொன்வரையகலம்புல்லினான்
சாமரைநன்னுதற்றடக்கையானையான். (ககூரு)

எழில்விரிநெடுவரையிறைவன்றன்மக
னழல்விரிசுடரொளியருக்ககீர்த்தியும்
பொழிலணிபோதனத்திறைவன்பொன்னணிக்
கழலவனடியிணைகையிற்கூப்பினான். (ககூசு)

ஆங்கவனழகுகண்பருகமற்றவன்
றுங்கெழுவனையதோடழுவித்தன்னொடு
மோங்கியமழகளிற்றும்பரேற்றினான்
வீங்கியகனைகழல்வென்றிவேந்தனே. (ககூஎ)

வேறு.

மன்னியவிஞ்சைவேந்தன்றம்பியுமருகன்றானுந்
துன்னியகூரமைநாடன்றொடுகழறொழுதலோடும்
பின்னியகாதல்வெள்ளம்பெருகியவிரிவிற்றாகிப்
பொன்னியல்கழலினார்க்கோர்பொங்கொளிபுணர்ந்ததன்றே.

வெஞ்சுடராழியாளும்விறலவற்கிளையதாதை
மஞ்சுடைவிஞ்சைநாடன்மலரடிவணங்கிமற்ற
வஞ்சமில்புகழினான்றன்மனத்தையும்வணங்கியிட்டான்
செஞ்சுடரிலங்குபூணான்றிறற்சிறீபாலனென்பான். (ககூகூ)

ஆய்ந்தசீரரசராங்குக்கலந்தபின்னமுதவெள்ளம்
பாய்ந்ததுபரவைநன்னீர்ப்பாற்கடல்பரந்ததேபோ
லேந்தியகாதல்கூரவெழினகர்பெயர்ந்துபுக்கார்
காந்தியகனகப்பைம்பூட்கருவரையனையதோளார். (கசா0)

எழில்கொள்கந்தனையதிண்டோளிளையரோடரசரீண்டிப்
பொழிலகந்தழீஇயசோலைப்பொன்னகர்க்கோயில்புக்குத்
தழுமலர்க்கோதைநல்லார்பலாண்டிசைததும்பவாழ்த்தச்
செழுமலர்த்திரள்கடாழுஞ்சித்திரகூடஞ்சேர்ந்தார். (கசக)

வெள்ளொளியெயிற்றுப்பேழ்வாய்விரியுளையரசசிய
மொள்ளொளிதவழவேந்துமொளிமணியணையின்மேலார்
கள்ளொளிகமழுங்கோதைமகளிர்கள்கவரிவீசத்
தெள்ளொளிக்குமரரோடுமிருந்தனர்திருந்துவேலோர். ()

தாமருமகளிர்வீசுங்களமணிப்பவழத்திண்காற்
சாமரைபயந்ததென்றல்தகைமுடித்தாதுசிந்தப்
பூமருபொறிவண்டார்ப்பப்பொலிந்தவரிருந்தபோழ்தி
னேமருகடலந்தானையிருநிலக்கிழவன்சொன்னன். (கசரு)

விண்ணிடையிழிந்துவந்தவிண்ணவர்கிழவனொப்பாய்
மண்ணிடையென்னையிங்கோர்பொருளெனமதித்துவந்த
தெண்ணிடையுணருமாந்தர்க்கிடைதெரிவரியதொன்றாற்
கண்ணிடையுமிழுஞ்செந்தீக்கடாக்களிற்றுழவவென்றான்.()

ஏங்குநீர்வளாகங்காக்குமிக்குவாமன்னரேறே
தூங்குநீர்மருதவேலிச்சுரமைநாடுடையதோன்றா
றேங்குநீரமிர்தின்றீர்த்தஞ்சென்றனர்தெளித்தலன்றே
யோங்குநீருலகந்தன்னுளுயர்ந்தவர்க்குரியதென்றான். ()

வருதற்குமுதலுமுன்பேமருசிவந்துணர்த்தக்கேட்டேன்
பொருதற்கண்ணரியவேலோய்புராணநூற்புலவர்யாருங்
கருதற்கண்ணரியகண்ணிகடல்வண்ணற்குரியளென்னத்
தருதற்குமகிழ்ந்துவந்தேன் * றாழமீங்கொழிகவென்றான்.()

அன்னணமரசர்பேசியிருந்தபின்னருக்கனோடும்
பொன்னணிபுரிசைவேலிப்புதுநகர்புகுகவென்று
மன்னவகுமரர்தம்மைமணிவரையரைசனேவப்
பின்னவர்வேழமேறிப்பெயர்ந்தனர்போதுகின்றார். (கசஎ)

* தாழம், தாமதம்.

ஆயிடையரசசீயமனையவர்பெயரும்போழ்தின்
வேயுடையருவிச்சாரல்வெள்ளிவேய்விலங்குநாடன்
தீயுடையிலங்குவேலான்றிருமகளமிர்தின்சாயற்
வீயுடையலங்கன்ஞான்றமிடைமணிவிமானஞ்சேர்ந்தாள். ( )

பொலங்கலம்புலம்பவாயம்புடைநின்றுபோற்றுக்கூவ
வலங்கலுங்குழலுந்தாழவணிஞிமிறரவஞ்செய்ய
விலங்கலங்கனகமாடத்தெழுநிலையேறலுற்றாள்
விலங்கலின்குவடுசேருமெல்லியற்றோகைபோல்வாள். ( )

ஆயத்துளலர்கொம்பன்னாளமிர்தமாபிரவையென்ற
வேயொத்தபணைமென்றோளிமிடைமணிக்கபாடநீக்கி
வாயிற்கண்வருகங்கைவளநகர்காண்கவென்று
கோயிற்கணருகுசெல்லுங்குமரரைக்காட்டினாளே. (கரு0)

விண்ணதிர்த்தனையவாகித்திசைமுகஞ்சிலம்பவீங்கிக்
கண்ணதிர்முரசுஞ்சங்குங்கடற்பெயர்முழக்கமாக
மண்ணதிர்கொள்ளச்செல்லுமைந்தர்கள்யார்கொலென்னு
மெண்ணதிர்மனத்தினாட்குத் தோழிமற்றிதனைச்சொன்னாள்.

முன்னவனம்பிவெய்யோன்பெயரவன்முழவுத்தோளான்
பின்னவன்சுரமைவேந்தன்பெருமகனவற்குத்தம்பி
கன்னவில்வயிரத்தோளான்கருமுகிலுருவக்காளை
யின்னவனென்னலோடுமிலங்கொளிமுறுவல்கொண்டாள்.

நீலமாமணிக்குன்றேய்ப்பநிழலெழுந்திலங்குமேனிக்
கோலவாயரசகாளைகுங்குமக்குவவுத்தோளான்
மேலவாநெடுங்கணோடேமீட்டவைவிலக்கமாட்டாண்
மாலைவாய்க்குழலிசாலமம்மர்கொண்மனத்தளானாள். (கருக)

தாமரையனையகண்ணுந்தடக்கையும்பவழவாயும்
பூமருபூவைக்கண்ணிப்புதுமலரொளியுங்காட்டித்
தூமருநீலமென்னுமணிதுணர்ந்தனையகுஞ்சிக்
காமருகாளைகன்னிகண்களைச்சிறைகொண்டிட்டான். (கருஉ)

சிறையென்பதில்லைச்செவ்வேசெம்புனல்பெருகுமாயி
னிறையென்பதில்லைக்காழநோர்நின்றுசிறக்குமாயி
னிறைநின்றதுளதென்பார்சென்றரும்பெறலிவளதுள்ள
ரைநின்றுகமழுங்குஞ்சிநம்பிபாற்பட்டதன்றே. (கருரு)

கோணின்றமதியம்போலக்குழைமுகஞ்சுடரக்கோட்டித்
தாணின்றகுவளைப்போதிற்றுதகங்குழையமோந்து
வாணின்றநெடுங்கண்காளைவடிவினுக்கிவரமற்றை
நாணின்றுவிலக்கநங்கைநடுவுநின்றுருகுகின்றாள். (கருசு)

அவ்வழியருந்தம்பூத்தவருங்கலக்கொம்பைத்தங்கோ
னிவ்வழிவருகவென்றதவடமரிசைப்பக்கேட்டு
மைவழிநெடுங்கணுளுமனம்புக்ககுரிசிறன்னைச்
செவ்வழிமழலைநாணேயெழினியாமறைத்துச்சென்றாள். ()

ஆயிரங்கண்ணிலாதாரக்கழகுகாண்பரியநங்கை
வேயிரும்பணைமென்றோளார்மெல்லடிபரவச்சென்று
மாயிருஞ்செல்வத்தாதைமலரடிவணங்கினின்றாள்
சேயிருங்குன்றமீன்றசெழுமணிச்சலாகைபோலவாள். ()

மங்கையைவலத்துக்கொண்டுமாலையுங்குழலுநதோடு
மங்கையாற்றிருத்திமாமனடிகளைப்பணிகவென்று
செங்கயற்கண்ணிதாதைசெவ்விரல்குவியபற்றிப
பங்கயப்பழனத்துடன்பாதமூலத்துவைத்தான். (கருகூ)

மருமகள்வணங்கமுன்னேவலப்புடைக்குறங்கினேற்றிக்
கருமைகொள்குவளைக்கண்ணிகழிநலக்கநிர்ப்புநோக்கித்
திருமகளிவளைச்சேருஞ்செய்தவமுடையகாளை
யருமைகொடிகிரியாள்தற்கையமொன்றில்லையென்றான். ()

அருங்கலமகளிர்க்கேற்றவழகெலாந்தொகுத்துமற்றோ
ரிருங்கலியுலகங்காணப்படைத்தவனியற்றினன்கொ
லொருங்கலர்த்துலகின்மிக்கமகளிரதுருவமெல்லாம்
பெருங்கலவல்குறன்பாற்புகுந்துகொல்பெயர்ந்ததென்றான்.

அருந்தவமுடையனேயானன்றெனிலணங்குபோலும்
பெருந்தகைகங்கைதன்னைப்பெற்றவுன்ருதையென்னுந்
திருந்தியமொழியுந்தெய்வச்செல்வமுந்தெய்வமன்னீர்,
பொருந்தியதொடர்புமெய்தப்புணருமோபுவியினென்றான்.

ஆங்கமர்ந்தரசர்பேசியலர்மிசையணங்கன்னாளைப்
பூங்கமழ்சோலைவேலிப்பொன்னகர்புகுகவென்னத்
தேங்கமழ்குழலினருந்தாயருஞ்செவ்விகாப்ப
வீங்கொளிவிமானத்துச்சிவெண்ணிலாமுற்றஞ்சேர்ந்தாள்.()

மதுநனைந்தலர்ந்ததாரான்றிறத்தையான்மறப்பனென்னின்
விதிநனிதுரப்பமீட்டுவினைப்படுவிளைக்குமுள்ள
மிதுநனியறியுமோவிவ்வுலகமென்றிதயத்தோடும்
புதுநனைவிரிந்தகோதைப்பொன்னனாள்புலம்புகொண்டாள்.

காதலார்திறத்துக்காதலாக்கியகாதலாரை
யேதிலார்போலநோக்கினிருமடங்காகவெய்தும்
போதுலாஞ்சிலையினன்றன்பொருகணைக்கிலக்கஞ்செய்யு
மாதலாற்காமநோய்க்கோரருமருந்தில்லையன்றே. (கசுரு)

தேமிடைகாவல்வேலிச்செழுமணற்குவாலுங்குன்றும
பூமிடைதடமுங்காவும்புக்கவர்க்கரணமாகா
தாமுடைமனமுங்கண்ணுநிறைவுந்தம்பாலவாகா
காமுடைமனத்தினார்கட்கியாருளர்களைகணவார். (கசுசு)

அனையவளரசகன்னியாகியபொழுதினிப்பாற்
புனைமலரலங்கன்மார்பிற்பூமியங்கிழவன்றேவி
வனமலருநீவக்கண்ணரிமணிவண்ணன்மார்புதோயுங்
கனமணிப்பூணினாளைக்காண்கெனவிடுக்கப்பட்டார். (கசுஎ)

மதுகரிவயந்தசேனையெனவிவராதியாகப்
புதுமலர்க்கொடியும்பூவுந்துணர்களும்புணர்ந்தபேரார்
கதிரனகலங்கடாங்கிக்காப்புமங்கலங்களேந்தி
யெதிர்தருமிளமையாரோராயிரத்தெண்மர்சூழ்ந்தார் (கசுஅ)

மாதவக்குலத்துளார்கண்மாதவசேனையுள்ளிட்
டோதியபெயரின்மிக்காருலகறிகலையின்வல்லார்
கோதையுங்குழையுந்தோடுங்குளிர்முத்தவடமுந்தாங்கிப்
போதிவர்குழலிதாதைபொன்னகர்முன்னினாரே. (கசுகூ)

நன்னுதலவருநம்பிதாயருநடையிற்றூய
பொன்னுதற்பிடியுந்தேரும்வையமுமிழிந்துபுக்கு
மன்னனைவணங்கியன்னோன்பணிகொண்டுமடந்தைகோயி
லின்னிசைமகளிர்முன்சென்றெதிர்கொளவெய்தினாரே. ()

பொன்னியலமளிமேலாள்பூவணைமருங்குதீண்டக்
கன்னியர்கவரிக்கற்றைகைவலனசைப்பக்காய்பொ
னின்னிசைக்குழைவில்வீசவினிதினிங்கிருந்தநங்கை
துன்னியமகளிர்தம்மைத் தமர்தொழுதுணர்த்தக்கண்டாள்.

வலங்கொண்டுதொழுதுவாழ்த்திமற்றவரடைந்தபோழ்தி, னுலங்கொண்டவயிரத்தோளானுழைக்கலமகளிரென்று, நலங்கொண்டோரார்வங்கூரநகைமுகமுறுவரேன்றிப், புலங்கொண்டதனைக்காப்பான்பூவொன்றுநெரித்துமோந்தாள்.()

விண்விளக்குறுக்குந்திங்கட்சுடர் நுதலவிளக்கினாலும்
பெண்விளக்குறுக்குமேனிபெருகியவொளியினாலும
பண்விளக்குறுக்குமின்சொற்பாவையம்பாவைமாரைக்
கண்விளக்குறுக்குமாதுகாண்டலுக்கரியளானாள். (களஙு)

செஞ்சிலம்பொலிக்குஞ்செல்வச்சீறடித்தெய்வப்பாவை
பஞ்சிலங்கணையின்மேலாள்பரந்தொளிதிருவில்வீச
மஞ்சிலங்குருவவானின்மழையிடைநுடங்குமின்போ
லஞ்சிலம்படியினார்தமறிவினையயர்வித்திட்டாள். (களச)

மற்றவர்காணும்போழ்தின்மாதவசேனையென்பாள்
சுற்றியபளிங்கிற்சோதிச்சுவர்மிசையன்னதோன்ற
வெவளுருவமென்றூங்கிதயத்துளெழுதிவைத்துப்
பொற்றையோர்பலகைதன்மேற்பெய்வளையெழுதலுற்றாள். ()

பண்களை மருட்டுமின்சொற்பாவையைப்பருகலுற்ற
கண்களை மருளநீருங்கண்களென்கணாகப்
பெண்களை மருட்டுஞ்சாயற்பேதையைக்காண்மினென்று
மண்களை மருட்டுஞ்சீர்நும்மாமியாரடிகள்சொன்னார். (கஎசு)

ஆதலாலவர்க்குச்சொல்லு மாற்றமொன்றருளிச்செய்மின், மாதுலாஞ்சாயலென்னமாதவசேனையென்பாளேதமாங்கில்லையன்றேயெங்கண்முன்மொழியவென்றாள், கோதிலாக்குணக்கொம்பன்னாள்குறுநகைமுறுவல்கொண்டாள். (கஎஎ)

அங்கவள்குறிப்புநோக்கியமுதமாபிரபையென்னு
மங்கலத்தோழிகூறுமாமியாரடிகடம்மை
யெங்கண்மெய்ச்செய்கையாகவிணையடிபணிமினென்றாள்
செங்கனிகனிந்தசெவ்வாய்ச்சிறுநுதற்பெரியகண்ணாள். ( )

ஆங்கவண்மொழிந்தபோழ்தினணங்கினைவணங்கிமற்றத்
தீங்கனியமிர்தமன்னதிருமொழிப்பண்ணிகாரம்
வாங்குநீருலகங்காக்குமன்னவன்பட்டத்தேவி
யோங்கிருங்கற்பினாளுக்குய்ப்பனென்றுணர்த்திப்போந்தாள்

பளிங்கியலபலகைதன்மேற்பாவையதுருவந்தான்முன்
றெளிந்தவாறெழுதிக்கொண்டுசெந்துகிலுறையின்மூடி
வளர்ந்தருகோயின்முன்னிமணிவண்ணற்பயந்ததேவி
யளந்தறிவரியகற்பினமிர்தனாளருகுசேர்ந்தாள். (கஅ0)

மையகத்தலர்ந்தவாட்கண்மாதவசேனைசென்று
வையகத்தரசன்றேவிமலரடிவணங்கலோடு
மெய்யகத்துவகைகூரவிரும்பித்தன்னருகுகூவிக்
கையகத்ததுவென்னென்னக்கன்னியதுருவமென்றாள். ( )

அணிகலம்பரிந்துநங்கையணிமருளுருவந்தந்த
மணிமருண்முறுவற்செவ்வாய்மாதவசேனைக்கீந்து
பணிவரும்பலகைதன்மேற்பாவையைக்காண்டுமென்று
டணிவரும்பவழத்துண்டந்துடிக்கின்றதனையவாயாள். ( )

மணிதெளித்தமைக்கப்பட்டவண்ணமேவண்ணமாகத்
துணியமுன்கலந்துசெய்த துகிலிகைத்தொழில்களுக்கி
யணியினமொளிகளோவிவ்வணங்கினதுருவமோவிக்
கணிலங்கருதலாகாக்கண்கவர்சோதியென்முள். (கஅரு)

பழுதியலிலாதபாவையுருவமோர்படியினலு
மெழுதுதற்கரிதியார்க்குமிலங்கொளியுருவமேனி
மொழிதலுக்கரிதாலத்தைமுருகுவேய்குழலிமற்றுன்
றெழுதகையருளினன்றேதுணிந்தியானெழுதிற்றென்றுள.

அல்லதூட்டங்தைதோழியவளதுமுகத்தினலோர்
சில்லணிமழலைச்செவ்வாய்த்திருமொழிபிறந்ததுண்டு
வல்லிதன்மொழிபோய்நீரெம்மாமியாரடிகட்கெம்வா
யெல்லையில்கிழமைதன்னலிறைஞ்சுகவென்பதென்முள். ()

என்றவண்மொழிந்தபோழ்தி னிலங்கொளிப்பலகைதன்மே
மின்றவழ்மேனியாளைமென்பணைத்தோளிற்புல்லி [ன்
யின்றினிதாகுமன்றேயிருந்தவப்பயங்கணம்மா
லொன்றினவிளைந்தவென்றுங்கொளியினற்புதியளானள். ()

போதவிழலரிநாறும்புரிகுழலுருவப்பாவை
சோதிசூழ்வடிவுநம்பிசுடர்மணிவண்ணன்காண
மாதவசேனைகாட்டவல்லையோவென்னவையற்
கோதுவதுணரினன்றேயடிகள்யாமுருவமென்முள். (கஅஎ)

மற்றவடொழுதுபோகிமணிவண்ணன்மகிழ்ந்தகோயிற்
சுற்றிநின்றெரியுஞ்செம்பொற்சுடர்மணிவாயினண்ணி
யிற்றெனவிசைத்துப்புக்காங்கிளையவர்கழல்கைகூப்ப
வெற்றுநீவந்ததென்முற்கிதுவெனவெடுத்துச்சொன்னள். ()

அருங்கலமுலகின்மிக்கவரசர்க்கேயுரியவன்றிப்
பெருங்கலமுடையரேனும்பிறர்க்கவைபேணலாகா
விருங்கலிமுழவுத்தோளாயெரிமணிப்பலகைமேலோர்
நெருங்கொளியுருவங்கொண்டுநின்னையானினைந்துவந்தேன்.

அப்படித்தாயிற்காண்பாமென்றனனரசுநம்பி
மைப்புடைநெடுங்கணாளுமருங்குநின்றவரைநீக்கிக்
கைப்புடைப்பலகைமேலாற்கன்னியதுருவங்காட்ட [ன்.
மெய்ப்புடைதெரியமாட்டான்விருந்துகொண்மனத்தனானு

வானவர்மகள்கொலவிஞ்சை மாதுகொன்மண்ணுளாள்கொ
றேனிவர்குழலிமற்றித்திருநுதன்மடந்தையென்ன
மானிவர்நோக்கிவிண்ணோர்மகளல்லண்மற்றுநின்ற
வூனிவரலங்கல்வேலோயுய்த்துணர்ந்தருளுகென்றாள் (கககக)

மண்மிசைமகளிரின்னவடிவுடையவர்களில்லை
விண்மிசைமடந்தையல்லளாய்விடின்விஞ்சைவேந்தன்
கண்மிசைநவிலுங்காதற்கன்னியதுருவமாமென்
றெண்மிசையிவரும்போழ்தினிதுவெனவவளுஞ்சொன்னாள்.

கன்னியதுருவங்காளைகாண்டலுங்கேடில்காமன்
பொன்னியல்கழலன்றூரன்பூட்டியசிலையனாகி
மன்னியவிற்கைநோக்கிமலரணிகணையுநோக்கித்
துன்னியபொழுதுநோக்கிச்சுடுசரந்தொடுக்கலுற்றான். ()

மண்ணியல்வளாகமெல்லா மகிழ்ந்துடன்வணங்கும்போழ்து
முண்ணனிமகிழ்தல்செல்லாவொளியுடையுருவக்காளை
கண்ணினிற்காதலாடன்கணணியவுருவங்கண்டே [ன்.
வெண்ணெயின்குன்றந்தீயால்வெதும்புகின்றதனோடொத்தா

மாகத்துமதியமன்னவாணுதன்மடந்தைதன்னை
யாகத்துளடக்கிமன்னுமணிநுதலழகுநோக்கி
நாகத்தைநடுக்குமல்குனங்கைதன்றிறத்துக்காம
வேகத்தைமெல்லமெல்லவில்வலான்பெருக்கியிட்டான். ()

குழலையான்றிருத்திக்கோதைசூட்டுவன்குறிப்புண்டாயின்
மழலைவாய்திறந்தோர்மாற்றமருளுகமடந்தையென்னு
நிழலவாம்பகழிபோலுநெடுங்கணோக்கென்னும்வெய்ய
வழலினுலளியனுவியடுவதோவழகிதென்னும். (கககூ)

சீறுடிப்பரடுதோயுஞ்சிலம்பிணை திருந்தவைப்பன்
வீறுடைநங்கையேந்தன்கவான்மிசையிருத்தியென்னுஞ்
சேறுடைக்கோதைமேலாற்சிறந்துவார்கூந்தல்கையால்
வேறிடந்துருவல்செய்யவிரும்பியமனத்தனாகும். (கசுஎ)

அந்துகிலசைத்ததோர்கையவிழ்ந்தசைகின்றதென்னும்
பைந்தளிர்மேனிதன்மேற்பன்மணிக்கலங்கடீண்டுஞ்
செந்தளிர்புரையுமேனிச்சேயிழைதிறத்திற்காம
வெந்தழல்கனலமூட்டிவில்வலான்மெலியலுற்றான். (கசுஅ)

வாளையாநெடுங்கணல்லாணமணவினைதொடங்குகால
நாளையானமர்களோடுசூழ்ந்துவந்தறிவலென்று
காளைபாற்பட்டுவெய்யோன்குடதிசைக்கனபொற்குன்றிற
சூளிவாயருவிமாலைச்சுடர்முடிச்சென்னிசேர்ந்தான். (கசுக)

விண்ணியலுருவவீதிமேனின்றுமிழிந்துவெய்யோன்
கண்ணியல்விலங்கனெற்றிகதிரென்னுங்கையினான்றி
மண்ணியன்மரத்தின்சாகைநுதிபிடித்தவையும்விட்டுப்
பண்ணியல்பிறிதொன்றாகிப்பையவேமறைந்துபோனான். ()

வெய்யவனென்னுஞ்செந்தீச்சுடரினாலவெதுமபப்பட்டு
மையொளிபரந்தபோன்றுகருகினதிசைகண்மற்று
மொய்யழல்மேலவிந்ததழன்மீளமூள்வதேபோற்
செய்யதோருருவமேல்பாற்றிசைமுகஞ்சிறந்ததன்றே. (உ0க)

கள்ளுலாங்கழனிநீத்துக்கருங்கயல்கவுளுட்கொண்டு
புள்ளெலாங்குடம்பைசேர்ந்துபார்ப்பினம்புறந்தந்தோம்பி
யுள்ளுலாவுவகைகூரத்துணைபுணர்ந்தொலித்துவைக
வள்ளலார்மனத்துக்கெஃகாய்மாலைவந்திறுத்ததன்றே. ()

காதலாரகன்றபோழ்திற்கற்புடைமகளிர்போலப்
போதெலாங்குவிந்தபொய்கைத்தாமரைபொலிவுநீங்க
மீதுலாந்திகிரிவெய்யோன்மறைதலுஞ்சிறுவெள்ளாம்ப
றூதெலாமலரநக்குத்தம்மையேமிகுத்தவன்றே. (உ0உ)

செய்யொளிச்செக்கரென்னுஞ்செம்புனீல்பரந்துதேறி
வெய்யொளிநிறைந்தநீலவிசும்பென்னு மணிகொள்பொய்கை
மையிருளென்னுஞ்சேற்றுள்வளர்திங்கட்கதிர்களென்னு
மொய்யிளங்கமலநாளவளையங்கண்முளைத்தவன்றே. (உoச)

அங்கொளிவிசும்பிற்றோன்றியந்திவானகட்டுக்கொண்ட
திங்களங்குழவிபால்வாய்த்தீங்கதிர்முறுவலேக்கித்
தங்கொளிவிரிந்தவாம்பன்மரை குவிந்தவாங்கே
யெங்குளருலகுக்கெல்லாமொருவ்ராயினியநீரார். (உoரு)

வேறு.

மணவாயமல்லிகையின்மதுநனைந்துவண்கனிகண்மதர்ப்ப வீசி, பிணர்வாயவனமுல்லையிதழ்வாரியிளந்திங்கட்கதிர்கா லூன்றித், துணைவாயசுரும்பிரங்கவரவிந்தவனத்துதிர்ந்ததுகளுஞ்சீத்துத், திணைவாயகருங்குவளைதிளைத்தசைக்குந்தென்றலுமொன்றுடைத்தேமாலை. (உoசு)

மைபருகுநெடுங்கண்ணார்மணிமாடமிசையிட்ட வளைவாய்ப்பாண்டி,னெய்பருகுகொழுஞ்சுடரினகிலாவியிடைநுழைந்துநிழல்கால்சீப்பப், பைபருகுமணியுமிழ்ந்துபணநாகமிரைதேரும்பருவமாலை, கைபெருகுகாமநோயுடையவர்க்கோர்கனல்போலவருமேகாணில். (உoஎ)

கணிமிடற்றநறவேங்கையவிர்சுணங்கின்மடவார்தங்கைமேற்கொண்டு, பணிமிடற்றுமொழிபயிற்றும்பைங்கிளியின்செவ்வழியினிசைமேற்பாட, மணிமிடற்றசெங்கண்ணபவழக்காற்கபோதங்கண்மதலேதோறு, மணிமிடற்றிலைகவவனங்கனையுமனல்விக்குமளியமாலை. (உoஅ)

வெஞ்சுடர்வேலிளையவனுங்கினையனவின்மெலிவெய்தவிசும்புசெல்லும், விஞ்சையரையன்மடமாமகணிலையாதெனவினவில்விளம்பக்கேண்மின், பஞ்சிலகுதேரல்குற்பாடகக்காற்பாவையர்கள்பலர்பாராட்டச், செஞ்சுடரோன்மறைபொழுதிற்சினவரன்றன்றிருக்கோயில்சென்றுசார்ந்தாள். ()

திண்ணிலையமணிக்கதவந்தாழ்திறந்துதிருவிளக்குத்திகழ மாட்டி, விண்ணியலநீறும்புகையுங்காழகிலும்விசும்பிவர்ந்து விம்மிமூட்டிக், கண்ணியுடன்வெறிமலருநறும்பொடியுங்கமழ் சாந்துங்கையினேந்திப், பண்ணியலநரம்பிசைமேற்பரமனை யேபணிமொழியாள்பரவாநின்றாள். (உகo)

மணங்கமழுந்தாமரையின்மதுத்திவலைகொப்பளித்துமத ர்த்துவாம,னணங்கிவர்சேவடியினழகெழிலேரோரொளிபரு கியலரும்போலு, மணங்கிவர்சேவடியினழகெழிலேரோரொ ளிபருகியலருமாயின், வணங்கினவரொளிவிரிந்துகளிசிறந்து மதிமகிழன்மருளோவன்றே. (உகக)

அரும்பிவருமரவிந்தமறிவரனதடிநிழலதடைந்தோமெ ன்று, சுரும்பிவரியிசைபாடச்செம்மாந்துசுடருமிழ்ந்துதுளு ம்பும்போலுஞ், சுரும்பிவரியிசைபாடச்செம்மாந்துசுடருமிழ் ந்துதுளும்புமாயின், விரும்பினராத்தொழுதெழுவார்மெய்ம றப்புமுண்மகிழ்வும்வியப்போவன்றே. (உகஉ)

அழலணங்குதாமரையாரருளாழியுடையகோனடிக்கீழ் ச்சேர்ந்து, நிழலணங்கிமுருகுயிர்த்துநிரந்தலர்ந்துதோடேந் திநிழற்றும்போலு, நிழலணங்கிமுருகுயிர்த்துநிரந்தலர்ந்து தோடேந்திநிழற்றுமாயிற், றொழிலணங்குமனமுடையார்சூ ழொளியும்வீழ்களிப்புஞ்சொல்லோவன்றே. (உகங)

வேறு.

மணிமருடிருமொழிவாமன்சேவடி
யணிமருளுருவுடையமிர்தின்சாயலாள்
பணிமொழிபலவுடன்பரவிவாழ்த்தினள்
பிணிமொழிபிறவிநோய்பெயர்கவென்னவே. (உகச)

வென்றவன்றிருவடிவணங்கிமெல்லவே
சென்றுதன்வளநகர்ச்செம்பொன்மாளிகை
நின்றொளிவிரிவதோர்நிலவுவேதிகை
முன்றில்சென்றெய்தினண்முகிழ்த்தவேட்கையாள். (உகரு)

செய்யவன்செங்கதிர்சுருங்கச்செக்கர்வான்
பைய்வேகருகலுமபரவைபாற்கதி
ரையவேயவிாகதியரும்புவந்தது
வையமேதொழப்படும்வளர்வெணடிங்களே (உகசு)

இருங்கயத்தெழின்மலாகிரந்துமேலதோா
சுருங்கையங்கவிழ்நதெனத்தோன்றுமீனகுழா
மரும்பியபசலைவானகட்டுத்தாரகை
பொருங்கியன்றெளிநகையுமிழநோக்கினாள். (உகஎ)

திங்களங்கொழுநனைச்சேர்ந்துதாரகை
யங்கொளிமுகிழ்நகையரும்புமாதலான்
மங்கலமணமகன்மணந்தபோதலா
லெங்குளதிளையவர்க்கிளைமையின்பமே (உகஅ)

என்றுதன்னகமபுடையியலக்காளையா
லொன்றியவுள்ளநோயொளிக்கலுற்றன
ளின்றிவளகத்ததுகாமநோயெனப்
பொன்றவழ்பசலைமெய்புகலலுற்றதே. (உககூ)

ஆயினதிருவனாளாயத்தோழியர்
வேயெனத்திரணடதோள்விளங்குமேனியாண
மேயின்குறிப்பினையறிந்துமெல்லவே
பாயினபணிமொழிபலவுங்கூறினார். (உஉ0)

விஞ்சையருலகினும்மினிதுவீங்குநீர்
மஞ்சிவர்பொழிலணிமண்ணென்றோதினா
ளஞ்சிலமொழியவளொருத்தியாங்கயர்
பஞ்சிலங்ககலல்குற்பாவைபாங்கினே. (உஉக)

பனிவரைப்பாங்கரும்பழுச்செய்சோலையுந்
தனியவர்க்கினனனிபயக்குந்தன்மனக்
கினியவரெவ்வழியிசைவரவ்வழித்
துனிவரவில்லெனவொருத்திசொல்லினாள். (உஉஉ)

காதலார்காதன்மைகலந்துகாதலர்க்
கேதிலாரயலராயியல்பவாய்விடிற்
சாதலும்பிறத்தலுமிலாததானமுங்
கோதெனக்கொண்மினென்றுருத்திகூறினள். (உ௨௩)

திணைவிராய்ப்பொய்கையுந்திகிரிப்புள்ளினுக்
கிணையிராப்பிரிந்தபினெரியொடொக்குமாற்
றுணைவராற்றனியவர்திறத்துச்சொல்லினோர்
புணைவராம்படியவரில்லைப்பொன்னனீர். (உ௨௪)

முல்லையின்முருகுகொப்பளித்துமூரல்வாய்
மல்லிகையிணர்த்துணர்மயக்குமாருதத்
தெல்லியுமிளம்பிறைக்கதிருமென்பவான்
மெல்லியலவர்களைமெலிவுசெய்பவே. (உ௨௫)

விரைசெறிபுரிகுழல்வேற்கணங்கைதன்
புரைசெறிகடிவினைநாளைப்போழ்தென
முரசெறியிமிழிசைமுழங்கக்கேட்டன
ளுரைசெறிமறுகிலென்றுருத்திகூறினள். (உ௨௬)

நாளைநாளென்பதுநனித்துஞ்சேய்த்தென
வாளையாநெடுங்கணீர்மயங்கியென்னையிக்
கோளையாம்விசும்பிடைக்குளிர்வெண்டிங்களார்
தாளையாம்வணங்குபுதாழ்ந்துகேட்டுமே. (உ௨௭)

காமனுங்கணைப்பயன்கொண்டுகண்களா
ஞமுநன்னலவினைநுகருநாளவாய்
யாமமிங்கொருங்குடனகலவென்றுபோய்
வாமன்றனகருழைவரங்கொள்வாங்கொலே. (உ௨௮)

இன்னனநகைமொழியின்பக்கோட்டியோ
டன்னமென்னடையவளமரவாயிடை
மன்னவற்கேழிசைமலிந்ததூரியங்
கன்னியுங்கடிகமழமளியேறினள். (உ௨௯)

மல்லிகைமணங்கமழ்மாலைபோகலும்
பல்லியமவிந்தனபரந்தபாற்கதிர்
மெல்லவேமெல்லவேசுருங்கிவீங்குநீ
ரெல்லைசென்றொளித்ததவ்விளவெண்டிங்களே. (உ௯0)

நல்வினைகழிதலுநலியுந்தீவினை
செல்வதேபோலிருள்செறிந்துசூழ்ந்தது
பல்வினைமடிந்தனபடர்ந்ததாயிடை
வல்வினைக்கயவரேவழங்குங்கங்குலே. (உ௯க)

ஊடலாய்ச்சுடரொளிமழுங்கிமங்கைய
ராடுவார்முழவங்கண்ணயர்ந்தயாழொடு
பாடுவார்பாணியுஞ்சுருங்கிநன்னக
ராடுநீர்க்கடற்றிரையவிந்ததொத்ததே. (உ௯உ)

மடந்தையர்முலைமுகமடுத்தமார்பின
ரடைந்துதேனுறங்கியவலங்கன்மாலையார்
மிடைந்ததோடமூஉப்பிணைநெகிழமெல்லவே
யிடங்கழித்தொழிலொழிந்திளையர்துஞ்சினர். (உ௯௩)

மதுக்கடைவழிபிழித்துவலைநாவளைத்
தொதுக்கமும்வெறியயர்களனுமூடிலாய்ச்
செதுக்கமும்பலிபெறுதெருவுந்தோர்ந்துபோய்க்
* கதுப்புகுந்துறங்குபுகமுதுஞ்சோர்ந்தவே. (உ௯௪)

இடஞ்சிறைபிளம்பெடைக்கீந்துபார்ப்பின்மேற்
றடஞ்சிறைவலத்ததுகோலித்தாந்தம
தொடுங்குதாண்முடங்கவைத்துறங்குகின்றன
புடங்கொள்பூம்பொழிலிடைப்புள்ளின்சேவலே. (உ௯௫)

கனைந்ததங்காதலிற்கனவிற்கண்டிறந்
தினைந்தபோன்றிடையிடைநோக்கியின்குரல்
புனைந்தகம்புணர்பெடைபுல்லிமெல்லவே
யனந்தருண்முரன்றனவன்றிற்சேவலே. (உ௯௬)

---

* கது, மலைப்பிளப்பு.

மன்னியமணித்தடத்தாம்பல்வாய்குடைந்
தின்னியன்மாருதமியங்குங்கங்குல்வாய்க்
கன்னியுங்காளையுமொழியக்காரிரு
டுன்னியவுலகெலாந்துயில்கொண்டிட்டதே. (௨௩௭)

நள்ளிருளிடையதுநடப்பவைகறை
புள்ளிமிழிசையொடுபுகுந்துபோம்வழித்
தெள்ளியமதியவன்செய்ததீமைபோன்
மெள்ளவேகனையிருண்மெலிவுசென்றதே. (௨௩௮)

கிளர்த்தினகிலுகிலுப்பரவப்புட்குலாம்
வளர்த்தனமகரயாழ்மருளியின்னிசை
தளர்த்தனகருங்கடற்றரங்கந்தன்னமே
விளர்த்ததுகுணதிசைவேலைவட்டமே. (௨௩௯)

ஆணைசெய்தரசுவீற்றிருப்பவாயிடைக்
கோணைசெய்குறும்புகூர்மடங்குமாறுபோற்
சேணுயர்திகிரியான்கதிர்சென்றான்றலும்
பாணியாற்கரந்தமுன்பரந்தசோதியே. (௨௪௦)

விளித்தனபுலரிவெண்சங்கம்வேரியாற்
களித்தனகயமலர்த்தொழுதியம்மல
ரொளித்துமுன்னுறங்கியவொலிவண்டார்த்தன
தெளித்ததுசெறிபொழிற்றேம்பெய்மாரியே. (௨௪௧)

தூண்டியசுடர்விளக்கன்னகன்னியோ
டாண்டகையழல்வலஞ்செய்யுமாரணி
காண்டகையுடைத்ததுகாண்டுநாமென
வீண்டியகதிரவனுதயமேறினான். (௨௪௨)

உருகினபனிபொதிபாறையுக்கநீர்
பருகினபகலவன்பரவைவெங்கதிர்
கருகினகயம்வளராம்பல்கண்கொளப்
பெருகினதிசைமுகம்பெயர்ந்ததொத்தவே. (௨௪௩)

வேறு.

நிறைந்தாரகடிநல்வினைநீதியினு
லறைந்தாங்கதுசென்றதுசென்றவகை
சிறந்தாளொடுகோளைதிறத்துரையா
மறந்தாமதுவல்லவர்சொல்லுகவே. (உசச)

குருமாமணிவேய்குடைமும்மையுடைப
பெருமானடிபேணியபூசனைநாள்
கருமால்களியானைகணமேற்கனபொன்
னருமாமுரசார்ப்பவறைந்தனரே. (உசரு)

முரசும்முழவின்குழுவும்முடிசே
ரரசன்னகரார்குழுவுங்கெழுமி
விரையுமபுகையும்விரவும்பலியின்
னிரையுந்நெடுவீதிநிறைத்தனவே (உசசா)

பிடியுங்களிறும்பிறவுந்நெரிவுற்
றடியும்மிடவாமிடமின்றிலகுங்
கொடியுங்குடையுங்குளிர்சாமரமும
முடியின்சுடரும்மிசைமூடினவே (உசள)

வழுவின்னெறிவாமனமாநகர்வாய்
விழவின்னணமாகவிதித்தனராய்க்
கழுவும்மணிபோல்பவடன்கடிநா
ளெழுவுமமுரசெங்குமியம்பினவே. (உசஅ)

நடைமாலைநடந்ததுநந்திமுகம்
புடைமாலைபுகுந்தனர்புண்ணியநீ
ரிடைமாலைநிகழ்ந்ததொரேத்தரவங்
கடைமாலைநிகழ்ந்ததுகாப்பணியே. (உசகூ)

திரைசங்கொலியோடுசிறந்தனபோன்
முரசங்கொலியோடுமுழங்கியெழ
வுரைசங்கொலியோடுணராவகையா
லரசங்கொலியோடெழுவார்த்தனவே. (உருo)

துணிமுத்தநகைத்துவர்வாயிளையார்
கணிமுத்தணிசிந்தியகண்விரவி
மணிமுத்தமணற்றிடலாகிமறைத்
தணிமுத்துமிழ்வீதியடுக்குநவே. (உருக)

துகிலார்கொடிபொங்கினதொங்கனிமிர்ந்
தகிலார்புகையாவியடுத்தமையாற்
பகலானெடுவெந்திரவும்பகலே
யிகலாதுடனாகியியைந்துளவே. (உருஉ)

பலர்மன்னியபாடலுமாடலுமே
வல்மன்னிமயங்கிமுயங்குதலா
னிலமன்னவருநெடுமால்வரைமேற்
குலமன்னவருங்குளிர்தூங்கினரே. (உருங)

அகல்வானிடையங்கிழிவானவரும்
முகிலாறிழிவிஞ்சையரும்முடுகிப்
பகலானெடுதாரைபரந்தனபோற்
புகலாலொளிபோந்ததுபொன்னகரே. (உருச)

வடமேருமுகட்டலரும்மலரும்
புடமேருபொலிந்தலரும்மலருந்
தடமேலுளபொன்னவிழ்தாமரையுந்
திடமேவியவிஞ்சையர்சிந்தினரே. (உருரு)

அணிவேண்டினர்கொள்ளவடுத்தனவும்
மணிவேண்டினர்கொள்ளவகுத்தனவுங்
கணிவேண்டினநாள்கழியுந்துணையும்
பணிவேண்டினர்வீதிபரந்தனவே. (உருசா)

நறவுண்டொருபானகுவாரொருபாற்
புறவுண்டகலாவமிர்தம்புணர்வா
ருறவுண்டமரத்தொடர்பாலுறைவார்
பிறவுண்டையுமின்னனபின்னினவே. (உருஎ)

இழிகின்றனர்விஞ்சையரெத்திசையும்
பொழிகின்றதுபொன்மழையம்மழையுட்
சுழிகின்றதுதொல்சனவெள்ளமதற்
கொழிகின்றதுநாமுரையாததுவே. (உருஅ)

வேறு.

தாமரைமுகத்தமனியக்குடமவற்றுற்
சாமரைமுகத்தனமதக்களிறுதம்மேற்
பூமரைமுகத்தெறிபுனற்றிரைமுகந்து
தூமரைமுகத்தரசர்சென்றுபலர்சூழ்ந்தார். (உருகூ)

வண்டுபடுமாலையர்மடப்பிடிகடமமேன்
மண்டயவுழைக்கலமழைக்கண்மடவார்க
ளெண்டிசையுமெங்குமிடமின்றிமிடைவுற்றூர்
கண்டவரைமேல்விரவுகார்மயிலொடொத்தார். (உசுO)

மாளிகைநிரைத்தமணிமாடநகர்முன்னு
லாளியரசேநதுமணியாசனமதன்மேற்
காளைகழலவேந்தர்பலர்சூழ்தரவிருந்தா
ணொளொடுபொலிந்தநகைமாமதியமொத்தான் (உசுக)

அங்கணயிராவணமிரண்டுடனெடுத்த
மங்கலமணிக்கலசநீர்சொரியவாடிப்
பொங்குதிரையொன்றிருபுயற்பொலியவோங்கித்
தங்குபுனல்பெய்ததடமால்வரையொடொத்தான். (உசுஉ)

மன்னர்கள்சொரிந்தமணிநீரருவியாடிப்
பின்னைமலர்மாரியகல்வானினவர்பெய்ய
மின்னவிர்விளங்குசுடர்வேல்விடலைமெய்யிற்
பொன்னணிபுனைந்துபுதுவேவிநகர்புக்கான். (உசுங)

மங்குன்மழைசூழுமணிமால்வரையின்மேலா
கங்கைமுதனீரருவிகொண்டுகலிவான
மெங்குமிடமின்றியெழில்விஞ்சையரிழிந்தார்
நங்கைமணநீரணியைநாமொழிவதென்னே. (உசுச)

ஆறுகுலமால்வரையின்மேலருவிநீரும்
வீறுபெறுமெல்லியலையாட்டியபின்மீட்டு
நாறுமலர்நந்தனவனத்தனவொடெல்லா
வேறுபடுபூமழையுமாடவிளைவித்தார். (உகரு)

சாந்துசொரிமாரிபொழிகின்றதகையோடுந்
தேந்துவலைவீசியுளர்கின்றதொருதென்றல்
வேந்தருலகங்கொண்மிசைவிண்கொலிஃதென்று
மாந்தர்மருள்வாருமகிழ்வாருமுளரானார். (உகசு)

மங்கலவனப்பினதொர்கோடிமடிதாங்கி
யங்கலிவிசும்பினவர்தந்தவணிசேர்த்திப்
பங்கயமுகத்தவர்பலாண்டிசைபராவச்
செங்கயனெடுங்கணவள்வேள்விநகர்சேர்ந்தாள். (உகஎ)

நங்கைமணவேள்விநகரெய்துவதன்முன்னைப்
பொங்குபுரிநூலனலர்தாமரைபுனைந்தார்
மங்கலவுழைக்கலநிரைத்தமணமாட
மங்கதுபுகுந்தழல்வளர்க்கியவமைத்தார். (உகஅ)

சாந்துமெழுகிட்டதடமாமணிநிலத்தைச்
சேர்ந்துதிகழ்பொன்னியல்சலாகைநுதிதீட்டிப்
பேர்ந்துமொருகால்விரைபெருக்கிமெழுகிட்டா
ளுய்ந்தமறையோதியதனுரிடமறிந்தான். (உகசு)

பருத்தமணிமுத்தமணல்பாய்சதுரமாகத்
திருத்தியொருவால்வளைபயின்றுதிடர்சூழத்
தருப்பையினுனித்தலைவடக்கொடுகிழக்காய்ப்
பரப்பினனதற்குமொருவால்வளைபயின்றான். (உஎ0)

நான்முகன்வலத்துநல்லிடத்துமொர்கடித்தாய்
மேன்முகமிருந்துகுணபால்வெறுவிதாகப்
பான்முறைபயின்றபருதிக்கடிகைபாய்த்தித்
தான்முறையினேதுசமிதைத்தொழுதிசார்ந்தான். (உஎக)

ஆயிடைநடுக்கட்முளானமரராசா
னேயுடையனுயசுரமந்திரியெழுந்தான்
போயுடைவிசும்பின்மதியும்புகுதுகின்றான்
மேயுடையணிந்தகணிவேலையிதுவென்றான். (உ௭உ)

அங்குமுன்வளர்த்தவழலேகடவுளாக
மங்கையைமணக்குழுவின்முன்னவரைவேந்தன்
கொங்குவிரிதாரவற்குநீரொடுகொடுத்தான்
நங்கையொடுநாண்மலருளாளையுமடுத்தான். (உ௭௩)

மன்னியழல்வேள்வியிலவற்குவலமாகப்
பின்னியதருப்பைகள்பிடித்தவைவிடுத்தாங்
கன்னமனையாளொடயிலவேலவனிருந்தான்
கன்னியொடியைந்தகதிர்மாமதியமொத்தான். (உ௭௪)

கந்துளுமிழுங்கரியசூழ்புகைகள்விம்ம
வந்துசுடரேந்திவலனேசுழலமாட்டி
யந்தணனுமங்கழலமைத்துமிகவேட்டான்
மைந்தனுமடந்தையைமனத்தின்மிகவேட்டான். (உ௭௫)

பொங்கழல்செய்வேள்விமுறைபோற்றலுமெழுந்தா
னங்கையினுணங்கினணிமெல்விரல்பிடித்து
மங்கையொடுகோளைவலனுகவருகின்றான்
கங்கையொடியைந்துவருகார்க்கடலொடொத்தான். (உ௭௬)

கைகமலரின்வீரன்வள்கைமுகிழ்பிடிப்ப
மெய்மயிரெழுந்துமணிவேர்நுதலரும்பிச்
செய்யதனசீறடிகள்செவ்வனிடமாட்டா
வம்மயிலினுணதனையாவரறைகிற்பார். (உ௭௭)

பின்னுமுளவேள்விமறைபேசுமுறையாக
வின்னணமியன்றவெரியோம்புதொழிலார்க்குப்
பொன்னெடுமணிக்குவியல்போந்துபொழிகின்றார்
கன்னிதமர்காளைதமரென்றிவர்கலந்தே (உ௭அ)

அங்கமிருமூன்றுமீறைநான்கலகில்கற்ப
மிங்குமுடிவிஞ்சையெனவின்னகரைகண்ட
பொங்கெரியவேள்விவல்புரோகிதனவற்குச்
சங்கிதியென்னநெதிமாரிதருவித்தான். (உஎகூ)

வானநெறியெங்கும்வளர்சோதிவடமீனைக்
கானமயிலன்னவடன்முன்னைநனிகாட்ட
யானுமிவள்போலுலகுகாணவியல்வேனோ
வீனமொடுநாணமிலனேனெனவிகழ்ந்தாள். (உஅ0)

வேறு.

ஏனமண்வினைகள்செல்லவின்னணமெய்துகென்று
புன்வரைகானமுன்னிமாதவம்போகுவாரு
மினமலிசெல்வமற்றுமிப்படிவருவதுண்டோ
கனவினுமென்னமாந்தர்கண்டுமீள்வாருமானார். (உஅக)

இடிபடுமுரசிற்சாற்றியேற்பவராசைதீரச்
சுடர்விடுமணியின்மாரிபொன்னொடுசொரியவேவிக்
கடிபடுநெடியமாடங்கன்னியோடேறினான்
முடிவுகொளுலகமெய்துமின்பமாமூர்த்தியொப்பான் (உஅஉ)

கழுமியகாகதுண்டங்கமழ்தொறுங்காளமேகங்
குழுமியதனையமாடக்குவட்டிடையமளிசேர்வார்
விழுமலர்ப்பிணையன்னூம்விடலையுமேருநெற்றிச்
செழுமணிச்சிலைசென்றேறுந்தெய்வமாமிதுனமொத்தார். ()

பொன்னியல்கொடியினெல்கிப்பூவணைப்பொருந்தும்பாவை
கன்னிநாணேற்றங்காளைகண்களிகொள்ளநோக்கிப்
பின்னவளொடுங்கவாங்கிப்பெருவரையகலஞ்சேர்த்தி
யின்னகைமழலைகேட்பானென்கொலிம்மிகைநாணென்றான்.

நின்றநாணெனுநீள்கன்னிச்சிறைவிண்டுகாளைதிண்டோட்
குன்றினுற்செறிக்கப்பட்டகுமரிநீரமிர்தயாறு
சென்றுதேன்பகர்ந்துசெம்பொற் கலஞ்சிந்தித்திளைத்துவிம்மி
யன்றவனூர்வழிவெள்ளக்கடலிடையழுந்திற்றன்றே. (உஅரு)

பருவத்தாலரும்பிப்போதாய்ப்பையவேயலர்ந்துமுற்றி
மருவித்தேங்கனிகொண்டுள்ளான் மனங்கொளவழிந்தகாமத்
திருவொத்தகளியின்றீஞ்சாறுரவுண்டாரமாட்டா
ருருவத்தாலிருவராகியுள்ளத்தாலொருவரானார். (௨௱௮௬)

உலவியவலங்கன்மாலையொளிர்மலருடையமார்பிற்
குலவியமணிமுத்தோடுங்குவிமுலைக்குவடுபாயக்
கலவியுங்களிப்புங்காமப்புலவியுங்கலந்துசால
நிலவியமதுவுண்டார்போனெஞ்சுணமயங்கிவிட்டார். ( )

அடிக்கலந்திருத்தியம்மென்புரிகுழற்சுருளைநீவி
முடிக்கலரணிந்துகாதன்முகிழ்நகைமுகிழ்ப்பப்புல்லிக்
கடைக்கணியாயகாளைகவான்மிசையிருத்திக்காமர்
குடிக்கணியாயகொம்புகேட்கமற்றிதனைச்சொன்னான். ( )

வேறு.

செங்குவளைநாறுந்திருமேனிசெவ்வாயு
மங்குவளையீரிதழுமாம்பலுமேநாறுமா
லிங்கிவளைமுன்படைத்ததேவனென்னின்னுயிரைப்
பைங்குவளைமாலையாட்களாய்ப்படைத்தானே. (௨௱௮௯)

அன்புருகுகாமத்தீமாட்டியளியவென்
னென்புருகவேவவிணைநெடுங்கட்பூம்பாவை
முன்பெருகுமுந்நீரமுதாய்விளைத்தினிய
மின்பருகுநுண்ணிடையார்மெல்லுருவங்கொண்டதே. ( )

பானனெடுங்கணிவையேபகழியா
வேனிலுடைவேந்தன்வென்றிக்குநோற்றானே
யூனுமளியற்றேனித்துணையோர்காலமுந்
தேனார்நறுமேனிதீண்டுதற்கேநோற்றேனே. (௨௱௯௧)

காவியாகின்றகருமாமழைக்கண்ணி
மேவியானுண்ணுமமிர்தாய்விருந்தாகி
யாவியாகின்றாளருமருந்துமாகின்றாள்
பாவியேன்பாவைக்கோராளேயாகின்றேனே. (௨௱௯௨)

செம்பவழமேய்ப்பத்திகழ்ந்திலங்குசீறடியின்
வம்பழகுநோக்கிவழிபடுவதேசாலு
மம்புவழவாயுமளகஞ்சேர்வாணுதலு
மெம்பவமோநுங்கயாமெம்மையறியேமே. (உசுங)

வண்டேமடந்தைமணியைம்பான்மேவியிருந்
துண்டேயெனநுடங்குமுண்மருங்குலோவியிர
தண்டேகாணீருந்தளிர்மேனிநாற்றத்தாற்
பண்டேபோல்வந்துபயிலாதுபோமினோ. (உசுச)

கள்ளமிட்டேநோக்கிதன்னைக்கரந்தென
துள்ளத்தின்வைப்பினுருவமதுகாணேன்
மெள்ளவெண்மூரளணைவாளென்னும்விருப்பாரா
தெள்ளுமனத்தினுக்கெய்திற்றறியேனே. (உசுரு)

காதலால்வந்தென்கவான்மேலிருப்பினு
மேதிலார்போலுமிமைப்பினிமையாதே
போதுலாம்வாண்முகமேநோக்கிப்பொலிவேனோன்
மாதராணுணும்யான்வாழுமாறேனோ. (உசுசா)

வேறு.

உலம்பாராட்டுந்தோளவனோண்பூங்குழலாளை
நலம்பாராட்டிநாகிளமுல்லைநகுவிக்கும்
வலம்பாராட்டிவந்ததொர்மாரிப்புயலொத்தான்
குலம்பாராட்டுங்கொம்புமொர்முல்லைக்கொடியொத்தாள். ()

தேனார்கோதைச்செங்கயல்வாட்கண்சிறைகொள்ள
வூனார்வேலானுள்ளமிழந்தானுழையாரை
மேனாள்போலமெய்ப்படமாட்டான்விளையாடுங்
கானார்சோலைக்காவகம்புக்கான்கமழ்தாரான். (உசுஅ)

தண்டாரீன்றுசெந்தளிரேந்தித்தழல்பூத்த
வண்டார்பிண்டிவார்தளிர்நீழன்மணிவட்டங்
கண்டாங்கேறிக்காரிகையோடுவிளையாடிப்
பண்டான்கொண்டபாவையர்பாடலிசைகேட்டான். (உசுகூ)

வேறு.

வரைவேந்தன்மடமகளைமணியோர்மேனிநிறங்கொண்டு
விரையேந்துதளிரீனல்விழையாய்வாழிதேமாவே
விரையேந்துதளிரீனில்வேனிற்றென்றலலர்தூற்ற
நிரையேந்துவடுநீயேபடுதிவாழிதேமாவே. (கூ00)

அடிமருங்கினரசிறைஞ்சவாழியாள்வான்பெருந்தேவி
கொடிமருங்கினெழில்கொண்டுகுழையல்வாழிகுருக்கத்தி
கொடிமருங்கினெழில்கொண்டு குழைவாயாயிற்பலர்பறிப்பக்
கடிமருங்கிற்புக்கலரேகாண்டிவாழிகுருக்கத்தி. (கூ0க)

வணங்கிவையந்தொழநின்றமன்னன்காதன்மடமகள்போன்
மணங்கமழும்பூம்பாவைவளரல்வாழிநறுங்குரவே
மணங்கமழும்பூம்பாவைவளர்த்தியாயிலிளையாராற்
கணங்களோடுபறிப்புண்டிகண்டாய்வாழிநறுங்குரவே. ()

வேறு.

இன்னணமிளையவர்பாடக்கேட்டலு
மன்னவன்மடமகண்முகத்துவாணிலா
மின்னியோரணிநகைமுகிழ்த்துமீள்வது
கன்னவிறோளவன்கண்கொண்டிட்டவே. (கூ0கூ)

உழையவரடிமுதல்பரவவொண்சுடர்க்
குழையவளொளிமனங்கவரக்கோடியர்
மழைதவழ்மாலையமாடமேறினான்
முழையமரரியரசனையமொய்ம்பினான். (கூ0ச)

கல்யாணச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ககூ0.



ஒன்பதாவது

# அரசியற்சருக்கம்.



நாவியேகமழுந்தொங்கனகைமணிவயிரப்பூணு
ணவியினகத்துளாளுமருவரையகலத்தாளுந்
தேவியேயாகவன்னதிருவொடுமிருவராவான்
பூவினுண்மடந்தைவந்துபுகுந்தவாறுரைக்கலுற்றேன். (க)

கண்மிசைகனிந்தகாதற்களிபடுசெல்வமுந்நீ
ருண்மிசையுக்கோர்நச்சுத்துள்ளிவந்துறைப்பதேபோல்.
விண்மிசையிழிந்துவந்தவொற்றனோர்வெஞ்சொன்மாற்ற
மண்மிசையிருந்தவிஞ்சைமன்னனைவணங்கிச்சொன்னான். ( )

விரைசெலவிவுளித்தேரோய்விஞ்சையருலகமாளு
மரைசர்கடிகிரிவேந்தனச்சுவகண்டனோடுந்
திரைசெலவுரறிஞாலந்தின்னியகடல்களேழுங்
கரைசெலவருவபோனம்மேல்வரக்கருதுகின்றார். (௩)

அரைசர்கள்வருகபோகவதுபண்டேயறிந்ததன்றே
வரைசெறிசிங்கவேறுமணிவண்ணனொழித்தனான்றே
விரைசெறிபொழில்கொள்சோலைவிஞ்சையருலகிற்பட்ட
துரைசிறிதென்னமேலாடுமொற்றனுமுரைக்கலுற்றான். (௪)

அருளுமாறடிகள்கேண்மோவரியரசதனையாரு
மருளுமாறிளையகாளைவாய்பிளந்திட்டவார்த்தை
தெருளுமாறொருவன்கூறக்கேட்டலுஞ்சேணில்வாழ்வார்
வெருளுமாறுள்ளமெல்லாம்வெருளிமெய்விதலைகொண்டார்.

விஞ்சையருலகமெல்லாம்வெய்துறவிரிந்தமாற்ற
மஞ்சினன்மறைத்துச்சின்னாளமைச்சரிமஞ்சுவென்பான்
வஞ்சனைச்சீயமாயவார்கழலவனைக்கூவி
யெஞ்சலில்புகழினானுக்கின்னணமிசைத்தானன்றே. (௫)

சொரிகதிர்வயிரப்பைம்பூணரசர்கள்பலருஞ்சூழ
வெரிகதிராழியாள்வானினிதினிங்கிருந்தபோழ்தி
னரியதுகேட்கவென்னவரிகேதுவென்பானுங்குப்
பெரியதோர்வியப்புச்சென்றுபட்டதுபேசினானல். (௭)

கரியவன்வளைந்தவெள்ளையெயிற்றவன்காளமேகம்
பெரியதொன்றிரண்டுகொம்மைப்பிறைகவ்வியிருந்ததன்னா
னரியதங்கென்னையென்னையெனவரிகேதுசொன்ன
வுரையெதிர்கபிலவட்டக்கண்ணெரியுமிழ்ந்தமாதோ. (அ)

மடித்தவாயெயிறுகவ்விமருங்கினோர்வயிரக்கற்றூ
ணடித்தனனசனிவீழவருவரைநெரிவதேபோற்
படித்தலைநடுங்கமற்றப்பருஉத்திரள்வயிரத்தம்பந்
தொடித்தலைசிதைந்துநுங்கத்துகளெழுந்தொழிந்ததன்றே.

விஞ்சையரதனைக்கண்டுமெய்பொதிரெறிந்துவிம்ம
வெஞ்சினங்கனன்றுமீட்டும்விஞ்சையனவனைநோக்கி
வஞ்சனைமனத்தராயமனிசரைவலியரென்பா
யஞ்சினைபெரிதுமேடாவென்றனனசனியொப்பான். (க0)

நிலத்திடைமக்களாற்றனின்னைப்போலஞ்சுவார்க்கு
மலைத்துணைபெருகிக்காட்டுமற்றதிங்கெம்மனோர்க்கோ
ரிலைத்ததுமில்லைமன்னேவென்றனனிரண்டுதிங்கள்
பிலத்திடைபொடித்தபோலும்பிறழ்ந்திலங்கெயிற்றினானே.

கனைகதிர்க்கடகக்கையாற்கற்றிரளுதிரவெற்றிச்
சினவழலெறிப்பநோக்கிச்சிவந்தனன்றெழித்தலோடு
மனநனிமயங்கிமற்றவிஞ்சையரஞ்சநின்ற
நனைமலரலங்கற்கேதுநகைகொண்டமனத்தனானான். (கஉ)

அடுகுரலரசசீயமதனையோராம்பற்றாள்போ
னெடிவரையளவிற்கீறிநுனித்ததுவியத்தல்செல்லாக்
கடிவல்ரயல்ங்கன்மார்பிற்காளையேபெரியனென்று
தடவரையனையதோளான்றன்னுளேவியந்துநின்றான். (கங)

இன்றிவனனலும்போழ்தினெதிர்நின்றுகனற்றியென்னை
சென்றவனாற்றறானேகண்டபின்றேறுமன்றே
யென்றுதன்மனத்தினெண்ணியியையந்தவாமுகமன்சொல்லிக்
குன்றுடையரசன்முன்னைக்கூப்பியகையனானான். (கச)

அமர்நனிதொடங்குமென்றீண்டயர்ந்தனிராகுமென்று
குமரனைக்குறித்தவெஞ்சொற்குறைசென்றுமுடியுமெல்லைத்
தமருளங்கொருவன்வந்துசக்கிரவாளந்தன்னு
ணமரதுநிலையுநங்கைபோந்ததுநடுங்கச்சொன்னான். (கரு)

அடிகளிவ்வவனிதன்மேலிழிந்ததுமணங்கோடொப்பர்ள்
கடிவினைநிலையுமன்றேகண்டுவெந்தொருவன்கூறச்
சுடுசொலிஃதொழிகவென்று துணைச்செவிபுதைத்துவல்லே
முடிமுதறுளங்கத்தூக்கிமுனிவினைமுடிவுகொண்டான். ()

பெருகினன்வெகுளிகண்ணுட்பிறந்ததுபிறங்குசெந்தீ
யுருகினன்போன்றுதோன்றமயிர்த்துளையுகுத்தசெண்ணீர்
திருகினனெயிறுசெவ்வாய்கறித்தனன்றிசைகளோடு
மருகினோர்நடுங்கநோக்கியழனகையடுத்துநின்றான். (கள)

மலைகளைமறித்துமற்றோர்மறிகடனடுவணிட்டவ்
வலைதிரைமகரமுந்நீர்துவிதுவாக்குவேன்கொ
லுலகினையுள்ளுங்கைக்கொண்டுருளையாவுருட்டியீட்டென்
பலபுனைமடந்தைதன்கீழ்ப்பதித்திடுவேன்கொலென்றான். ()

அனன்றனன்றவைகள்பேசியமையுமவ்வரசர்தீமை
மனங்கொளப்படுவதாயின்மணிவரையுலகின்வாழுஞ்
சனங்களைத்திரட்டிப்பின்னைத்தக்கதொன்றறிவனென்றான்
சினங்கெழுகாலன்மற்றோர்காலன்மேற்சிவந்ததொப்பான். ()

சிறந்தெரியனலோடொப்பான்பணிகொண்டுதிசைகளோடி
யறைந்தனர்முரசிற்சாற்றியறைதலுமரசரெல்லா
மறைந்தனவுலகமென்னமாய்ந்தனதிசைகளென்னப்
பறந்தனர்விசும்புபோர்ப்பக்கடற்படைபரப்பிவந்தார். (உ0)

மற்றவரடைந்துவெய்யோன்மலரடிவணங்கிநின்று
செற்றவனிருந்தவாறுஞ்செங்கண்டீயுமிழ்ந்தவாறு
மெற்றியவயிரத்திண்டூணெரிந்திடைகிடந்தவாறு
முற்றனபிறவுநோக்கியுள்ளங்கணடுங்கியிட்டார். (உக)

சூரியுளைத்துளைகளாவிவிடுகின்றசுழலுஞ்செங்கண
கருமுகினுடங்குகண்போற்புருவங்கண்முரிந்துநீங்கான் [பா
பெரியதோர்முனிவுகொண்டான் பிறையெயிற்றரியோடொப்
னெரியினுள்விளியலுற்றார்யார்கொலோவளியரென்பார். ()

ஞாலமேற்றிரிந்துநாளுமுயிர்கிளைநடுங்கப்பார்க்குங், காலனைக்கதம்பட்டான்கொலன்றெனிற்றபமாள்வார் மேலெனக்கிருப்பார்போலுமெனவெகுண்டனல்கின்றான்கொல், வேலைநீருலகின்மற்றிவ்வெகுளிக்குமுதலென்னென்பார். (உங)

ஊழிகள்பெயர்க்கலுற்றிவ்வுலகினைப்பிறிதொன்றாக்கி
வாழுயிரொருங்குவாரிமறிகடனடுவட்பெய்வான்
சூழியதொடங்குகின்றதாங்கொலோசொல்லினீடொன்
றாழியான்வெகுளிக்குண்டோவாரிரையாவதென்பார். (உச)

தானவரரக்கர்பண்டேதஞ்சமாமிவற்குமண்மே
லானவர்மனித்தரேகவுவனுக்கோர்துகளுமாகார்
வானவரிவற்குமாறாய்வருபவர்மதிப்பினில்லை
யேனவர்முனிவுசெய்வார்யார்பிறருரைமினென்பார். (உரு)

இற்றதிவ்வுலகமென்பாரெரிந்தனதிசைகளென்பா
ரற்றனமகரமுந்நீரகம்புலர்ந்தொழியுமென்பார்
மற்றினிமொழியல்வேண்டாவருவனவறியலாகா
வுற்றபினறிதுமென்றாங்குரையொழிவாருமானார். (உசா)

அச்சமோடுலகமின்றேயவிந்தனபொன்றுமென்பார்
நச்செரிநகையினாலேநடுங்கினதிசைகளென்பா
ரிச்சைகள்பிறந்தவாற்றாலினையனநினையும்போழ்திற்
கச்சையங்களிநல்யானைக்காவலன்கனன்றுசொன்னான். ()

இரதநூபுரத்தையாள்வான்புதல்வியையினைவஞ்சித்திதுப்
புரிமனுசர்க்கீவாக்கேபுகன்றனன்போலுமென்ற
வுரைதனக்குரைத்தவாறேயுரைத்தனனுலகமெல்லா
மிரைதனக்கென்றுமாற்றாவெரிபடுவெகுளித்தீயான். (உஅ)

முரசொலிமுழையினுள்ளான்முழங்குகின்றதனேடொப்ப
விரையொலிவிளங்குதாரான்விளம்பியவெகுளிமாற்ற
மரைசர்களாங்குக்கேட்டாரடிகண்மற்றிதற்கோவிவ்வா
றுரைசெலமுனிவதென்றேரொல்லொலியெழுந்ததன்றே. ()

செழுமலரலங்கன்மார்பன் செங்கண்டீயுமிழக்கண்டு
மெழுமலர்த்தனையதிண்டோளிவைசுமந்திருப்பதென்னே
கழுகுபோர்க்களத்துவென்றுகதலிகைநடுதுமன்றேல்
விழவயர்விசும்பினோர்க்குவிருந்தினமாதுமென்பார். (௩0)

ஏவதுசெய்துவாழும்யாமுளராகவெங்கோ
நோவதுசெய்தவேந்தர்நுனித்துயிர்வாழ்பவாயிற்
சாவதுபோகவாழ்க்கைதவந்தலைநிற்றலொன்றோ
வீவதுசெய்தலொன்றோநமக்கினிவிளைவதென்பார். (௩க)

நாண்டொழின்மகளிர்முன்னுநகைக்கிளையாயத்துள்ளும்
வீண்டொழில்விளம்பியென்னைவீரங்கள்வெறியவாக
வாண்டொழில்புகுந்ததம்மாவதோவினிதாயிற்றென்று
தூண்டொழவளர்த்ததத்தந்தோள்களைநோக்குகிற்பார். ()

நாள்வடுப்படாமைநம்மைப்புறந்தந்தாற்குதவிநங்க
டோள்வடுப்படாதுதோன்றல்புகழ்வடுப்படுதலுண்டோ
வாள்வடுப்பிளவுபோலுங்கண்ணியையகிழ்ந்தகாளை
கேள்வடுப்படரும்பூசல்கேட்டிரானுளையென்பார். (௩௩)

இனியிருந்தென்னைபாவமெழுமின்போய்ப்பொருதுமென்பா
முனிவனசெய்தவேந்தன்முடித்தலைகொணர்துமென்பார் [ர்
கனிவளர்கிளவியாளைக்கைப்பற்றித்தருதுமென்பார்
பனிவரையரசர்மாற்றம்பற்பலபரிதிவேலோய். (௩௪)

சினமெனப்பட்டதீயுட்பிறந்ததுசெருக்குநன்னீர்
மனவுணவுண்மொணப்பூணின்றவயிரவொள்வா
ளனலதொன்றகத்ததாகவாரமர்குருதிவேட்டுக் [ன்னுன்
கனல்வதோர்காலவொள்வாள்கடைக்கணித்தொருவன்சொ

தோள்களைப்புடைத்துவீக்கித்துணைக்கரங்கொட்டியார்த்து
வாள்களைத்துடைத்துநோக்கிவகைசெய்வதெளிதியார்க்கு
நீள்கதிரிமைக்குமொள்வாண்முகம்பெறநெருப்புச்சிந்தித்
தாள்களைவெதுப்பும்வெம்போர்தாங்குவதரிதென்றான். ()

தானவரெனினுமிப்போரிழிந்துபோய்த்தரணிவாழு
மூனமருலகமாளுமூழியொன்றிதுவுன்றுயில்
வானவருலகுமண்ணும்வந்துநின்வாயில்பற்றி
யீனமொடிறங்கக்காட்டியிடுவன்யான்றெளியிதென்றான். ()

வாளினுற்செருவுண்டேனுமாயமற்றாகுமேனுந்
தோளினுலாகுமேனுஞ்சொல்லெலாமொழிகமற்றக்
காளைதன்னுயிரினேடுங்கன்னியைக்கொணர்ந்துதந்து
தாளிலேயிட்டபின்றைத்தவிர்கநின்சீற்றமென்றான். (௩அ)

ஆளிகட்கரசன்பாங்கோர்குறுநரியறிவில்லாது
மீளிமைபெறுதுவெம்பிவெகுண்டெழுகின்றதென்று
ளுளினுநங்கள்போல்வார்நகைசெயப்படுவதன்றே
வாளொளிவயிரமின்னுமணிமுடிமன்னர்கோவே. (௩௯)

ஆதலாலெங்களாலங்காவதொன்றிலலையாயிற்
போதுலாமலங்கன்மார்பபொருவதுபொருந்திற்றென்னுங்
காதலான்கனகசித்திரன்கட்டுரையதனைக்கேட்டே
கோதிலாமாரிபெய்தகோடையங்குன்றமொத்தான். (௪0)

மற்றவனுரைத்தபோழ்தின்வச்சிரகண்டனென்பான்
கொற்றவற்கிளையகாளைகோற்றொழிற்பாகம்பூண்டா
னிற்றதாலெங்களாணமையாங்களுமிழிந்துநிற்பச்
செற்றதோரபடையுண்டாயிற்றென்றுகண்சிவந்திட்டானே.

மகரமாலகடலையல்லாற்சிறுகயமதலைசேரா
சிகரமாலயானைவேந்தேதானவாசெருவன்றாயி
ஞிகரலாநீசர்தம்மேனீசெலற்பாற்றன்றென்று
புகரெரியவிக்கலுற்றான்பொழிமழைபொழிவதொத்தான். ()

வேறுவேறாகின்றுவெஞ்சினஞ்செருக்கிவிஞ்சைக்
கேறனுன்றமபிமாருமக்களுமின்னபோல்வ
கூறினர்கூறலோடுங்குரையழலவிவதேபோ
லாதினுனென்னைசெய்யுமாயபண்பதுவதானூல். (௪௨)

அரசர்கடுணறியிற்கண்டீரவர்விழைப்பிலாமையென்று
முரசெனவதிரும்பேழ்வாய்முழங்கிசைமொழியிற்சாற்றி
வரைசெறிந்தனையதோளான்மந்திரசாலைசேர்ந்தா
னுரைசெறிந்தங்குப்பட்டசூழ்ச்சியுமுணர்ந்துபோந்தேன். ()

கன்னிதன்றிறத்துச்சீறிக்காவலன்கனலக்கண்டீ
ரென்னினிக்கருதுகின்றதென்றனனெரியுமாழி
மன்னவற்குணர்வுங்கண்ணுமாற்றமும்வலியுந்தோளு
மன்னவனமைச்சர்க்கேறுமவனரிமஞ்சுவென்பான். (சரு)

அணிநகர்மேககூடமதனையாண்டரியசெய்கை
துணிபவன்றாமகேதுசூழ்ந்தனன்சொல்லலுற்றான்
மணிவரைப்பிறந்துமாண்டவருங்கலமன்னர்கோமான்
பணிவரையன்றியாரேபெறுபவர்பகர்மினென்றான். (சசா)

வரைதன்மேற்றழலின்பேரோன்வளநகரதனையாளு
மரசனங்காரவேகனதனைக்கேட்டழன்றுசொல்வா
னிரதநூபுரத்தையாள்வானிகழ்ந்தனன்பெரிதுநம்மைப்
பொருதவன்கிளையைமுந்நீர்ப் புறங்கரைப்படுத்துமென்றான்.

மல்லினன்மலர்ந்தமார்பீர்மறைந்துநாமிருந்துவல்ல
சொல்லினல்வெல்லலாமேற்சொல்லுமினின்னுமன்றி
வில்லினல்விரவுதானைச்செருவினுள்வீரந்தன்னல்　　[றான்.
வெல்லலாமென்னினென்னை விடுமின்போய்ப்பொருவலென்

பூவினும்பொருதல்வேண்டாசூழ்ச்சியேபொருந்தநோக்கி
யாவதுகாண்டலாகுமரசர்க்குநீதியென்று
சாவதையஞ்சுவார்க்குந்தகைமையில்லவர்க்குமன்றே
யோவுதலின்றியோதிவைத்ததங்கொருவனென்றான். (சக)

அழலவிரலங்கல்வேலோனவ்வரிசேனனென்பான்
கழலவன்காதற்றோழன்கனன்றவண்கருதிச்சொன்ன
மொழியெதிருலகமாள்வானுவந்தவன்முகத்தைநோக்கிப்
பழிபெரிதொழியச்சொன்னான்படைத்திறலாளனென்றான்.

பொருவதோவெளிதியாங்கள்பொருந்திறமுரைமினென்னை
மருவியமனிதப்போரோவான்கெழுதெய்வப்போரோ
விருமையினியன்றபோரோயாதுநாந்துணிவதென்றான்
விரிசிறையுவணஞ்சேர்ந்தவென்றிநற்கொடியினானே. (ருக)

செப்பியமாற்றங்கேட்டே திறற்சிறீபாலனென்பான்
றிப்பியர்புகழுஞ்செல்வத்திருநிலையகமதாள்வா
னப்படித்தாயிற்கேண்மினறிந்தவரறைந்தவாறென்
றிப்படைநிலைமையோராளெடுத்தெடுத்தியம்புகின்றான். ()

பொருபடைத்தொகையோர்மூன்று போர்த்தொழிறானுமூன்றே
மருவுடைமனுடந்தெய்வமிருமையுமென்னமற்ற
வெருவுடைப்படையின்குப்பைமேலதுநான்குவீற்ற
திருபடையொழிந்துநின்றவிவையும்பாங்குடையவென்றான்.

அத்திரமாதியாகவோதியநான்குவிஞ்சை
தொத்தெரிசுடருமொள்வாளெனவிரண்டாகுமுன்னும்
வைத்தவுட்கடையதேனையொழிந்ததுபரமமாயை
யித்திறத்தினையவென்றானெரிமணியிமைக்கும்பூணான். (ருச)

படைக்கலவிகற்பும்போரின்பகுதியும்பரப்பினங்க
ணிடைப்புகுந்துரைப்பிற்சாலப்பெருகுமஃதிருக்கவென்று
நடப்பதுமக்களோடுமக்கட்போர்நல்லவேனும்
புடைப்பிலபுகுதுமாயிற்புறனுரைபுணர்க்குமென்றான். ()

விஞ்சையர்பொருவராயில்விஞ்சையிற்பொருதுமன்றி
வஞ்சனையின்றிமக்கள்பொருபவேன்மக்கட்போரே
யெஞ்சுதலின்றியேற்றபொருதுமென்றின்னசூழ்ந்து
நஞ்சனுற்குரைப்பக்கேட்டுநன்றதுதுணிமினென்றான். (ருசு)

ஆய்ந்தவரோடுபோதந்தாழியானருவிக்குன்றிற்
காய்ந்துவந்திறுத்தபின்றைக்கடிநகர்நமதுதன்மேற்
சேர்ந்தெரித்திடுதுமென்றுதென்மலையரசர்சென்றார்
வாய்ந்துமற்றெழுந்தமன்னர்வரவலித்திருந்தாரென்றான். ()

ஒற்றனுங்குரைப்பக்கேட்டேயொளியவன்பெயரனேடுஞ்
சுற்றமாய்வருஞ்சூழ்நீர்ச்சுரமைநாடுடையகோவு
மற்றவன்புதல்வர்தாமும்வருகெனவந்தார்மாற்ற
முற்றவாறறியச்சொன்ஞெனொளிவரையரசர்கோவே.

விச்சையின்செருக்கினுலும்வீங்குதோட்டருக்கினுலுங்
கச்சையங்களிற்றேடேனைக்கவனமாவலத்தினுலு
மச்சுவக்கிரீவனுதியரசர்களழன்றுவெம்போர்
நச்சிமேல்வருபவாயினன்றதுபோல்வதுண்டோ. (ருகூ)

எரியெனச்சுரிந்தகேசத்திருளெனத்திரண்டமேனிப்
பெரியனவளைந்தவெள்ளையெயிற்றினர்பிலங்கொள்வாய
ரரியனசெய்பவுன்றேயசுரரென்றுருவங்கொண்டே
யிரிவனரோடுவாருணம்மையுமெண்ணிற்றென்பார். (கூ0)

எரிபொங்கவெழுந்தவெள்ளையெயிற்றிடையிலங்கநக்குப்
புருவங்கணெரியவேற்றிப்புகுந்துதாம்வெருட்டும்போழ்தி
லுருவங்கள்பெரியவாறுமுள்ளங்கள்சிறியவாறுஞ் [ர்
செருவங்கண்விளைந்தபோழ்திற்காட்டுதுந்தெருட்டியென்பா

இமையவரரசன்றானுமிகல்செயக்கருதிவந்தா
லமையுமஃதஞ்சலாமேயாண்கடனதுவதானு
நவையினருளரென்றஞ்சிநடுங்கினர்தமக்குநாளுஞ்
சுமைபெறுதோளும்வாளுஞ்சொல்லுமின்சுருங்கவென்பார்.

மானமர்நெடுங்கணார்தம்மனமெனவெஃகிமைந்த
ரூனமிலகலமுழ்கியுள்ளூறச்சிவந்தவொள்வா
ளீனமாமருங்கினூராதிரைக்கிடைந்தனல்பவின்று
தானவர்குருதிமாந்தித்தம்பசிதணியுமென்பார். (கூங)

ஆள்வரையனையதானையச்சுவக்கிரீவனென்னு
நீள்வரைமருங்கினின்றதிருவெனுமருவிநீத்தந்
தாள்வரையிழிந்துவந்துதகைமணிநீலவண்ணன்
வாள்வரையகலமென்னுங்கருங்கடன்மடுக்குமன்றே. (கூச)

ஆத்லாலதனுமுமயிற்படைபுணைகள்பற்றி
யெதிலாமன்னரென்னுமிருமாக்கட்புவாரி
மீதுலாம்வெகுளியென்னும்வெவ்வழன்முழங்கமாட்டிக்
காதலார்கண்கள்பூப்பக்காய்த்துதுங்கைக்கோளென்பார். ()

உயிரினுமதிக்கற்பாலதுள்ளப்பேருறையினுள்ள
தயிறரும்பனிக்குந்திண்மைமானநாணதனையேற்றி
வயிரவின்மனத்ததாகக்கையதுவையங்காக்குஞ்
செயிரில்வில்லதனைநோக்கிச்செங்கதிர்ப்பெயரன்சொன்னான்

அடுந்திறல்வெகுளிக்காற்றோடருக்கப்பேருடையமேகங்
கொடுஞ்சிலைகுலவக்கோலிக்குருதிநீர்வெள்ளமோடக்
கடுங்கணையென்னுந்தாரைகலந்துமேற்பொழியவேந்தர்
நடுங்கினர்பனிக்கும்போழ்தினம்மையுமறிவதென்றான். ()

அலைகடல்வண்ணன்றம்முனலர்குழைபுரளுங்காதிற்
சிலைபடுவயிரத்தோளான்செங்கதிர்முறுவறோன்றி
யிலைபடுவயிரப்பைம்பூணிமையவரல்லராயின்
மலைபடுகிருமியோநம்மாறுநிற்பனமற்றென்றான். (சுஅ)

வானவர்மருளநாஞ்சின்மற்றிதுமடுத்துமாற்றார்
சேனமரகலமென்னுஞ்செறுவுசெஞ்சால்கள்போக்கி
யூனமர்குழம்புபொங்கவுழுதிட்டுவென்றிவித்தி
யேனவர்செவிகளாரவிரும்புகழ்விளைப்பனென்றான். (சுகூ)

இன்னனபிறவுமேனையிருநிலத்தரசர்பேச
மன்னவகுமரன்மாமன்மலரடிவணங்கிவாழ்த்தி
மின்னெடுவிளங்குவேலோயுளங்கொடுவிளம்பியென்னை
யென்னெடுபடுவதன்றேயினியிப்பால்வருவதென்றான். (எ0)

ஆங்கவன்மொழிந்தபோழ்தினமையுமஃதிழிவதன்றே
தேங்கமழலங்கன்மார்பவினிச்சிறிதுண்டுநின்ற
தோங்கியவிஞ்சைநின்னுளுள்ளத்துக்கொள்ளற்பால
வீங்கிவையென்னலோடுமிறைவனைத்தொழுதுகொண்டான்

மந்திரவெழுத்துவள்ள லுள்ளத்துப்பொறித்தபோழ்தே
* யந்தரவிசும்பிற்றெய்வமனுகினபணியென்னென்ற
வெந்திறல்விஞ்சைக்கேற்றவியன்சிறப்பியற்றிவேலோ
னுந்தொழில்புகுந்தபோழ்திஞேக்குமினெம்மையென்றான்.

ஓதியவிஞ்சைவாய்ப்பவுலகடிப்பட ாதுகின்ற
காதிசாலமரகற்பமாமெனவமருங்காலே,க்
தூதுவருருவக்காளேசெவிசுடுசரம்பெய்தூணி
மாதிரத்தொசிந்தவேபோலவந்தொருங்கிருவாகின்றார்.(எ௩)

பொன்னவிர்திகிரியாளும்புரவலருரைப்பவந்த
மன்னவன்றமரம்யாமேவாய்மொழிகேண்மின்மன்னீர்
கன்னியைத்தருதிரோவக்கன்னியைமகிழ்ந்தகாளே
யின்னுயிர்தருதிரோவிவ்விரண்டிலொன்றுரைமினென்றார்.

வே று.

கடுத்தவர்கன்னிபேருரைக்கக்கண்களுட்
பொடித்தனபுகைத்திரள்பொழிந்ததீப்பொறி
யடுத்தெழுகின்றதோராவியாரழன்
மடுத்ததுமனத்திடைமைந்தற்கென்பவே. (எ௫)

கணகனலுமிழ்ந்துதம்புலமுங்காணல
வெண்கதிர மணிமுத்தம்விதிர்க்குமேனியன்
புண்களுளெஃகெறிந்தனயபுன்சொலால்
விண்களைவெதுப்பினன்வீரனென்பவே. (எசு)

நகுதொறுமழற்கொடிநடுங்குநுண்டுளி
யுகுதொறுமயிர்த்துளேயுயிர்க்கும்வெம்புகை
புகுதொறுஞ்செவிசுடுபுன்சொலாரழன்
மிகுதொறும்விசும்புறநிமிர்ந்துகாட்டினன். (எஎ)

தோற்றமுஞ்சுடரொளிவடிவுமுன்னிலா
வேற்றுமையுடையவாய்விரிந்துதோன்றின
மாற்றமஃதொழிந்தனன்மனித்தனன்மையைத்
தேற்றினன்றிருமகிழ்தெய்வக்காளேயே. (எஅ)

---

* யந்திரவென்றும்பாடம்.

மாண்டனமாற்றலர்நாள்கள்பூமக
ளீண்டுவந்திவனொடுதிளைக்கலுற்றனள்
காண்டுமிக்காளைதன்கன்னிப்போரென
வீண்டினர்விண்ணிடையமரரென்பவே. (எகூ)

தூதுவர்முறைப்படுந்தொன்மையாலிவண
டூதுரைகொணர்ந்துநஞ்செவிகள்சுட்டவிப
பேதையர்பிழைத்ததுபொறுக்கல்வேண்டுமோற்
போதலேபொருளிவர்போகபோகவே. (அ0)

வில்லவன்மொழிதலும்வீரவேந்தாக
ளொல்லெனவொலித்தெழுந்துடன்றுசொல்லுவார்
கல்லுயர்கருவரைகருதியாமிவை
சொல்லியதெனச்சிலர்சுருங்கச்சொல்லினார். (அக)

ஆழியுமகலத்ததிருவும்வாங்கியிப்
பாழியந்தோளினான்பாலவாக்கினா
லேழையுமெம்மையுமறியுமென்றனர்
வாழைமேல்வயிரங்கூர்த்தனையமாண்பினார். (அஉ)

வாணிலாமணிநகைமுறுவலாடிறத்
தேணிலாரியம்புவதியம்பினல்லது
காணலாமெல்லையுட்பகர்ந்துகட்டுரை
பேணலாம்பிறபிறபீடுகொண்டதே. (அங)

கலைமிசையினியசொற்கன்னிகாளைதன்
னிலைமிசையலங்கன்மார்பிசையக்கேட்டுமோர்
மலைமிசைமற்றத்துவாயுரைக்கும்வல்லதில்
சிலைமிசைத்தோளினான்சேவகங்களே. (அச)

துன்னிவந்திவனடிதொழுவனேலுயிர்
தன்னதாமன்றெனிற்றனதன்றாதலான்
மன்னுயிருவக்குமோமானம்வேண்டுமோ
வென்னவனுவப்பதென்றெண்ணிவம்மினே. (அரு)

என்றவர்மொழிதலுமெழுந்துதூதுவர்
சென்றனராயிடைதெய்வவாய்மொழி
வென்றிவீற்றிருக்குமிவ்விடலையேயென
நின்றதுநிலமகள்பரிவுநீங்கினாள். (அசு)

வரிவளைமுரன்றனவானதுந்துபி
திரிவனவறைந்தனசெங்கண்டீப்பட
முரிவனவீரர்தம்புருவமூரிவிற்
பரிவிறையின்றிவன்பாடிவட்டமே. (அஎ)

ஆளியேறனையவனணிபொன்மேனிமே
னீளொளிதவழ்ந்ததுநெடுங்கணேழையர்
தோளுமங்கிடவயிற்றுடித்தவீரர்கை
வாளும்பூநின்றனமலர்ந்ததுள்ளமே. (அஅ)

அரசிளங்குமரனையனற்றுமாற்றலர்
முரசினுண்மணியரவுறைந்தமுத்தணி
நிரைசுடர்நெடுங்குடையகடுநெய்கனி
பிரசங்கள்புரைபுரைவிலங்கப்பெய்தவே. (அகூ)

கதிர்மணித்தேர்க்கொடிஞ்சேறிக்காக்கைக
ளெதிரெதிர்சிலம்பினவெரிந்தமாதிர
முதிரநீர்ப்புதுமழைசொரிந்ததுச்சியி
னதிர்தருகவந்தங்களாடியிட்டவே. (கூ0)

விடலருமியல்புகடிரிந்துமெல்லியன்
மடவரலவரொடுமாறுபட்டனர்
படவரவல்குலார்காதிற்பையெனச்
சுடர்தருகுழைகடாமழிந்துசோர்ந்தவே. (கூக)

தூவொளிமணிமுடிசுடருங்கிம்புரி
நாவளைக்கொண்டனநாமவென்றிவேல்
பூவொளிமழுங்கினபோர்செயாடவ
ரேவிளைகொடுஞ்சிலையிற்றுவீழ்ந்தவே. (கூஉ)

உள்ளடியுமித்துமித்தழன்றமேனியுங்
கள்ளவிழ்கண்ணியுங்கரிந்தகண்களு
மெள்ளுநர்க்கிடவயிற்றுடித்தவேழையர்
வள்ளிதழ்க்கருங்கணும்வலந்துடித்தவே. (கங)

வானமீனுச்சியுணின்றமாற்றலர்
தானையுணடுவுவீழ்ந்ததிரத்தங்களுக்
கூனமுண்டென்பதையுணர்ந்துமுள்ளிடை
மானமஃதொழிந்திலர்மறங்கொண்மன்னரே. (கச)

வேறு.

போகிய தூதுவர்பொன்னவிராழியொ
டேகியநாளுடையாற்கிதுவாலென
வாகியவாய்மொழிகூறலுமாயிடை
நாகமழன்றெறிநச்செனநக்கான். (கரு)

மண்டணிமானிலமன்னரைமால்வரை
யொண்டொடிதாதையொடேயிர்வெளவுபு
திண்டிறல்பேசியவச்சிறியானையுங்
கொண்டணிர்கூடுதிரோகடிதென்றான். (கசா)

ஆழியினனதுகூறலுமாயிடை
வாழியரோவெனமால்வரைவாழ்வபவர்
சூழியம்ாவெர்டுதோல்பலதேர்பல
தாழலர்பண்ணினர்தாமுமெழுந்தார். (கஎ)

காரணிகண்முரசார்த்தகறங்கின
நீரணிசங்கிரைத்தனவெம்பறை
தாரணிதானைசிலம்பினதாழ்ந்தனர்
போரணிவிஞ்சையர்பூமியின்மேலே. (கஅ)

வேறு.

குடையுங்கொடியுங்குளிர்சாமரையும்
படையும்முடியும்பலசின்னமுமே
யிடையீ்ம்புடையும்மிருபாலகமும்
மடையும்படையும்மறிதற்கரிதே. (கக)

வேறு.

பொன்றவழ்தேர்கலிமாவொடுபோதக
மென்றிவையெங்குமிடம்பிறிதின்றி
நின்றனநின்றதுவாட்படையப்படை
சென்றுபெருந்திசையார்த்தனர்சேர்ந்தார். (௧௦௦)

கொண்டல்கிளர்ந்துபரந்துகுவிந்தலை
மண்டுவபோன்மணமாநகர்முன்னி
விண்டவழ்மின்னிடுவாளினர்வில்லின
ரெண்டிசையும்மிருள்கூரவிழிந்தார். (௧௦௧)

வேறு.

படையென்றலுமேபடைபாரதுவு
மிடையின்றியெழுந்ததிரண்டுகடல்
விடையின்றிவெகுண்டெழுகின்றனபோற்
புடையின்றிநிரந்தனபோர்த்தொழிலே. (௧௦௨)

வேறு.

காரொடுகார்கடலோடுகருங்கட
னீரொடுசென்றெதிர்நேர்வனபோல்வன
தேரொடுதேர்கலிமாவொடுமாபல
போரொடுவந்துபுகுந்தனவன்றே. (௧௦௩)

வேறு.

இலையேரயில்வாளியொடெண்டிசையுஞ்
சிலையேயெனவுண்டுசிலைத்தொழுதி
மலையேமலையோடுமலைந்தனபோற்
கொலைவேழமொடேற்றனகுஞ்சரமே. (௧௦௪)

கொடிமேலுடையானைகள்கும்பமுதைத்
தடிமேலனவாகவெழுந்தரசர்
முடிமேலனவாமுகின்மேலனவாய்ப்
படிமேலனவாயினபாய்பரியே. (௧௦௫)

ஒருபான்முடிமேலுருளாழியுதைத்
திருபாலுமெழுந்தெறிபாறுசெலப்
பொருபாலவர்கண்சுழலப்பொருதேர்
வருபாலறியாமைமயங்கினவே. (௧௦௬)

நெறியார்கிரைமாவொடுதேர்கடெர்டுத்
தெறியாவுதையாநுதலேறுகரம்
பறியாமுறியாப்படையோர்படையுட்
செறியாமதயானைதிரிந்தனவே. (௧௦எ)

கடுநீரவர்கண்ணெரிகொண்டுகனன்
றிடிநீருருமின்னெதிரேயெறிய
வடிநீரென * வானிடையேமுரியாப்
படுமீனெனவீழ்ந்துபதைத்தனவே. (௧௦அ)

வடிநானுதிகவ்வியவாளேயொடும்
விடுமீனெறிதூண்டில்விசைத்தனபோ
னடுநாணிடையேறியவம்பிஞெடு
நெடுநாணறவிற்கணிமிர்ந்தனவே. (௧௦௯)

வேறு.

ஆரழலான்பெயரானணிவெஞ்சிலை
போரழல்வார்கணைமாரிபொழிந்தது
சீர்கெழுவிஞ்சையர்செந் † தடிநுந்துபு
நீர்கெழுவெள்ளநிரந்ததையன்றே. (௧௧௦)

தென்மலையார்திறன்மன்னவன்மன்னிப
வின்மலைவார்தனியின்மையின்விஞ்சையா
பொன்மலையொன்றொடுபோர்செயமேவிய
மன்மலைபோலவெழுந்துமலேந்தார். (௧௧௧)

கோளெனநாளெனமின்னுபுகுன்றெறி
வேளனையான்மிசைவிஞ்சையர்வெஞ்சுடர்
வாளினர்வில்லினர்மால்வரைபோல்வன
தோளினர்தாளினர்தோன்றினரன்றே. (௧௧௨)

தோன்றியவிஞ்சையர்மேற்றொடுவெங்கணை
கான்றதுதிண்சிலைகான்றலுமேதிசை
மான்றதுமங்குல்பரந்ததுகாரிரு
ளூன்றதுநண்ணலர்நண்ணலரானூர். (௧௧௩)

---

* வாளிடையென்றும்பாடம். † தடி—ஊன்.

தூணிமுகத்ததுசோர்விலோர்கையொரு
பாணிமுகந்ததுபண்புறுவெஞ்சிலை
வேணுமுகத்ததுமண்டலம்வெங்கணை
காணுமுகத்ததுவோவுணர்காலே. (ககச)

ஒன்றுதொடுத்ததொராயிரமாம்பல
வென்றுதொடுத்தனவெண்ணிலவாஞ்சர
மன்றுதொடுத்தவனெய்தனவையக
நின்றுதொடுத்துநிரந்தனவன்றே. (ககரு)

விண்மிசையேறியவெஞ்சரம்விஞ்சையர்
கண்மிசையேறலுமேகடிதேதிசை
யெண்மிசையின்றியிருண்டனவோவென
மண்மிசைவீழ்ந்துமயங்கினரன்றே. (ககசு)

வேறு.

இருள்பாயினவாலிதுவென்னெனவே
மருள்வார்வெருள்வார்மறைவார்மறிவார்
தெருள்வார்திரிவார்செருவார்கணையா
லுருள்வார்களுமாகியுடைந்தனரே. (ககஎ)

வேறு.

உடைந்திடுபடையிடையொலிகொண்மால்வரை
யிடைந்திடும்படியெழுந்திடறியேகினார்
படந்தொடினுடன்றெழுபணிகள்போற்பகை
கடைந்திடுங்கடுந்திறற்காலவீரரே. (ககஅ)

இடுதவிசொடுதொடர்பிரியவெந்தகத்
தடுசரம்படுதொறுமலறிவாலதி
நெடிதெனநிறுத்திநீருகுத்துநீள்செவி
மடிதரமுடிகினமானயானையே. (ககக)

முரசுகளுடைந்தனமுடிகண்மூழ்கின
வரசுகளவிந்தனவரவத்தேர்க்குழாம்
விரைசெலவிவுளிகளிடறிவெந்திடி
திரைசெலவிழிந்ததுகுருதித்தமே. (க௨0)

காலெதிர்கடலுடைந்திட்டதேர்ப்பநம்
பாலதுபடையுடைந்திட்டதின்றெனா
மாலெதிர்கடற்படைமானவேந்தனைக்
கோலெதிர்கையவன்றொழுதுகூறினான். (கஉக)

நூற்பயம்பலவொடுநுணங்குகேள்வியே
போற்பயம்பலவொடுபுகழ்களைதரும்
வேற்பயங்கொண்டனர்விரவலார்நமர்
காற்பயங்கொண்டனர்காலவேலினாய். (சஉஉ)

பெரியவாய்ப்பிறையெயிறிலங்கநக்குநக்
குரியவாளெரியெழவோச்சிநம்மொடு
* பொரியவந்தார்களும்புறந்தந்தாரினி
யரியதென்னெனநக்காரவனிமன்னரே. (கஉ௩)

கலையினைக்கடந்தசொற்கன்னிகாதல
னலையினுக்குடைந்திலரருக்கன்கையதோர்
சிலையினுக்குடைந்துதஞ்சிறுமைநாணிநம்
மலையினுக்கடைந்திலர்மானமன்னரே. (கஉச)

ஒன்றுவில்லிரண்டுதோளொருவனெய்யவே
யின்றுநம்படையுடைந்திட்டதாய்விடி
னன்றுபோர்நமர்களதென்றுநக்கனன்
குன்றுபோற்பெருகியகுவவுத்தோளினான். (கஉரு)

இரதநூபுரத்தின்மேலெழுந்தவேந்தரும்
பொருதுதாமழிந்தமர்புறக்கிட்டோடினா
ரரிதினின்விளைவதையன்றியாவருங்
கருதியமுடிப்பவரில்லைகாண்மினே. (கஉசா)

பாழிப்போருடைந்தனர்பகைவர்க்கின்றென
வாழிப்போர்த்தடக்கையாற்கவர்கணீர்மையைத்
தாழிப்போர்விலன்றமனொருவன்கூறினா
னாழிப்பேரெரியுணெய்யுகுத்ததொப்பவே. (கஉஎ)

---

* பொரீஇயவென்பதன்விகாரம்.

விண்மிசைசென்றவர்மெலிவும்வேற்றவர்
மண்மிசைசென்றவர்மறிந்தமாற்றமும்
புண்மிசையெஃகம்புக்கொளிப்பபோன்மனத்
துண்மிசையொழிபடையாகியூன்றவே. (கஉஅ)

இருந்தினியென்னையீங்கெழுகவென்றுபோய்ப்
பெருந்தகையருங்கலப்பெயர்கொள்குன்றின்மேற்
பரந்தனபடையொடுபாடிவிட்டனன்
கருந்திரண்முகில்புரைகாளமேனியான். (கஉகூ)

அச்சுவக்கிரீவனுக்கிளையராயினோர்
கச்சையங்கருங்களியானைவல்லவர்
விச்சையர்கடற்படைபரப்பிவிண்மிசை
நச்செரியுமிழ்தருநகையர்தோன்றினர். (கங0)

இளையருட்பெரியவன்சொல்லுமெம்மிறை
யுளைவனசெய்தவருயிரைமற்றவர்
கிளையொடுங்கீண்டரசாண்டுமன்றெனில்
வளையொடுந்தலைமுடித்திருந்துவாழ்துமே. (கஙக)

மாலுமாங்குடையர்கொன்மனிதர்நம்மொடு
போலுமாற்பொரலுறுகின்றதென்றுதன்
கோலவால்வளையெயிறிலங்கக்கூறினான்
நீலமாமணிக்கண்டனென்னுநேரிலான். (கஙஉ)

மூளைந்தவாளெயிற்றவர்முலைகள்பாய்ந்துதேன்
விளைந்ததார்வெறிகொளவைகும்வேற்றவ
ருளைந்தபோர்நிலத்தினுள்ளுருள்பவென்றனன்
வளைந்தவாளெயிற்றவன்வயிரகண்டனே. (கஙங)

ஒத்திலங்கொண்சிறையுவணன்றன்னொடு
பைத்திலங்கரவுகள்பகைப்பபோன்மெனக்
கைத்தலங்கையொடுபுடைத்துக்கனன்
றொத்திலங்கலங்கலான்சுகண்டனென்பவே. (கஙச)

தம்பியர்மொழியெனுந்தயங்குமாரியால்
வெம்பியகொடுமனங்குளிர்ந்துவெய்யவ
னம்பெயர்முனிந்தவர்நயந்தமண்மிசை
நும்பெயர்நிறுத்துமினென்றுநோக்கினான். (௧௩௫)

நஞ்சினைநஞ்சுசென்றெரிக்கலுற்றபோல்
விஞ்சையர்வெஞ்சினம்பெருக்கிமேல்வர
வஞ்சமின்மணியொளிவண்ணன்றானையு
மெஞ்சலின்றெழுந்தெதிரூன்றியேற்றதே. (௧௩௬)

விண்ணினதளவுமேல்வந்தவேற்படை
மண்ணினதளவுமாறேற்றவாட்படை
கண்ணியகடற்படையிரண்டுதம்மையு
மெண்ணினிநமக்கெளிதாவதில்லையே. (௧௩௭)

கடலிரண்டுளவெனிற்கடுக்குமக்கட
லிடைநிலமுடைமையினென்றுமொப்பில
வடலரும்படையவையிரண்டுமெவ்வழி
யடலரும்படையவையிரண்டுமொக்குமே. (௧௩௮)

திண்டிறற்றேரகளேசெறிந்தவென்னவுங்
கொண்டபோரவேழமேகுழீயவென்னவும்
விண்டவழ்புரவியேமிடைந்தவென்னவுங்
கண்டவர்கண்டுழிக்கலந்துதோன்றுமே. (௧௩௯)

கைவலப்படையினர்கழலர்கச்சையர்
செவ்வலர்க்கணணியாசெங்கணுடைவ
ரிவ்வுலகிவர்க்கிடமில்லைமுன்னிவ
ரெவ்வுலகுடையவரென்னத்தோன்றினார். (௧௪௦)

அன்றுபோர்மலைந்ததுதானையாயிடைச்
சென்றுபோர்படுமிடந்திசைகளின்மையா
னின்றுபோராடவர்நேரொப்பார்களோ
டொன்றுபோருலகினையூழியொத்ததே. (௧௪௧)

பேரினும்பெருகியசின்னந்தன்னினுந்
தாரினுமாறுமாறெறிந்துதம்முளே
தேரினுந்தேரினுந்திளைக்கின்றார்சிலர்
காரினும்பெரிதவர்கணைபெய்மாரியே. (௧௪௨)

தாளிடைமிடைந்தனதாள்கடம்முளே
தோளிடைமிடைந்தனதோள்கடோளிடை
வாளிடைமிடைந்தனவாள்கண்மற்றிவை
நாளிடைப்படுங்கொலோநாங்கள்சொல்லினே. (௧௪௩)

குடைநிலமறைப்பவுங்கொடிகளோப்பவு
மிடைநிலமிருண்மெழுக்கிட்டதாயிடைப்
படைநிலவிலங்கவும்பணிகண்மின்னவு
மிடைநிலமிடையிடையிலங்கித்தோன்றுமே (௧௪௪)

கருப்புடைக்கைகளாற்புடைத்துக்கண்களு
ணெருப்பொடுநெருப்பெதிரெறிப்பயானைகண்
மருப்பொடுமருப்பிடைமிடைந்துமான்றரோ
பொருப்பொடுபொருப்பவைபொருவபோன்றவே. (௧௪௫)

கறங்கெனக்காலசக்கரங்கடாமென
மறங்கிளர்மன்னர்தம்மகுடநெற்றியு
முறங்கலில்கடாக்களிற்றுச்சிமேலுமாய்த்
திறங்கிளர்புரவிகடிரிதர்கின்றவே. (௧௪௬)

செம்பியல்கிடுகினசெம்பொற்றட்டின
வம்புபெய்தூணியவரவத்தேர்க்குழாம்
வெம்பியகணைமழைவிரவிவில்லொடு
வம்புபெய்மழைமுகில்பொருவபோன்றவே. (௧௪௭)

இன்னவின்னுழியின்னசெய்பவென்
றென்னவரறிவுமங்கிடைபுகாவகை
மின்னவிரெஃகினுமிடைந்தவர்களினு
மன்னவர்செருத்தொழின்மயங்கிவிட்டவே. (௧௪௮)

வேறு.

அச்சமுடையாரகல்கவாற்றுபவரேற்க
வெச்சமில்குடித்தலைவர்போகவெனவெங்கும்
கச்சையர்கருங்கழலர்காலனையுநேரா
ரெச்செனவிழித்துவிறல்வீரர்திரிகின்றார். (௧௪௯)

ஏற்றவரிமைப்பினுமிகழ்ந்தெறிதல்செய்யார்
தோற்றவர்புறக்கிடைதொலைந்தவரைநோக்கார்
வேற்றவரைவீரநெறிகாண்மினிதுவென்று
தேற்றுவனர்போலவுணர்சென்றுதிரிகின்றார். (௧௫0)

தாருடையமார்பினிடைசார்கணைகுளிப்ப
வேரொடுபறித்தனரெழுத்துவரிநோக்கிப்
பேரொடுறுபீடுடையனாரெனவினாவி
நேர்படுதுமென்றுசிலர்நேடுபுதிரிந்தார். (௧௫௧)

கேடகமிடத்ததுவலக்கைகிளரொள்வா
ளாடகமடுத்தவணிபூணனலர்தாரான்
றோடகமடுத்ததுதைகண்ணியொடுதுன்னா
ரூடகமடுத்தொருவனுந்திநனிவந்தான். (௧௫௨)

வெறிமின்விரிகின்றவிறலாழியிறைதோழ
னறிமின்பெயர்யானவ்வரிசேனனெனநின்றே
னெறிமினெதிரென்னொடிகல்வல்லிருளராயின்
மறிமினதுவன்றியுயிர்வாழலுறினென்றான். (௧௫௩)

அங்கவன்மொழிந்தமொழிகேட்டலுமருக்கன்
வெங்கணைதெரிந்ததுவிலக்கிவிறல்வெய்யோ
யிங்கிவனினக்குநிகரோவெனவிசைத்தே
பொங்குபுலித்தேர்ப்பெயரன்போந்துபொரலுற்றான். (௧௫௪)

பொன்னையணிகொண்டபுனைகேடகமெடுத்து
மின்னையுமிழ்கின்றசுடர்வாண்மிளிரவீசி
நின்னையறியாதவர்களின்றிரியவந்தா
யென்னையறியாயறியினித்தவிர்தியென்றான். (௧௫௫)

மாவின்மேல்வளரமாதவிவைத்த
தாவிலாததமைசார்வனநோக்கிக்
காவுகாமர்களிகண்டதுகையாற்
கூவுமோடியவைகொள்குவமென்றான். (௨௫)

கூடிவண்டுகுடையுங்குளிர்காவி
னோடிமண்டிவருவானொருபாலாற்
சேடுகொண்டகனிசிந்தினகண்டு
மூடுகொண்டமதியான்முனிவுற்றான். (௨௬)

ஏவலின்றியெரிவெங்கதிரோனும்
போவலென்றுநினையாப்புனைகோயி
லோவலின்றியுடையாய்சிறிதேனுங்
காவலின்றுகடிகாவிதுவென்றான். (௨௭)

பொன்னினாயபுரிசைத்தளமேனு
மன்னுவாளர்மறவோர்பலர்காப்ப
ரென்னைகாவலிஃதில்வகையென்றான்
மின்னுவார்ந்துமிளிருஞ்சுடர்வேலோன். (௨அ)

அருமுகத்தகனியாயினவெல்லா
மொருமுகத்தனகளன்றியுதிர்த்துத்
தருமுகத்தர்வருவார்தறுகண்ணார்
கருமுகத்தருளர்காவல்களென்றான். (௨௯)

யாவர்யாவரவரெங்குளரென்னக்
காவுமேவுமுசுவின்கலைகாட்ட
வாவர்கள்வரதனாலெழுநாம்போய்த்
தேவிகாவுநனிசேர்குவமென்றான். (௩௦)

கள்வர்தாம்பலரெனக்கடல்வண்ண
னுள்விராவுநகைசேருரைகேட்டே
வெள்கிவேந்தனருகேயிருபாலும்
பள்கிநோக்குபுபயிர்த்துநடந்தான். (௩௧)

வேறு.

தாழ்தளிர்பொதுளியதமாலவீதியை
யேழைகண்டிருளென்வெருளயாவதுஞ்
சூழிருளன்றிதுசோலைகாணென
வீழிணர்க்கண்ணியான்வெருவுநீக்கினன். (௩௨)

வாலிதழ்வீழ்தருமகிழ்தன்றண்முதல்
சாலிகைபுக்கதுதயங்குதாரினாய்
சோலையுமமர்த்தொழிற்றொடங்குமோவென
வேலைநீர்வண்ணனைவெருண்டுநோக்கினன். (௩௩)

அஞ்சலிங்கமர்த்தொழிலில்லையாவது
மஞ்சிவர்மகிழந்தன்வயவுநோய்கெடூஉப்
பஞ்சிவரல்குலார்பவழவாயினா
லஞ்சுவைநறவமீங்குமிழலானதே. (௩௪)

ஆங்கதனுவியாலரவத்தேனெழா
வீங்கிதன்றண்முதலிருளமொய்த்தன
வோங்கியகேள்வியாயுணர்ந்துகொள்கென
வீங்கியகழலவன்விளங்கச்சொல்லினன். (௩௫)

முள்ளரைமுருக்கினோடெழுந்தமல்லிகை
வள்ளிதழ்குருதியின்வடிவிலாழ்த்தன
கள்ளவிழ்கண்ணியாயிரியுநாளெனத்
தெள்ளிதினதனையுந்தெளியச்செப்பினன். (௩௬)

கடிமிசைவிரிதருங்காமர்கொம்பரின்
முடிமிசையெழுதருமுறிகொளீர்ந்தளி
ரடிமிசையின்றதிவ்வசோகமென்கொலோ
கொடிமிசையெழுதியகுவவுத்தோளினாய். (௩௭)

இலைத்தலையீர்ந்தளிரல்லவீங்கிதன்
மலைத்தகுவயவுநோய்தீரவைத்தன
கலைத்தலைமகளிர்தங்காமர்சீறடி
யலத்தகச்சுடரெனவறியக்காட்டினன். (௩௮)

காவியால்விலங்கியகருங்கண்வெம்முலைத்
தேவியார்சிறடிசென்னிசேர்த்தலு
மேவியாங்கலர்ந்திடுகின்னைவென்றதா
லாவியாரசோகினதமைதிவண்ணமே. (௩௯)

மாதவன்மொழிதலுமன்னனாங்கொரு
போதினுற்புடைத்தனன்புடைத்தலோடுமிங்
கேதிலாளொருத்திக்காவென்னைச்செய்தவித்
தீதெலாந்தேவிக்குத்தெரியச்செப்புவேன். (௪௦)

என்றலுமெரிமணிக்கடகக்கையினு
லன்றவன்கைத்தலம்பிடித்தங்கியாவது
மின்றிறலினிச்செய்தலில்லெனச்சொலிச்
சென்றொருமணிச்சிலாவட்டமேறினன். (௪௧)

சொரிகதிர்மணிச்சிலாவட்டஞ்சூழ்ந்தன
னொருகுகின்றந்தணனமர்ந்துநோக்கியே
வெருவியமனத்தினன்விதலைமேனியன்
பெருகியதலையினன்பெயர்ந்துபின்றினன். (௪௨)

யாதுகண்டனையெனவிதனுள்வாழ்வதோர்
பூதமுண்டதுபுடைத்துண்ணுமாதலா
லேதமுண்டிங்கினியிருப்பின்வல்லையே
போதவென்றந்தணன்புலம்பிக்கூறினன். (௪௩)

யாததனுருவெனவெரிபொன்றோலையுஞ்
சோதிசூழ்சுடர்மணிக்குழையுந்துன்னிய
காதொடுகெண்பிறழ்ந்துளதுகைகுறி
தூதியவயிற்றதென்றுருவமோதினன். (௪௪)

மின்னிழற்பூணவன்மெல்லநக்கது
நின்னிழற்காணெனநிற்கநின்னுரை
யென்னிழலென்னெடுமியங்கினல்லது
கன்னிழலுள்புகிற்காண்டலாகுமே. (௪௫)

நின்னிழலாவதுதெளியநின்றொழி
லின்னிழற்காணெனவிறைஞ்சிநோக்குபு
தன்னிழறான்செய்வசெய்யத்தான்றெளிந்
தின்னிழலிருந்தனனிலங்குநூலினான். (சசு)

திருந்தியமணிநகைத்தேவியிவ்வழி
வருந்துணைப்பொழுதுமிம்மணிச்சிலாதலம்
பொருந்தினபொழினலங்காண்டுமென்றரோ
விருந்தினரிருவருமினிதினென்பவே. (சஎ)

வேறு.

மின்னவிர்விளங்குமணிமேகலைசிலம்பொலிபெயர்ந்துபுடைசாற்றக்
பொன்னவிர்சிலம்பொலிபெயர்ந்துபுடைசாற்றக்
கன்னியர்நிரந்துபலர்காவலொடுசூழ
வன்னமெனவந்தரசியார்பொழிலடைந்தார். (சஅ)

மாலையமர்சிந்தையொடுவார்பொழின்மருங்கின்
வேலையமர்கண்ணிவிளையாடுதல்விரும்பி
மேலையமர்விஞ்சையின்மறைந்துவிரைநாறுஞ்
சோலையமர்தோகையெனவேதொழுதுநின்றாள். (சகூ)

மாதவன்மருட்டமழைவண்ணன்மணிவட்டஞ்
சோதிவிடுசூழ்சுடர்வளாவவதன்மேலாற்
றூதுபடுபோதுதவிசாமெனவடுத்த
மீதுபடுபொங்கணையின்மெல்லெனவிருந்தான். (ருo)

பந்தணையுமெல்விரலிபாடகமொடுக்கி
வந்தணையுமெல்லையுண்மயங்கியொருமாற்ற
மந்தணன்வினவுவகமீதுநினைவானைக்
கந்தணைவிலாதகளியானைபலவல்லாய். (ருக)

நிலத்தவள்கொலன்றிநெடுமால்வரையுளாள்கொ
லலத்தகவடிச்சுவடசோகின்மிசைவைத்தா
ளலத்தகையதோளணிகொண்மார்பவுரையென்ன
வலத்தகையனாயமணிவண்ணன்மொழிகின்றான். (ருஉ)

செய்யனசெறிந்தனதிரண்டவிரல்சால
வையதசையார்ந்தவடியின்னழகினுலே
மெய்யுமறிவன்வினவில்விஞ்சையன்மடந்தை
வையமுடையாற்குரியமாதரவளென்றான். (ரு௩)

என்றலுமிரண்டுகெருநீலமலர்கண்ணுஞ்
சென்றுகடைசேர்ந்துசிறுவாணுதல்வியர்த்தே
யன்றரசனுவியுருகும்படியனன்று
மின்றவழுமேனியொடுதேவிவெளிநின்றாள். (ருச)

தாதிவர்கருங்குழலிதன்னைமுகநோக்கி
மாதவனடுங்கிவளர்பூம்பொழின்மறைந்தான்
காதலனுமங்குரியகட்டுரைமறந்திட்
டேதமினியென்கொல்விளைகின்றதெனநின்றான். (ருரு)

மன்னன்மகளேமகரவார்குழன்மடந்தா
யன்னமனையாயமிர்தின்மேலுமமிர்தொப்பா
யென்னையிவணுற்றதெனவென்னுமிலையென்று
முன்னுபுருவக்கொடிமுரிந்துமுனிவுற்றாள். (ருசா)

செய்யனசெறிந்தனதிரண்டவிரல்சால
வையதசையார்ந்தவடியின்னழகினுலே
மெய்யுமறிவன்வினவில்விஞ்சையன்மடந்தை
வையமுடையாற்குரியமாதரவள்கண்டாய். (ருஎ)

ஆங்கவளொடங்குவிளையாடுகெனிநீயான்
பூங்கமழுமாடமெனதேபுகுவனென்று
டாங்கலனெழுந்துதகைநீலமணிவண்ண
னோங்குமுடிசீறடியின்மேலொளிரவைத்தான். (ருஅ)

மற்றநெடுமான்மகரமாமுடிவணங்கக்
கற்றனைதவப்பெரிதுகைதவமுமென்ன
வுற்றதொர்பிழைப்புடையனுய்விடினுணர்ந்து
முற்றமுறைசெய்தருளுமொய்குழலியென்றான். (ருகூ)

மன்னனொழிபிழைபடுமிலன்மாதவனைநாடி
யின்னினியிவண்கொணராயெனவைழையோாகனை
முன்னவன்மன்றநதமுருகாாபொழிலினுள்ளே
துன்னுபுதொடாநதுதுகிலபற்றுபுகொணாநதா (௬௦)

பேன்தமைகலநதுபிறழ்கணாணிஞெடிபங்கு
மாதவனைநோக்கிமணிவாய்முறுவலுன்றிக
கோதைகளிலயாத்திவனைநீகொணாமினெனறுஉ
போதுவிரிதேங்குழலிபூமபொழிலணைநதாள் (௬௧)

மன்னவன்மருட்டமணியாழ்மழலைமாதா
முன்னியமுகத்துமுறுவற்கதிர்முகிழ்ப்ப
வினனவருள்பெற்றனனினிப்பெரிதுமென்று
வன்னமனையாளையணிமார்பினிலணைத்தான (௬௨)

போதிவாலங்கலொடுபூணமுலைஞெமுங்கக
காதலன்முயங்குபுகலந்தினிதிருந்து
மாதவனுமேதமிலனுதலின்மடநதாய்
தீதுபடுசிற்றமொழியென்றுதெளிவித்தான. (௬௩)

இட்டதளைதம்மொடிருதோளுமிடைவீக்கிக்
கட்டிவிடுபூமபிணையல்கைவிடலுமெய்யு
ளொட்டிவிடுகாதலொடுவநதுருவுகொண்டு
பட்டபலபாடலினொடாடல்பலசெய்தான். (௬௪)

வேறு.

ஓடுமேமனமோடுமே, கூடுமேதணிகோதையாய்
காடுசோகனிகண்டொறு, மோடுமேமனமோடுமே. (௬௫)

ஊறுமேயெயிறூறுமே, வீறுசேர்விரிகோதையாய்
சேறுசேர்கனிகாண்டொறு, மூறுமேயெயிறூறுமே. (௬௬)

வேணடுமேமனம்வேண்டுமே, பூண்டபொன்னணிமார்பினாய், நீண்டமாங்கனிநேர்தொறும், வேண்டுமேமனம்வேண்டுமே. (௬௭)

வேறு.

இன்னனபாடியாடவீர்ங்கனிபலவுங்கூவி
முன்னவனரவூட்டிமுறுவலோடமர்ந்தபின்னை
மன்னியபாரிசாதமணமகனாகநாட்டிக்
கன்னியங்காமவல்லிகடிவினைதொடங்கலுற்றார். (௬௮)

திருமணிநிழற்றுஞ்செம்பொற்றிலதமாமுடியினானுங்
குருமணிக்கொம்பரன்னகொழுங்கயனெடுங்கணாளும்
பருமணிபதித்தபைம்பொன்வேதிகைப்பாரிசாத
மருமணியரும்பித்தாழ்ந்தவந்தளிர்ப்பொதும்பர்சார்ந்தார். ( )

வரிவளைவயிரொடேங்கவாரணிமுரசமார்ப்பக்
கருவளர்கனபொற்சோலைக்கறங்கிசைபரந்தபோழ்திற்
றிருவளரலங்கன்மார்பிற்செங்கணான்றேவிமார்க
ளொருவளர்கொம்பரன்னாளருளறிந்துழையரானார். (௭0)

செங்கயலுருவவாட்கட்டேவிதன்குறிப்பிற்சேர்ந்த
மங்கையர்வனப்புநோக்கிமணிவண்ணன்மகிழ்ந்துமற்றப்
பொங்கியவிளமென்கொங்கைமகளிர்தம்புருவவில்லா
லங்கயனெடுங்கணென்னும்பகழியாலழுத்தப்பட்டான். (௭௧)

குடங்கையினகன்றுநீண்டுகுவளையின்பிணையல்செற்று
மடங்களிமதர்வைச்செங்கண்மான்பிணைமருட்டிமையாற்
படங்கலந்திருள்பட்டுள்ளாற்செவ்வரிபொதிந்தவாட்க
ணிடங்கழிமகளிர்சூழவிந்திரனிருந்ததொத்தான். (௭௨)

ஆங்கவரோடுமெற்றவணிபொழிற்கரசனாய
பாங்கமைபாரிசாதம்பருவஞ்செய்பொலிவுநோக்கி
யீங்கிவற்கிசைந்தகோலமினிதினியற்றுகென்றா
னோங்கியவுருவத்தார்மேலொளிநிலாவுமிழும்பூணான். (௭௩)

எந்திரமிழிந்ததாரையருவிநீரினிதினாட்டிக்
கந்தெனத்திரண்டதிண்டோட்கனகசாலங்கள்காட்டிப்
பைந்தழைப்பொழிலுக்கெல்லாமரசெனப்பட்டஞ்சேர்த்தி
யந்தளிர்க்கொம்பர்தோறுமணிபலவணிந்தாரன்றே. (௭௪)

கன்னியங்காமவல்லிக்கனங்குழைமடந்தைதன்னை
மன்னவன்றேவிமார்கண் மணவினைக்கோலஞ்செய்து
பின்னதனோடுசேர்த்திப்பெருகியகளியரானா
ரின்னகைப்புதல்வர்செல்வம்யாவரேயினிதென்றார். ()

மாதரார்மனத்தினுள்ளுமணிவண்ணனினைப்பினுள்ளுங்
காதலுஞ்செறிந்ததாகக்காமனுமுழையனாகப்
போதலர்பருவச்சோலைப்பொழினலநுகரும்போழ்தி
னோதநீர்வண்ணனங்கோருபாயத்தாலொளிக்கலுற்றான். ()

பொன்னவிர்குழையினாரைப்பொழில்விளையாடலேவி
மன்னவன்மதலைமாடவளநகரணுகுவான்போற்
றன்னைமெய்மறைத்தோர்விஞ்சைதாழிருளெழினியாகப்
பின்னைமாதவனுந்தானும்பிணையனாருழையனானான். (எஎ)

மன்னவன்மறைந்ததெண்ணிமாபெருந்தேவிமற்றப்
பொன்னவிர்கொடியன்னாரைப்பொழில்விளையாடலேவக்
கன்னியங்கோலஞ்செய்துகதிர்மணிக்கலங்கடாங்கி
யின்னகைமழலைதோற்றியிளையவரினையரானார். (எஅ)

அம்பொன்செய் கலாபவல்கு லந்தழை புனைந்தவஞ்சிக்,
கொம்பஞ்சுமருங்குனோவக்குவிமுலைமுறிகொண்டப்பிச்,செ
ம்பொன்செய்சுருளைமின்னச்செவிமிசைத்தளிர்கள் சேர்த்தி
க்,கம்பஞ்செய்களிற்றினான்றன்கண்களைக்களிப்பித்திட்டார்.

விரவம்பூந்தளிரும்போதுமிடைந்தனமிலைச்சுவாரு
மரவம்பூஞ்சிலம்புசெய்யவந்தளிர்முறிகொய்வாரு
மரவம்பூங்கவரியேந்திமணிவண்டுமருங்குசேர்த்திக்
குரவம்பூம்பாவைகொண்டுகுழவிபோலுறுத்துவாரும். (அ௦)

பாவையும்விலங்குசாதிப்படிமமும்பறப்பைதாமுங்
கோவையுமுகத்துமாக்கிக்குலவியவிதழதாக
வேவியர்புனைந்தபோலுமொளிமலர்ப்பிணையன்மாலை
தேவியர்மருளச்செய்துசிகழிகைசேர்த்துவாரும். (அக)

அருமலர்த்தழையும்போதுமடியுறையாகவேந்தித்
திருமலர்ப்பாவையன்னதேவியைச்செவ்விகாண்பா
ருருமலரிழைத்தபார்வையொளிமணிநயந்துமாதோ
குருமலர்க்கொம்பினெல்கிக்குரவையின்மயங்குவாரும். ()

சிகரமாயிலங்குசென்னித்தென்மலைச்சாந்துமூழ்கிப்
பகருமாமணிவண்டோவாப்பணைமுலைப்பாரந்தாங்கித்
தகரவார்குழல்பின்றாழத்தாழ்குழைதிருவில்வீச
மகரயாழெழூவிமன்னன்வண்புகழ்பாடுவாரும். (அரு)

வட்டிகைப்பலகைதன்மேன்மணிவண்ணன்வடிவுதீட்டி
யொட்டியவடிவிற்றம்மையூடலோடிருப்பக்கீறித்
திட்டமிட்டுருவநுண்ணூற்றுகிலிகைதெளிர்ப்பவாங்கிப்
பட்டமுங்குழையுந்தோடும்பையவேகனிவிப்பாரும். (அச)

மாம்பொழின்மருங்குசூழ்ந்தமணிச்சிலாதலத்துமேலாற்
காம்பழிபணைமென்றோண்மேற்கருங்குழறுவண்டுவீழப் [த்
பூம்பொழில்விளங்கத்தோன்றும்பொன்னிதழ்மறிந்துநோக்கி
தேம்பொழிசெய்யுளின்பஞ்செவிமுதற்சேர்த்துவாரும். ()

கோதையுங்குழைவின்பட்டின்கொய்சகத்தலையுந்தாழ
மாதர்வண்டொருங்குபேரமழையிடைநுடங்குமின்பேரற்
போதலர்பொதும்பிற்றாழ்ந்தபொன்னெழிலூசறன்மே
லோதநீர்வண்ணற்பாடி * நாழிலூழியங்குவாரும். (அசு)

கள்ளுமிழ்ந்துயிர்க்குஞ்சோலைக்கனமடற்குமரிவாழை
யுள்ளெழுசுருளைவாங்கியொளியுகிர்நுதியினூன்றிப்
புள்ளெழுதடம்போர்மான்றொழுதியுமிதுனமாய
வொள்ளெழிலுருவுங்கிள்ளியுழையவர்க்கருளுவாரும். (அஎ)

மயிலுடையாடல்கண்டுமகிழ்ந்துமெய்மயங்கிநிற்பார்
குயிலொடுமாறுகொள்வார்குழைமுகஞ்சுடரக்கோட்டிக்
கயிலொடுகுழல்பின்றாழக்கண்டுநீர்கொண்மினென்றுங்
கயிலிடைப்பகழிவாட்கணங்கையின்மறைத்துநிற்பார். (அஅ)

* ஊழிநாழியங்குவாருமெனவும் பாடம்.

செழுமலர்த்தாதுகொய்துமெல்விரல்சிவந்தவென்பார்
விழுமலர்த்துகள்வந்தூன்றமெல்லடிமெலிந்தவென்பார்
கொழுமலர்ப்பிணையருங்கிக்கொடியிடையொசிந்தவென்பா
ரெழுமலர்த்தனையதோளான்றேவியரினையரானார். (அகூ)

வேறு.

கொடிமருங்குருமேகொடியாய்நுடங்க
வடிநெடுங்கண்ணேக்கமணிவண்டாயோட
வடிமலருங்கைத்தலமுமந்தளிராய்த்தோன்றக்
கடிநறும்பூஞ்சோலையைக்காரிகையார்வென்றூ. (கூ0)

மணங்கமழும்பூமேனிவாசங்கமழ
வணங்கிவருஞ்சோலையலர்நாற்றமெய்திக்
கணங்குழையீர்யாமுமக்குக்கைமாறிலேமென்
றிணங்கிணரும்போதுமெதிரேந்தித்தாழ்ந்த. (கூக)

அந்தாரசோகமசோகமவர்க்கீந்த
செந்தார்த்திலகந்திலகமாய்ச்சேர்ந்தன
வந்தார்க்குமாவாதுமென்பனபோன்மாதழைந்த
கொந்தார்பூஞ்சோலைக்குலகறிவோகூடின்றே. (கூஉ)

வெள்ளித்திரண்மேற்பசும்பொன்மடற்பொதிந்
தள்ளூறுதேங்கனியதாம்பொற்றிரளைசைந்து
புள்ளூறுபொன்வாழைக்கானம்புடையணிந்த
தெள்ளுமணியருவிச்செய்குன்றஞ்சேர்ந்தார். (கூ௩)

கஞ்சுகிமாந்தருங்காவல்முதியாரு
மஞ்சிவர்சாரன்மணியறையும்வார்பொதும்புந்
துஞ்சுமழைதவழுஞ்சோலைகளுஞ்சோதித்துச்
செஞ்சொலவர்போய்த்திசைகாவல்கொண்டாரே. (கூச)

தோகைமட்மஞ்ஞைசோலைப்பரப்பனபோன்
மாகமழைவண்ணன்காதன்மடந்தையர்க
ளாகமணிசூழ்சாரறையுவிரும்பொழில்வாய்ப்
போகமணிவகலைபுலம்பப்புக்கார். (கூ௫)

அரையிலங்குமேகலையார்ப்பினயல
வரையிலங்குமேகலைமாறேநின்றார்க்கும்
புரையிலங்குபொற்சிலம்புதான்சிலம்பும்போழ்தி
னிரையிலங்குபொற்சிலம்புநேரேசிலம்பும். (கூ௬)

கொங்குண்குழலார்குழலேர்மணிமழலை
தங்கினவைகொண்டுதானுமெதிர்மிழற்று
மங்கணவர்செய்வசெய்தசதியாடின்றே
செங்கணெடியான்கடிகாவிற்செய்குன்றே. (கூ௭)

மருவிமழைதவழுமையோங்குசார
லருவிகொழித்தவருமணிகள்வாரித்
தெருவுபடத்திருத்திச்சீலம்புனைவா
ருருவநகரிழைப்பாரொண்ணுதலாரானார். (கூ௮)

மரகதவீர்ங்கதிரைவார்புற்றளிரென்
றுரைதருகாரிகையாரூன்றிமிதித்துத்
திரைதவழச்சீறடிகளேவநடந்து
விரைதருபூம்படைமேன்மெல்லவசைந்தார். (கூ௯)

வெம்பரியதண்சாரல்வேரூரியக்கொழுந்து
தம்பருவச்சோலைதழைத்ததகைநோக்கி
யெம்பெருமான்போலுமெழிலவிவையென்று
வம்புருவந்தோன்றமணியருவியாடுவார்.. (க௦௦)

செங்களிதோய்ந்துள்சிவந்தசீறடியார்வாண்முகத்தின்
றங்கொளிபாய்ந்துள்ளெறித்ததண்காந்தமாமணி
திங்களொளிகருதித்தெண்ணீர்த்துளிசிதற
மங்குன்மழையயிர்த்துவார்பொழிலின்வாய்மறைவார். (க௦க)

வம்பத்திரளுருவின்மாணிக்கச்செங்கதிரை
யம்பொற்சிலம்பினசோகந்தளிரென்று
தம்பொற்சுடராழிமெல்விரலாற்றைவந்து
கொம்பிற்குழைந்துகுறுமுறுவல்கொண்டகல்வார். (க௦உ)

விண்டுசுடர்தயங்குமேதகுமாமாணிக்கங்
கண்டுகவின்விரிந்தகாயநர்துணரிவை
கொண்டுகுழற்கணிதுமென்றுகொளலுறுவார்
வண்டுவெழிபடரவாட்கண்புதைத்தியல்வார். (௧0௨)

வேயோங்குசாரல்விளைபுனங்காவல்கொண்
டாயோவெனமொழியுமம்மழலையின்னிசையாற்
போயோங்குபூஞ்சோலைவாழும்புனக்கிளிகண்
மாயோன்மடந்தைமார்கூவிமகிழ்விப்பார். (௧0௪)

பூந்தளிர்தாழ்ந்தபொழிறயங்குபொன்வரைவா
யீர்ந்தளிர்மேனியாரிவ்வாறினிதியலக்
காந்தளங்குன்றின்கனபொன்மணியறைமே
லேந்திளங்கொங்கைமகளிர்சிலரியைந்தார். (௧0௫)

பைம்பொனறைமேற்பவழமுரலாக
வம்பமணிபெய்துவான்கேழ்மருப்போச்சி
யம்பொன்மலைசிலம்பவம்மனைவள்ளையுடன்
கம்பஞ்செய்யானைக்கரியவனைப்பாடினார். (௧0௬)

கோடிசிலையெடுத்தான்கோளரிமாவாய்போழ்ந்தா
ஞடியல்யானையயக்கிரீவனையடித்தான்
வீடின்மணியருவிவெண்மலையுங்கைப்பிடித்தானே
வாடலில்பூங்கண்ணிமாமேகவண்ணனே. (௧0௭)

வலம்புரிவாய்வைத்தான்வார்சிலைகைக்கொண்டான்
சலம்புரிசண்டைதலைபனிப்புக்கண்டான்
பொலம்புரிதாமரையாள்பொன்னாகந்தோய்ந்தான்
கலம்புரிவண்டடக்கைக்கார்மேகவண்ணனே. (௧0௮)

செம்பொன்செய்யாழியான்சேதாம்பனீண்முடியா
னம்பொனிதியுமருங்கலமுங்கைப்படுத்தா
னம்புமணிமேனிநங்கைநலநுகர்ந்தான்
கம்பஞ்செய்யானைக்கருமேகவண்ணனே. (௧0௯)

வேறு.

மடந்தையர்பாடவாங்குமாபெருந்தேவிசிறப்ப
வடைந்தவரோடுமோடுமோர்வழீர்வெள்ளம்வாங்க
வுடைந்தழிமனத்தன்வேந்தனுழையதோர்தெய்வங்கூவிப்
படந்தவர்முகத்துவேழமாகெனப்பணித்துவிட்டான். (கக0)

மைவரையொன்றுகோலமணிதயங்கருவிதாழ
வைவனங்கலந்தசாரலருகுவந்தணைவதேபோற்
றெய்வமோர்வேழமாகிச்செய்கடாந்திரண்டுவீழ
மைவருநெடுங்கணல்லார்நடுங்கவந்தணைந்ததன்றே. (கக௧)

கயில்கலந்திருண்டுதாழ்ந்தகருங்குழன்மருங்குசோர [சு
வெயில்கலந்திலங்குஞ்செம்பொன்மிடைமணிக்குழைவில்வீ
வயில்கலந்திலங்குவேற்கணையரிபிறழவோடி
மயில்கலந்திரிந்தபோலமடந்தையர்நடுங்கினாரே. (கக௨)

நாண்டனுனிறைந்தநங்கைநடுங்குபுநுடங்கிநோக்கி
யாண்டையாரடிகளென்னுமாயிடையஞ்சல்பொன்னே
யீண்டையேனென்னைபட்டதென்றுசென்றணுகினுனல் [ன்.
வேண்டியவிளைத்துக்கொள்ளும்விழுத்தவம் விளைத்துவந்தா

மலைமுகமதநல்யானைமுற்றதுமறித்துநங்கை
முலைமுகநெருங்கப்புல்லிமுருகுவேய்கோதைசூட்டிக்
கலைமுகந்திருத்திக்காதிற்கனபொன்செய்சுருளைநீவி
யிலைமுகங்கலந்தசெம்பொற்கலங்களையிலங்கவைத்தான். ()

மங்கையர்தம்மையெல்லா மணிவண்ணன்மருட்டிமற்றிக்
கொங்கவிழ்குளிர்கொள்சோலைக்குன்றினின்றிழிந்தபோது
வெங்கதிர்விரிந்தவெய்யோன்விசும்பிடைவெதும்பிவேவச்
செங்கதிர்க்கூடங்குத்திச்சென்னடுவாகநின்முன். (ககரு)

அணங்கனார்நுதலின்மேலிலரும்பியவாரத்தெண்ணீர்
மணங்கமழலங்கன்மார்பன்மனத்தினைவாங்கமற்றக்
கணங்குழைமடந்தைமாரைக்கடிபுனலாடல்காண்பான்
வணங்கொள்பூந்துணர்நீள்சோலைமண்டுநீர்வாவிசார்ந்தான்.

சாந்துநீர்நிறைந்தவாவிதயங்குசெங்குவளைவாவி
பூந்துகளவிழ்ந்தபொற்றாமரைமலர்புதைந்தவாவி
தேந்துணரகன்றதெண்ணீர்த்திருமணியுருவவாவி
வாய்ந்தனகாட்டிக்காட்டியுழையவர்வணங்கினின்றார். (௧௧௭)

அன்னவாறமைந்ததெண்ணீரலைபுனலாடும்போழ்தி
னின்னவாறியற்றுகென்றாங்குழையரைமறையவேவிப்
பொன்னவாஞ்சுணங்குபோர்த்தபுணர்முலைமகளிரோடு
மன்னவாம்வயிரத்தோளான்வலஞ்சுழிவாவிபுக்கான். (௧௧௮)

மலங்குபாய்தயங்குபொய்கை மணிக்கல்வாயடுத்தசெம்பொ
கலங்கினுறிழிந்துகீழேகலந்துவந்தெழுந்ததெண்ணீ [ற்
ரலங்கலான்மடந்தைமார்தனரும்புணையாகவீங்கி
வலங்குலாய்ச்சுழிந்துவாய்த்தவாவிவாய்மடுத்ததன்றே. ()

அலைபுனல்பெருகலோடுமலைகடல்வண்ணன்றன்னை
மலைபுனைகொடியிற்புல்லிமடந்தையர்மயங்குவாரு
மிலைபுனைகோதைசோரவிடுபுனைதழுவுவாருங்
கலைபுனைதுகிலுந்தோடுமொழியப்போய்க்கரைசேர்வாரும்.()

ஆர்புனல்சுழித்துவாங்கவனையராயணிபொன்வாவி
நீர்புனைதடத்தினுள்ளாணிலைகொண்டுநெடுங்கண்சேப்பத்
தார்புனைமார்பன்றன்மேற்றரங்கநீரொருங்குதூவி
வார்புனைமுலையினல்லார்மயங்கமர்தொடங்கலுற்றார்.(௧உ௧)

திரளிருஞ்சிவிறிவீக்கிச்செழுமழைத்தாரைபெய்வார்
மருளிரும்பிணையன்மாலைப்படைபலவழங்கிச்சூழ்வார்
சுருளிருந்தோடுவாங்கித்தோண்மிசைதுளங்கவீழ்ப்பா
ரிருளிருங்குழலினார்களிறைவன்மேலினையரானார். (௧உ௨)

சாந்தெழுசிவிறித்தாரைசதுர்முகமாகவீக்கிப்
பாய்ந்தனபவழச்செங்கேழங்கையாற்படுத்ததெண்ணீர்
வேய்ந்தனிவலையாகிவிழுந்தனிவேலிமாலை
நாந்தகக்கிழவன்பொய்யேசங்கைமார்க்குடைந்துநின்றான். ()

காரையசர்வண்ணன்மாலைக்காற்படையுடைந்தபோழ்திற்
றேரையாய்க்குறளுஞ்சிந்துமிதந்தனசில்லசிந்தி
வேரியார்குவளைவேய்ந்தமெல்லியலவர்க்குத்தோற்ற
வோரையாய்முதலையாகிக்கூன்படையொளித்தவன்றே. ()

வென்றனம்வீரன்றன்னைவீக்குமின்சிவிறித்தாரை
சென்றெனச்சிறந்தகாதற்றேவியர்திளைக்கும்போழ்தி
லொன்றியவுழையர்கீழ்நீரோப்பறித்திடுதலோடு
நின்றகஞ்சுழிந்ததெண்ணீர்நெரேலெனவிழிந்ததன்றே. ()

மாலையுந்துகிலும்வாரிவார்புனலொழுகும்போழ்தி
னாலையின்கரும்பினின்சொலணங்கனாரவிழத்தத்தங்
கோலமென்றுகில்கடாங்கிக்குழைமுகஞ்சுடரக்கோட்டி
வேலைநீர்வண்ணன்முன்னர்நாணினான்மெலிவுசென்றார். ()

அருமணிக்கலாபவல்குலவிழ்துகிலசைத்துமீட்டுந்
திருமணிவண்ணனோடுந்தேவியர்திளைத்துத்தெண்ணீர்ப்
புரிமணிப்பொன்செய்வாவிப்புணைபுறந்தழுவிப்புக்கார்
கருமணிவண்டுந்தேனுங்கையுறக்கலந்ததன்றே. (கஉஎ)

வே று.

கொங்கைகடுளும்பநீர்குடைந்துங்கொய்தளி
ரங்கையினோன்புணைதழுவியாடியுஞ்
செங்கயற்கண்மலர்சிவப்பமூழ்கியு
மங்கையர்புனற்றொழின்மயங்கிற்றென்பவே. (கஉஅ)

அடிக்கலத்தலத்தகங்குழுமிக்குங்குமப்
பொடிக்கலந்தந்திவான்படைத்தபூம்புனல்
வடிக்கலந்திலங்குவாணெடுங்கண்மைக்குழம்
பிடிக்கலர்திருளுமங்கியற்றப்பட்டதே. (கஉகூ)

கொங்கைவாய்க்குங்குமக்குழம்புங்கோதைவாய்
மங்கைமார்சிதர்ந்தனவாசச்சுண்ணமுஞ்
செங்கண்மாலகலத்துவிரையுந்தேர்த்தரோ
வங்கண்மாலிரும்புனலளறுபட்டதே. (கஙo)

அணங்கனுரகல்குலலேத்துமாங்கவர்
சுணங்குசூழிளமுலேத்துளும்பத்தாக்கியும்
வணங்குபூங்கொடியிடைவளேத்தும்வாவிவர்
யணங்குநீர்த்திரையவையலேப்பதொத்தவே. (௧௩௧)

வடந்தவழிளமுலேவிம்மமங்கையர்
குடைந்திடவெழுந்தநீர்குளித்ததாமரை
மடந்தையர்குளித்தெழும்போழ்தின்வாண்முக
மடைந்ததோர்பொலிவினேயறிவித்திட்டவே. (௧௩௨)

வளேத்தகையொண்பணேத்தோளிமாரொடு
திளேத்தகங்கழுமியதரங்கத்தெண்புன
விளேத்தவர்மூணிக்கரையேறச்சீறடி
திளேத்துமுன்சிறிதிடஞ்சென்றுமீண்டதே. (௧௩௩)

பொழுதுசென்ருழிகையெல்லேபூங்கழ
றெழுதுவந்திளேயவருணர்த்தத்தொண்டைவா
யெழுதியகொடியனூர்சூழவீர்ம்பொழிற்
பழுதுழையிலாப்பகற்கோயிலெய்தினன். (௧௩௪)

தேவியர்திருமணிமேனிநீர்துடைத்
தாவியம்புனேதுகிலல்குன்மேலுடீஇக்
காவியங்கண்ணினூர்காகதுண்டத்தி
னுவியாலீர்ங்குழலாவியூட்டினூர். (௧௩௫)

தண்ணிறத்தண்கழுநீரினெய்தலின்
கண்ணிறக்கருங்கடையிதழும்பெய்திடை
தண்ணறுந்தமனகக்கொழுந்துஞ்சார்த்திய
வொண்ணிறப்பிணேயலன்றுவக்கப்பட்டதே. (௧௩௬)

பொன்மலேக்காவியிற்றிமிர்ந்துபூங்கமழ்
தென்மலேச்சந்தனஞ்செறிந்துதாமரை
நன்மலர்த்தாதுமீதப்பிநங்கைமார்
மென்முலேத்தடங்களும்விருந்துபட்டவே. (௧௩௭)

கண்ணகங்குளிர்ப்பக்கல்லாரக்கற்றையுந்
தண்ணறுங்குவளை * தாமெறித்தந்தாமமு
மொண்ணிறத்தாமரையொலியலுந்தழீஇ
யெண்ணரும்பெருங்கவினிளையரெய்தினர். (கரு௮)

காமருநிறத்தகல்லாரக்கற்றைகள்
சாமரையெனத்தமரசைப்பத்தாமரை
தேமருகுடையிலேகவிப்பத்தேவியர்
பூமருமடந்தையர்போன்றுதோன்றினர். (கருக)

தேவர்கடிகைமுகங்காப்பத்தீஞ்சுவை
யாவியாரமிர்தயின்றிருந்தவாயிடைப்
பாவையர்கருங்கணுற்பருகுவார்கள்போன்
மாவரசழித்தவன்மருங்குசுற்றினர். (க௪0)

வேறு.

வஞ்சியங்கொம்பனாருமன்னனுமிருந்தபோழ்தின்
விஞ்சையனொருவன்றோன்றிவிசும்பினூறிழிந்துவந்து
மஞ்சிவர்சோலைவாயில்வாயிலோன்வாயிலாக
வஞ்சனவண்ணன்செந்தாமரையடிவணங்கினானே. (க௪க)

வந்தவன்வணங்கலோடுமோமனை நுதலியென்னை
கந்தனையானைவேந்தன்கழலடிசெவ்வியோவென்
றந்தமிலாழியாள்வான்வினவவினருளுமாறென்
றிந்திரனனையநீராற்கிறைஞ்சலுமிருக்கவென்றான். (க௪உ)

உரிமையோடிருந்தபோழ்தி னுணர்த்துதற்குரித்தென்றெண்
திருமுகந்தொழுதுகாட்டத்தேவிதன்மருங்குநின்ற [ணித்
வுரிமைகொளுமழையருள்ளாளொருத்திவாசித்துணர்த்த
வருமுடியொழியவெல்லாவணிகளுமவனுக்கீந்தான். (க௪௩)

கனிவளர்கிளவியாருங்கதிர்மணிக்கலங்கள்வாங்கிப்
பனிமதிவிசும்பின்வந்தான்பால்வரப்பணித்தபின்னை
யினியிதுபெயர்த்துநீயேயுரையெனவெடுத்துக்கொண்டு
துனிவளரிலங்குவேலான்கழலடிதொழுதுசொன்னான். ()

---

* தாமமென்பதன்விகாரம், தாமம், ஒளி.

சுடர்மலைத்திரண்டசோலைச்சுரேந்திரகாந்தமென்னும்
வடமலைநகரமாளுமன்னனவன்றேவிபெற்ற
தடமலர்ப்பெரியவாட்கட்டையன்மற்றவளையெங்கோன் [ன்.
விடமலைத்திலங்குசெவ்வேல் வெய்யவன்பெயரன்வேட்டா

என்றவன்பெயர்த்துஞ்சொல்லவின்பநீர்வெள்ளமூழ்கி
மின்றவழிலங்கும்வேலான்விஞ்சையனவனைப்போக்கிச்
சென்றுதன்கோயில்சேர்ந்தான்செங்கதிர்த்திகிரியானு
மன்றழல்சுருங்கமுந்நீர்லைகடலழுவம்பாய்ந்தான். (௧௪௬)

அழலவன்குளித்தபின்னையணங்கிவரந்தியென்னு
மழலையங்கிளவிச்செவ்வாய்மடந்தைவந்தடைந்தபோழ்திற்
குழலமர்கிளவியார்தங்கூந்தலுட்குளித்துவிம்மி
யெழிலகிலாவிபோர்ப்பவிருவிசும்பிருண்டதன்றே. (௧௪௭)

விரவினபரவைப்பன்மீன்மிடைமணிக்கலாபமாக
மருவினபரவையல்குன்மயங்கிருட்டுகிலைவாங்கிப்
புரிவணன்மதியமென்பான்பொழிகதிர்த்தடக்கைநீட்டி
யிரவெனுமடந்தைசெல்வநுகரியவெழுந்துபோந்தான். ()

ஏரணிவிசும்பினங்கேமெழுநிலாவிரிந்தபோழ்திற்
சீரணிமணிவண்டார்க்குஞ்சிகழிகைப்பவழவாயார்
காரணிவண்ணனென்னுங்கருங்களிவேழந்தன்னை
வாரணியிளமென்கொங்கைவாரியுள்வளைத்துக்கொண்டார்.

பங்கயமுகத்துநல்லார்பவழவாய்க்கவளங்கொண்டு
பொங்கியகளியதாகிமயங்கியபொருவில்வேழங்
குங்குமப்பொடிநின்றுடிக்குவட்டிளங்கொங்கையென்னுந்
தங்கொளிமணிமுத்தேந்துந் தடத்திடையிறைஞ்சிற்றன்றே.

வேய்மருளுருவத்தோளார்வெம்முலைத்தடங்களென்னும்
பூமருதடத்துட்டாழ்ந்துபொற்பொடிபுதையவாடிக்
காமருகாமமென்னுங்கருங்கயம்படிந்துசென்று
தேமருகுழலஞ்சாயற்றேவிகைப்பட்டதன்றே. (௧௫௧)

காதலா லுரிமைபாங்கிற்கடிகமழ்காமவல்லித்
தாதெலாந்தகர்ந்துசிந்தத்திளைத்தலத்தடக்கைவேழ
மாதராளமிழ்தின்சாயற்றேட்டியால்வணக்கப்பட்டுப் [றே.
போதுலாம்புணர்மென்கொங்கைக்குவட்டிடைப்பூண்டதன்

செங்கயற்கண்ணினளுஞ்செல்வனுந்திளைத்துத்தீந்தேன்
பொங்கியவமளிமேலாற்புணர்முலைநெருங்கப்புல்லித்
தங்கியபொழுதிற்றாழ்ந்துதண்கதிர்மதியந்தானே
மங்கைதன்பவழச்செவ்வாய்மடுத்தகமடைந்ததன்றே. ()

அடைந்ததுமதியமாகவாயிடையரசன்றிண்டோண்
மிடைந்ததோணெகிழவிம்மிமெல்லியல்வெருவலோடு
மடங்கலையலைக்குநீரான்மருட்டினன்வினவவார
வடந்தவழிளமென்கொங்கைமாதராண்மிழற்றினளே (கருச)

வணங்கியிவ்வுலகமெல்லாமகிழ்ந்துகண்பருகுநீர்மை
யணங்கிவர்சிறுவன்வந்தனணிவயிற்றகத்துப்பட்டான்
கணங்குழையஞ்சலென்றுகருமணிவண்ணன்றேற்றப்
பணங்குலாம்பரவையல்குற்பாவையும்பரிவுதீர்ந்தாள். ()

கங்குல்வாய்மடந்தைகண்டகனவுமெய்யாகல்வேண்டி
மங்குல்வானகட்டுச்சென்றுமதியவன்மறைந்தபின்னை
யங்குலாயிருளைநீக்குமாயிரங்கதிரினனுங்
கொங்குலாங்குழலிகாணுங்குழவியதுருவங்கொண்டான். ()

வேறு.

குலம்புரிசிறுவனைத்தரித்துக்கோலமா
நிலம்புரிநிழலொளிநிரந்துதோன்றலால்
வலம்புரிமணிக்கருவிருந்ததன்னதோர்
நலம்புரிதிருவினணங்கையாயினள். (கருஎ)

மின்னிலங்கவிரொளிமேனிமெல்லவே
தொன்னலம்பெயர்ந்துபொன்சுடர்ந்துதோன்றலான்
மன்னிலங்கருமணிவளரவாளுமிழ்
பொன்னிலம்புரைவதோர்பொலிவுமெய்தினள். (கருஅ)

கோணலம்பொழிந்துவிண்குளிரக்குங்குமத்
தோணலம்பொலிந்ததோட்தோன்றலோடுதன்
கேணலம்பெர்லிதரக்கிளருஞ்சோதிய
நாணலம்பொலிதரநம்பிதோன்றினன். (கருகூ)

பொலிகெனும்பொலிகளும்பொன்செய்மாமணி
யொலிகலவொலிகளும்விரவியூழிநீர்
கலிகெழுகனைகடல்கலங்கியன்னதோர
பலிகெழுமுரசொலிபரநதொலித்ததே. (கசுO)

துளைபடுகுழலிசைதுடியொடார்ப்பவும
வளைபடுகறங்கிசைவயிரோடேங்கவுந்
தளைபடுதகைமலர்மாலைதாதுகக்
கிளைபடுவளநகர்கிலுகிலுத்ததே. (கசுக)

தொத்திளங்கடிமலர்துதைந்தகோதையா
மொய்த்திளங்குமரரோடாடுமுன்கடை
மத்தளப்பாணியுமதனகீதமுங்
கைத்தலத்தாளமுங்கலநதிசைத்தவே. (கசுஉ)

சிறைநகர்சித்தனதிலதமுக்குடை
யிறைநகர்விழவணியியன்றநீணடுநீரத்
துறைநகர்சுண்ணநெய்நாவிதூங்கின
நிறைநகரவர்தொழினிணைப்பிகந்தவே. (கசுந)

சுண்ணநெய்யெழுபகலாடித்தொன்னகர்
நண்ணியநானநீராடிநம்பியைப்
புண்ணியாவாசனஞ்செய்துபுங்கவன்
றிண்ணியவடிமலர்ச்சேடஞ்சேர்த்தினா. (கசுச)

வழுவலினுஞ்சிலான்வண்பொனுழியான்
றழுமலரலங்கலான்றுதைதானெனச்
செழுமலரணிகுழற்றேவிமாரென
வெழுபெருங்கிளைகளுமினிதினீண்டினர். (கசுரு)

எழுதருபரிதியங்குழவியேய்ப்பதோர்
தொழுதகைவடிவொடுநம்பிதோன்றலுந்
தழுவினர்முயங்கினர்முயங்கித்தம்முளே
யொழிவிலவுவகைநீர்க்கடலுண்மூழ்கினார். (கசுசு)

அறத்தகையந்தணர்குழுவுமாடல்வேன்
மறத்தகைமன்னர்தங்குழுவுமாநகர்த்
திறத்தகுமுதியருமீண்டிச்செல்வனைப்
பொறுத்தனர்பொலிவுரைபுடைபொழிந்ததே. (கசுஎ)

குருமணிக்கோவையுங்குளிர்பொற்குன்றமு
மருமணிக்கலங்களுமரத்தவாடையும்
புரிமணிவளநகர்புகுந்துகொள்கெனக்
கருமணியொளியவன்கவரக்காட்டினான். (கசுஅ)

திருவொடுதிசைமுகந்தெளிர்ப்பத்தோன்றினான்
றிருவொடுவென்றியிற்சேருமாதலாற்
றிருவொடுதிகழ்தரவிசயனென்றரோ
திருவுடைமார்பனைநாமஞ்சேர்த்தினார். (கசுகூ)

விஞ்சையருலகிற்கும்விடுத்துமோகையென்
றஞ்சனவண்ணனங்கருளுமாயிடை
மஞ்சுடைவிசும்பினின்றிழிந்துவந்தது
செஞ்சுடருமிழ்வதோர்செம்பொன்மாடமே. (கஎ0)

மணிநகுவிமானமொன்றிழிந்துவந்துநம்
மணிநகராளுகினதடிகளென்றலும்
பணிவரைக்கொணர்மினீர்பாங்கினென்றனன்
றுணிநகுசுடரொளிதுளும்பும்வேலினான். (கஎக)

மஞ்சுசூழ்மழைநுழைமாடந்தன்னுளோர்
விஞ்சையர்மடந்தையர்விளங்குமேனியர்
கஞ்சுகியவரொடுமிழிந்துகாவல
னிஞ்சிசூழ்நகரணியிருக்கையெய்தினார். (கஎஉ)

பொலிகெனப்புரவலன்பொன்செய்நீண்முடி
மலிதருநறுநெய்மகளிர்பெய்தலுங்
கலிதருகனைகடலன்னகாதலோ
டொலிதருநகையொலியுவந்தெழுந்ததே. (கஎங)

நாவிகாறழுவிமன்னறுநெய்யாடிய
பாவைமார்தங்களைப்பாவைகோயிலுக்
கேவியாங்கிருந்தபினிறைவற்கின்னணந்
தேவிகோன்றமன்றொழுதொருவன்செப்பினான். (கஎச)

எங்கள்கோனெறிகதிர்ப்பெயரனீர்மலர்க்
கொங்குசேரலங்கலான்குளிரத்தங்கினண்
மங்குறோய்மணிவரைமன்னன்றன்மக
டொங்கல்சூழ்சுரிகுழற்சோதிமாலையே. (கஎரு)

மங்குல்வான்மழைகெழுமின்னின்மன்னவன்
றொங்கல்வாய்மடந்தைகண்டுயிலுமாயிடைக்
கங்குல்வாய்க்கதிர்மதிகவானின்மேலிருந்
தங்கண்மால்விசும்பகமலர்வித்திட்டதே. (கஎசா)

தெண்கதிர்த்திருமணிகனவிற்சேர்ந்தபின்
கண்கதிர்த்திளமுலைகால்பணிந்தன
தண்கதிர்த்தமனியப்பாவைபோல்வரோ
டொண்கதிர்த்திருமகளுருவமெய்தினள். (கஎஎ)

வானிவர்மணிநகைவிமானமேறவுங்
கானிவர்கற்பகச்சோலைகாணவு
மானிவர்நோக்கினள்வயாவினுளது
தேனிவரலங்கலாய்தீர்க்கப்பட்டதே. (கஎஅ)

மாணிக்கமரும்பியவண்பொன்மாநிலத்
தாணிப்பொன்னனையவளனையளாயபின்
கோணிற்கும்விசும்பிடைக்குழவித்திங்களு
நாணிப்போமுருவொடுநம்பிதோன்றினன். (கஎகூ)

தேமருசெங்கழுநீரின்செவ்விதழ்
காமருபவழவாய்கமழுங்கண்மலர்
தாமரையகவிதழ்புரையுந்தானுமோர்
பூமருதமனியக்குழவிபோலுமே. (கஅo)

வானிடைமணிவிளக்கெரிந்தவண்டொடு
தேனுடைமலர்மழைசிதர்ந்ததவ்வழி
மீனுடைவிரிதிரைவெண்சங்கார்த்தன
தானுடையொளிதிசைதவழ்ந்தெழுந்ததே. (கஅக)

அளப்பருந்திறலுடையரசர்தொல்குடை
யளப்பருந்திறவினோடலரத்தோன்றினு
னளப்பருந்திறலினனமிதவேசனென்
றளப்பருந்திறற்பெயரமரக்கூறினூர். (கஅஉ)

ஐயனதழகுகண்பருகவவ்வழி
மையணிமழைமுகில்வண்ணன்மாமனூர்
வையகமுடையவர்க்குணர்த்திவாவென
நெய்யொடுவந்தனனிலைமையின்னதே. (கஅந)

என்றவன்மொழிதலுமிலங்குநேமியா
னின்றகஞ்சுடர்தருநிதியினீத்தமங்
கன்றவற்கருளினனரசர்செல்வமோ
டொன்றினனுவந்துதன்னுலகமெய்தினுன். (கஅச)

வேறு.

விண்டாரில்லாவெந்திறலோன்பொற்சுடராழித்
தண்டார்மார்பன்றன்மகனன்மாமணியேபோற்
கண்டார்கண்களிகூருஞ்செல்வக்கவினெய்தி
வண்டார்கைம்பான்மங்கையர்காப்பவளர்கின்றுன். (கஅரு)

கண்கவர்சோதிக்காமருதெய்வம்பலகாப்பத்
தண்கமழ்போதிற்றாமரையாளுந்தகைவாழ்த்த
விண்கவர்சோதித்தண்கதிரோன்போல்விரிவெய்தி
மண்கவர்சோதித்தண்கதிர்வண்ணன்வளர்கின்றுன். (கஅசு)

செம்பொற்கோவைக்கிண்கிணியேங்கத்திலதஞ்சே
ரம்பொற்கோவைப்பன்மணிமின்னிட்டரைசூழப்
பைம்பொற்கோவைப்பாடகமென்சீறடிநல்லார்
தம்பொற்கோவைப்பூண்முலைமுன்றிற்றவழ்கின்றான். (கஅஎ)

போதார்பொய்கைப்போதவிழ்பொற்றாமரைகாட்டி
மாதார்சாயன்மங்கையர்கூவமகிழ்வெய்திக்
காதார்செம்பொற்றாழ்குழைமின்னின்கதிர்வீசத்
தாதார்பூவின்றண்டவிசேறித்தவழ்கின்றான். (கஅஅ)

கண்ணின்செல்வங்கண்டவர்கண்டேமனம்விம்ம
மண்ணின்செல்வம்வைகலும்வைகன்மகிழ்வெய்தி
விண்ணின்செல்வச்செங்கதிரோன்போல்விளையாடித்
தண்ணென்செல்கைப்பொன்னுருள்வாங்கித்தளர்கின்றான்.

ஐயாண்டெல்லையையணைந்தானவனோடு
மையாரின்பக்காதலிநாவின்மகளாகப்
பொய்யாக்கல்விச்செல்வர்கடம்மாற்புணர்வித்தா
னெய்யார்செவ்வேனீளொளிநேமிப்படையானே. (க௯0)

காமச்செல்வனென்றுலகெல்லாங்களிதூங்கு
மேமச்செல்வநம்பியொடின்னுமிளையாகச்
சேமச்செல்வன்றேவிபயந்தாடிசையெல்லா
மோமச்செல்வங்கொண்டிணிதேத்துமொளியாளே. (க௯க)

பாரார்செல்கைப்பல்கிளையெல்லாமுடனீண்டிப்
பேராவென்றிக்கொன்றியவாறுபெயரிட்டுச்
சீராரோகைவிஞ்சையர்சேணிசெலவிட்டுக்
காரார்வண்ணன்காதலொடின்பக்கடலாழ்ந்தான். (க௯உ)

ஐயன்றானுமவ்வகையாலேவளர்வெய்த
மையுண்கண்ணிமாபெருந்தேவிமகிழ்தூங்கத்
தெய்வம்பேணிப்பெற்றனள்பேணுந்திருவேபோன்
மெய்யின்சோதிசூழொளிமின்னின்பெயராளும். (க௯௩)

தேதா வென்றேதே னொடுவண்டு திசைபாடும்
போதார்சாயற்பூங்கொடிபோலப்பொலிவெய்தித்
தாதார்கோதைத் தாயரொடாயம்புடைசூழ
மாதார்சாயன்மாமயிலன்னாள்வளர்கின்றாள். (கககச)

வே று.

மழலைக்கனிவாய்மணிவண்டுவெருடிமருங்குபாராட்ட
வழனக்கலர்ந்தவரவிந்தவமளிசேர்ந்தவிளவன்னங்
கழனிச்செந்நெற்கதிரென்னுங்கவரிவீசக்கண்படுக்கும்
பழனக்குவளைநீர்நாடன்பாவைவார்த்தைபகருற்றேன். ()

செம்பொற்சிலம்புங் கிண்கிணியுஞ் செல்வச்செஞ்சீறடி போற்ற, வம்பத்துகிலின்வடஞ்சூழ்ந்தவல்குன்மணிமேகலை மருட்ட, வம்பொற்சுருளையிருபாலுமளகவல்லியருகிலங்கப், பைம்பொற்சுடிகைகிழறுளங்கப் படர்ந்தாடாயம்படிந்தாளே.

நங்கைநல்லார்பாராட்டநகையாட்டாயம்புகலோடு
மங்கைமடவார்பந்தாடன்மயங்கியாடன்மணிநிலத்துக் [து
கொங்கைசேர்ந்த குங்குமத்தின் குழம்புங்கோதைகொய்தா
மங்கராகத்துகளும்பாய்ந்தந்திவானமடைந்ததுவே. (ககஎ)

காவிநாணுங்கண்ணார்தங்கையினேந்துங்கந்துகங்க
ளாவிதாமுமுடையனபோலடிக்குந்தோறுமடங்காது
பூவினூர்ந்தமணிநிலத்துப்பொங்கியெழுந்துபொன்னேந்தி
நாவிநாறுமிளங்கொங்கைத்தடங்கள்சென்றுநணுகியவே. ()

கரியகுழலும்பொற்றோடுஞ்செய்யவாயுங்கதிர்முறுவன்
மரியதிசையுமதிமயங்குமம்பொன்முகத்துமடவார்க
டரியத்தம்மைப்புடைத்தாலுஞ்சென்றுசேர்ந்துதிளைக்குமா
லரியசெய்யுங்காமுகர்போலளியவந்தோவடங்காவே. (ககக)

செம்பொற்சுருளைமெல்விரலாற் றிருத்திச்செறிந்ததேரல் குல், வம்பத்துகிலின்வடஞ்சூழ்ந்துமணிமேகலையுந்தானேற் றி, யம்பொற்குரும்பைமென்முலைமேலணிந்தபொன்ஞாண ருகொடுக்கிப், பைம்பொற்றிலதநுதலொதுக்கிப்பாவைபந்து கைக்கொண்டாள். (உ00)

வேறு.

தந்தாடுமோலியானைக்கார்வண்ணன்பாவை கருமேகக்குழ ன்மூடவார்கைசோர்ந்துநிற்பக், கொந்தாடும்பூங்குழலுங்கோ தைகளுமாடக் கொய்பொலந்துகிலசைத்தகொய்சகந்தாழ்ந் தாட, வந்தாடுந்தேனுமுரல்வரிவண்டுமாடமணிவட்டும்பொ ன்ஞாணும்வார்முலைமேலாடப், பந்தாடுமோடேதன்படைநெ டுங்கணுடப்பணைமென்றோணின்றுடப்பந்தாடுகின்றாள். ()

கந்துகங்கள்கைத்தலத்தாலேறுண்டுபொங்கிக் கருங்கண் ணுதாமுமுறக் கலந்தெழுந்த போழ்தின், வந்தனவுஞ்சென் றனவும் வானத்தின்மேலு மணிநிலத்துமீதுநெறி மறிகுவன வாகி, யந்துகிலினிடைத்தோயுமகலல்குறீண்டுமணிமருங்கு சூழுமணியார் வடமுந்தாக்குங், கொந்தவிழும்பூங்குழலுங் கோதைகளுமூழ்குங் குவளைவாட்கண்ணிவருங் குறிப்பறிய மாட்டாள். (உ0உ)

நறுமாலைவந்தலைப்ப நன்மேனிநோமா ணங்காயிப்பந்தாட னன்றன்றுமென்பா, ரிறுமாவிம்மின்மருங்குலென்பாவமெ ன்பா ரிளமுலைமேலேர்வடம்வந்தூன்றுமாலென்பார், செறு மாலிங்கிவைகாணிற்றேவிதானென்பார் செங்கண்மால்காணு மேற்சீறுமேயென்பார், பெறுமாறுதாயருந்தோழியருநின்று பிணையனுடன்மேற்பன்மொழிமிழற்றுகின்றார். (உ0௩)

நீராலிக்கட்டிநனிநிரந்தெழுந்துபொங்கி நிழறயங்கும்பொ ன்னறைமேனின்றுடுகின்ற, காராலிமஞ்ஞைகளிசிறந்தாற் போலக்கருங்குழலிபந்தாடல்காதலித்தபோழ்திற், சீராலிமா ல்வண்ணன் றேவியுந்தானுஞ் செவ்வரத்தநுண்ணெழினிசே ர்ந்தொருங்குநோக்கி, வாராலிமென்கொங்கைமையரிக்கண் மாதர்வருந்திணங்கையினிவருகவீங்கென்றான். (உ0௪)

வேறு.

அருமணிமுடியவனருளிதென்றலும்
பருமணிப்பந்துகைவிட்டுப்பாவைதன்
புரிமணிக்குழல்புறந்தாழப்போந்தரோ
கருமணியொளியவன்கழல்சென்றெய்தினாள். (உ0௫)

மங்கையைவலப்புடைக்குறங்கின்மேலிரீஇ
யங்கையாலணிநுதலரும்புநீர்துடைத்
தெங்குமிலுவகையேபோடினிதிருந்தபி
னங்கைதனலங்கிளர்மேனிநோக்கினன். (உ0௬)

இளமையாலெழுதருமிணைமென்கொங்கையின்
வளமையாற்பொலிதரும்வனப்பின்மாட்சியாற்
குளமையானறவிரிகுவளைக்கண்ணியா
னுளமையாவுயிர்ப்பதோருவகையெய்தினன். (உ0எ)

செல்வியைத்திருக்குழறிருத்தித்தேவித
னல்குன்மேலினிதினங்கிருவியாயிடை
மல்குபூமந்திரசாலைமண்டபம்
பில்குபூந்தெரியலான்பெயர்ந்துபோயினன். (உ0அ)

அருத்தநூலவரொடுமாய்ந்துமற்றவர்
கருத்தொடுபொருந்தியகருமச்சூட்சியான்
றிருத்தகுசுயம்வரமுரசந்திண்களிற்
றெருத்தின்மேலறைகெனவிறைவனேயினன். (உ0௯)

விரவியசந்தமென்சேறுமட்டித்துப்
பிரவியந்தழையொடுபிணையல்வேய்ந்தன
பரவியபலிபெறுமுரசம்பன்மையி
லரவியங்கதிர்கொளவதிர்ந்தறைந்ததே. (உ௧0)

வாழ்கநம்மன்னவுன்வாழ்கவையக
மாழ்கநம்மரும்பகையலர்கநல்லறம்
வீழ்கதண்புனல்பயிர்விளைகமாநிலந்
தாழ்கமற்றருந்துயர்சாற்றக்கேண்மினே. (உ௧௧)

புள்ளணிவார்பொழிற்பொன்செய்மாநக
ருள்ளணிபரப்புமினுயர்மின்றோரணம்
வெள்ளணிவிரும்புமின்விருந்துபோற்றுமின்
கள்ளணிமலரொடுகலங்கள்பெய்மினே. (உ௧உ)

இன்றைநாளுள்ளூறுத்தீரைஞ்ஞாள்களு
மன்றலஞ்சுயம்வரம்விரைந்ததாதலா
லொன்றிவாழரசரோடுலகமீண்டுக
வென்றுதானிடிமுரசறைந்ததென்பவே. (உகங)

கொடிபடுநெடுநகர்க்கோயில்வீதிவா
யிடிபடுமழைமுகிலென்னவின்னணங்
கடிபடுமுரசுகண்ணதிர்ந்தகாரென
மடிபடுமாடவாய்மயில்கண்மான்றவே. (உகச)

மூரிசொடுவரிவளைமூரித்தானையோ
டரசருமரசரல்லாருமாயிடைத்
திரைசெறிகளைகடல்சென்றுதேர்த்தெனப்
புரைசெறிபுரிசையின்புறணிமுற்றினர். (உகரு)

வெண்மலைச்சென்னிமேல்விஞ்சைவேந்தருங்
கண்மலைத்திழிதருங்கடலந்தானையர்
விண்மலைத்திழிதரும்விளங்குசேர்திய
ரெண்மலைச்சிலம்பிடையிறைகொண்டெண்டினர். (உகசு)

அவ்வரையரைசர்கோனருக்கன்றன்மகன்
செவ்வரையனையதோட்செல்வன்றன்னொடு
மைவரைநெடுங்கணம்மடந்தைதன்னொடு
மிவ்வரையரைசெதிர்கொள்ளவெய்தினன். (உகஎ)

பொன்னகர்ப்புறத்ததோர்புரிசைவார்பொழி
றன்னகத்தியற்றியதயங்குபொன்னகர்
மன்னர்கட்கிறைவன்வந்திருப்பமண்மிசை
யிந்நகர்க்கிறைவனுமெதிர்கொண்டெய்தினன். (உகஅ)

கண்சுடரிலங்குவேற்காளவண்ணனும்
வெண்சுடரொளியவன்றானும்விஞ்சையர்
தண்சுடர்த்தமனியவுண்ணன்றன்னொடு
மண்சுடருறும்பதோர்வகையராயினர். (உகக)

இருபுடைக்கிளைகளும்விரவியின்னணங்
தெருவுடைத்திசைமுகந்தெளிப்பத்தோர்த்தரோ
மருவுடைமகரநீர்வளாகம்வானவ
ருருவுடையுலகம்வந்திழிந்ததொத்ததே. (௨௨௰)

சிகைமணியழுத்தியசெம்பொற்சென்னிய
நகைமணிக்கோபுரவாயினன்கொடு
வகைமணித்தலத்ததோர்மதலைமாளிகை
தொகைமணித்தொழில்பலதொடரத்தோற்றினர். (௨௨௧)

பளிங்கியல்பலகையும்பவழத்தூண்களும்
விளங்குபொற்கலங்களும்வெள்ளிவேயுளு
மிளங்கதிர்முத்தமுமியற்றியின்னணம்
வளங்கவின்றனையதம்மதலைமாடமே. (௨௨௨)

மீன்முகவிசும்பிடைவிரிந்தவெண்ணிலாப்
பான்முகந்தொகுப்பனபனிக்கும்வேதிகை
மேன்முகந்திருத்தியவெள்ளிமுன்றிலா
ஞன்முகமருங்கினுநகுவதொக்குமே. (௨௨௩)

அங்கதற்கைந்துகோலளவினுடரங்
கிங்குவந்திறுத்தனவென்னுமீட்டன
செங்கதிர்ப்பவழக்காலிரைத்தசெம்பொனுன்
மங்கலச்செய்கையமஞ்சுசூழ்ந்தவே. (௨௨௪)

விளிம்பிடைமரகதவேதிகட்டிய
வளம்பெறுமணிநகைமஞ்சமீமிசை
யிளம்பெருஞ்சுரியுளையரிகின்றேந்திய
வுளம்பெரியாசனமுயரவிட்டதே. (௨௨௫)

மண்டங்குமகரவாசனத்துமென்மயிற்
கண்டங்கள்புரைவனகனபொற்கொட்டைய
வண்டங்கொளன்னமென்றூவியார்த்தன
வெண்டங்குமணியனவியற்றப்பட்டவே. (௨௨௬)

வாரித்தண்கதிர்மணிமுத்தமாலையும்
பாரித்தபளிங்கெழிற்பழித்தகோவையும்
பூசித்தபொழிகதிர்ப்பொன்செய்தாமமும்
வேசித்தண்பிணையலுமிடையப்பட்டவே. (உஉஎ)

மஞ்சுடைமாளிகைமிடைமணித்தலம்
பஞ்சுடைத்தவிசுகள்பரப்பிப்பூவடுத்
தஞ்சுடரிடுபுகையடர்ந்தெழுந்தரோ
வெஞ்சுடர்க்கடவுளைவிருந்துசெய்தவே. (உஉஅ)

சயமரமாளிகையியற்றிச்சந்தனப்
பயமரகிழலொளிமஞ்சமபாவின
வியமரத்தொழிலவர்வினைமுடிந்ததென்
றியமரத்தொழுதிகளெழுந்திசைத்தவே. (உஉகூ)

மங்கலநாழிகைவந்தமன்னர்க
ளிங்குவந்தேறுகவென்றுசாற்றலுஞ்
சங்கொலிபரந்தனதயங்குமாமுர
சங்கொலித்தெழுந்தனவரசர்தோன்றினர். (உ௩௦)

வே று.

எரிமணிவயிரப்பூணனிக்குவாகுலத்துட்டோன்றி
யருமணிப்புரிசைவேலியயோத்தியாள்கின்றவேந்தன்
றிருமணிகிழற்றுஞ்செம்பொன்னெடுமுடிதிருவில்வீசப்
புரிமணியாரந்தாழப்பொன்னகர்பொலியப்புக்கான். (உ௩க)

குழவியம்பரிதிபோல்வான்குருகுலங்குளிரத்தோன்றி
யழுவநீர்ப்புரிசைவேலியத்தினபுரமதாள்வான்
முழவங்களிரண்டுசெம்பொன்முளைக்கதிர்க்கனகவல்லி
தழுவியதனையதோளான்றன்னெளிதயங்கச்சார்ந்தான். ()

நண்டுபொன்கிளைக்குநாட * னுதவன்குலத்துட்டோன்றிக்
குண்டலபுரமதாளுங்குங்குமக்குவவுத்தோளான்
கண்டிகைதவழப்பூண்டுகதிர்மணிமுடியின்மேலால்
வண்டுகள்பரவச்சென்றுவளநகர்மருளப்புக்கான். (உ௩௩)

* நாதவின், குண்டலபுரத்து முதலரசன்.

ஊழிகாண்பரியதோன்றலுக்கிரகுலத்துவேந்தன்
வாழைதாழ்சோலைவேலிவாரணவீரசின்னன்
சூழிமாலியானையுந்திச்சுடர்குழைதிருவில்வீச
வேழையர்கவரிவீசவெழினகரிசைப்பச்சென்முன். (உ-ருச)

சொரிமதுகலந்தசோலைச்சூரியபுரமதாளு
மரிகுலத்தரசர்கோமானவிர்மணியாரந்தாங்கிப்
பொருமலைப்பகடுநுந்திப்புயலலைத்திருண்டுவீழ்ந்த
புரிமலர்க்குஞ்சிதாழப்பொன்னகர்புகழப்புக்கான். (உருரு)

சொன்மலர்ந்துலகமேத்துஞ்சுடரவன்மருகன்முலா
மன்மலர்ந்திலங்குசெய்கைவளங்கெழுமதுரையாள்வான்
றென்மலைவளர்ந்ததெய்வச்சந்தனந்திளைத்தமார்பன்
மின்மலராரந்தாங்கிவியனகர்விரும்பப்புக்கான். (உருசு)

ஐம்பெருங்குலத்தராயவரசரும்பிறருமாங்கட்
கம்பெறிகளிநல்யானைக்கடற்படைபுறத்ததாக
வம்பெறிவளாகஞ்செம்பொன்மஞ்சங்கண்மலிரவேறி
வெம்பரிவிளங்குந்தானைவேலவர்விள்ங்குகின்முர். (உருஎ)

திருந்தியதிலதக்கண்ணித்தேவிளங்குமரன்போலு
மருந்தகையரசநம்பியடுதிறலமிததேசன்
பரந்தபின்பசலைக்கூரப்பனிக்கதிர்வருவதேபோல்
விரிந்தொளிசுடரவேந்தர்விளங்கொளிமழுங்கச்சென்முன். ()

மழைபுரைமதத்ததாயமழகளியானைதன்மேல்
வழைவளர்சோலைசேர்ந்தமணிவண்டுமறிவவேபோ
லெழுதெழிலழகன்றன்மேலிளையவர்கருங்கண்வீழ்ந்து
விழவயர்நகரின்வந்தவேந்தரைவிட்டவன்றே. (உருகூ)

வரைசெறிந்தனையசெம்பொன்மஞ்சங்கண்மலிரத்தோன்றி
யரைசர்களிருந்தபோழ்தினுழியந்தடக்கைவேந்தன்
விரைசெறிகுழலங்கூந்தன்மெல்லியல்வருகவென்முன்
முரசொலிகலந்தசங்குவயிரொடுமுரன்றவன்றே. (உசா)

வேறு.

மன்னவன்மடந்தைமணிமாடநிலையுள்ளாற்
பொன்மலிமேனளியபொங்கணையின்மேலாட்
கன்னமனையாரடிகளாரருளிதென்று
ரின்னகையபூந்தவிசினின்றினிதிழிந்தாள். (உசக)

வஞ்சியனையார்மணிதொடர்ந்தசுடர்ஞாண
லஞ்சிலயிருங்குழலசைத்தயில்பிடித்தார்
கஞ்சுகமுகத்தமுலைகச்சுமிகவீக்கி
மஞ்சிவருமாமயிலனார்மருங்குசூழ்ந்தார். (உசஉ)

ஆயமொடுதாயரிடையாளரசர்தங்க
ணேயமிகுநெஞ்சினிடையாளுமடவாளாய்ப்
பாயமதிதாரகையொடோரைபடவேகித்
தூயமணிநீர்நிலைகடோறிவர்வதொத்தாள். (உசங)

வண்டுவழிசெல்லவயமன்னர்மதிசெல்லக்
கண்டவர்கள்கண்கள்களிகொண்டருகுசெல்ல
வெண்டிசையுமேத்தொலியொடின்னொலிகள்செல்ல
விண்டமலரல்லிமிசைமெல்லநனிசென்றாள். (உசச)

அம்மெலடிதாமரைசராவியொடுநோவச்
செம்மெலிதழ்வாயொடவர்சிந்தனை துடிப்ப
வெம்முலைகளோடவர்கள்காதன்மிகவீங்க
மைமலர்நிகர்க்குமணிமாளிகையடைந்தாள். (உசரு)

வேறு.

பொன்னேநன்மணிக்கொம்பேபூமிமேலாரணங்கேபோற்றிபோற்றி, யன்னேயெம்மரசர்குலத்தவிர்விளக்கேயாரமிர்தேபோற்றியுன்றன், மின்னேர்நுண்ணிடைநோகான்மென்மலர்மேன்மென்மெலவேயொதுங்காயென்று, மன்னேர்செயிநெடுங்கண்மங்கைமார்போற்றிசைப்பமாடம்புக்காள். ()

அணிதயங்குசோபானவீதிவா யணங்கனையாரடியீடேந்த, மணிதயங்குமாளிகைமேல்வாணிலாவளர்முன்றின்மருங்

குசூழ்ந்து, கணிதயங்குவினைவின்றகண்டத்திற்றிரைமகளி ர்கையினீக்கத், துணிதயங்குவேலரசர்மனந்துளங்கச்சுடர்ந் திலங்கித்தோன்றினளே. (உசஎ)

வடியரத்தமிடைவழித்துக்கருங்கண்ணுஞ்செம்பொன்று ல்வளைத்தகூரற், கொடியரத்தமெல்விரலாற்கொண்டரசர்கு லவரவுகொழிக்குநீராண், முடியரக்குப்பூங்கண்ணிமூரித்தேர் வேந்தர்தமைமுறையாக்காட்டிப், படியரக்குப்பாவைக்குப் பைபையவேயினையமொழிபகராநின்றாள். (உசஅ)

அங்காரவலர்கதிரமணிசுடருமரியணைமேலமர்ந்துதோ ன்றித், தங்காரமணிநிழற்றுந்தடவரையாரகலத்தான்றகரநா றுங்,கொங்காரவார்குழலார்குவிமுலைகண்முகம்பொருதகுவ வுத்தோளா, னிங்காருநிகரில்லாவிக்குவாகுலத்திறைவனிரு ந்தகோவே. (உசக)

ஆதியானருளாழி த ங்கினுனுயிரச்செங்கதிரோனுனுஞ், சோதியான்சுரர்வணங்குதிருவடியான் சுடுநீறுநினையப்பட்ட, காதியானருளியபொற்கதிர்கொண்முடிகவித்தாண்டார்மருக ன்கண்டா, யோதியான்மொழியினிவனுறுவலிக்குநிகராவாரு ளரோவேந்தர். (உருo)

ஆழித்தேரொன்றேறியலைகடலினடுவோட்டி யமரார்தந் த, மாழைத்தேர்மருங்கருமணிமுடியு மணிகலமுந்திறையா வவ்வி, யூழித்தேரரசிறைஞ்சவுலகெலாமொருகுடைக்கீழ்உற ங்கக்காத்த,பாழித்தோட்பரதன்பினிவனிவனிலமடந்தை பரிவுதீர்ந்தாள். (உருக)

இன்னவனதுயர்குலமுமிளமையு மிங்கிவன்வடிவுஞ்சொ ல்லவேண்டா, மன்னவன்றன்மடமகளேமற்றிவனுக்கிடமரு ங்கின்மஞ்சஞ்சேர்ந்து, பொன்னவிருமணியணைமேற்பொழி கதிரீன்றெழுந்ததுபோற்பொலிந்துதோன்றுங், கொன்னவி ன்றவேற்குமரன்குருகுலத்தார் கோனிவனேகூறக்கேளாய்.

அருளாழியறவரசனருளினுலகன்ஞாலம்பரிவுதீர்த்தா, னருளாழியுடையரிவனடவின்மிகக் கடைப்பணிகொண்டு ழையோர்போல, விருளாழிகிழற்றுளும்புமெரிபொன்மணி நெடுமுடிசாய்த்திறைஞ்சப்பட்டான், மருளாழுங்கழிவனப்பி ன்மற்றிவனேகுலமுதற்கண்வயவோன்கண்டாய். (உருங)

சூழிருந்திண்கடற்றானையுடன்றுளங்கச் சுரர்கொணர்ந்து சொரிந்தமாரித், தாழிரும்பல்புயறுங்கிச்சரகூடஞ்சந்தித்தத கையோனன்றோன், யாழிரங்குமணிவண்டுமிலங்கிழையார் கருங்கண்ணுமருங்குநீங்கா, வீழிரும்பொற்சுடராரவரைமார் பனிவன்சீர்யான்விளம்பவேண்டா. (உருச)

இங்கிவனதிடமருங்கினெழில்வயங்கு மணிமஞ்சமிலங்க வேறிச், சங்கிவர்வெண்சாமரையுந்தாழ்குழையுநீள்சுடருந்த யங்கிவீசக், குங்குமஞ்சேர்கொழும்பொடியிற்புரண்டுதன்னி னிறஞ்சிவந்தகுளிர்முத்தாரஞ், செங்கதிரோனொளிபருகுஞ் செவ்வரை * தேரகலத்தான்றிறமுங்கேளாய். (உருரு)

தகரநாறிருஞ்சோலைச்சயம்பூறன்றுறவரசாய்நின்றகாலை, மகரயாழ்நரம்பியக்கிவரங்கொண்டு வடமலைமேலுலகமாண் ட, சிகரமாலியானையான்வழிமருகன்செந்தாமந்தவழ்ந்துதீந் தேன், பகருமாமணிமுடியானமரருமேபாராட்டும்படியன்பா வாய். (உருசா)

† சக்கரர்தாம்பிறந்துவரித்தரங்கநீர் வளாகமெல்லாந்தங் கீழ்க்கொண்ட, வுக்கிரமெய்க்குலத்தரசனொளிவேலிவ்விளை யவனதுருவேகண்டா, யக்கிரநற்பெருந்தேவிமடமகளேயரச ணங்குமணங்கேயின்னும், விக்கிரமக்கடற்றானைவிறல்வேந்த ரிவர்சிலரைவிளம்பக்கேளாய். (உருஎ)

ஏலஞ்செய்பைங்கொடியி னிணர்ததைந்து பொன்னறை மேற்கொழுந்தீன்றேறிக், கோலஞ்சேர்வரைவேலிக்குண்டல த்தார்கோமானிக்கொலைவேற்காளை, ஞாலங்களுடன்பரவுநா

* தேர், உவமவுருபு. † சகரரின்விகாரம்.

தவன்றன்குலவிளக்குநகைவேனம்பி, பேரலிங்கணரசில்லை பொன்னுரவரைமார்பன்பொலிவுங்காணாய். (உருஅ)

சொரிமலர்த்தண்மலரணிந்தசோலைசூழ்சூரியத்தார்கோ மான்றேலா, வரிகுலத்தார்போரேறிவ்வரியேறுபோலிருந்த வரசகாளை, வரிமலர்த்துமணிவண்டுபுடைவருமோலையார்ம களிர்வாட்கண், புரிமலர்த்தண்வரையகலம்புணராதார்புண் ணியங்கள்புணராதாரே. (உருகூ)

வேலைவாய்க்கருங்கடலுள்வெண்சங்குமணிமுத்தும்விர வியெங்கு, மாலைவாய்க்கரும்பருவகன்பண்ணைதழீஇயருகே யருவிதூங்குஞ், சோலைவாய்மலரணிந்தசூழ்குழலாரியாழி சையாற்றுளக்கைவேழ, மாலைவாய்நின்றுறங்குமதுரைசூழ் வளநாடன்வடிவுகாணாய். (உகூ0)

கண்சுடர்கள்விடவனன்று கார்மேகமெனவதிருங்களிநல் யானை, விண்சுடருநெடுங்குடைக்கீழ்விறல்வேந்தன்றிறமித னைவிளம்பக்கேளாய், தண்சுடரோன்வழிமருகன்றென்மலை மேற்சந்தனமுஞ்செம்பொன்னாரத், தொண்சுடரும்விரவியந ல்வரைமார்பனுலகிற்கோர்திலதங்கண்டாய். (உகூக)

மழைக்கரும்புங்கொடிமுல்லை மருங்கேறவரம்பணைந்துத டாவிநீண்ட, கழைக்கரும்புகண்ணீனுங்காபுரத்தார்கோமா னிக்கதிர்வேற்காளை, யிழைக்கரும்புமிளமுலையாயெரிகதிரோ ன்வழிமருகனிவனீரீர்ந்தண், டழைக்கரும்பின்முருகுயிர்க்கு ந்தாரகலஞ்சார்ந்தவர்கடவஞ்செய்தாரே. (உகூஉ)

வண்டறையுமரவிந்தவனத்துலாய் மதர்த்தெழுந்தமழலை யன்ன, முண்டுறைமுன்விளையாடியிளையவர்கணடைபயிலு முறந்தைக்கோமான், கொண்டறையுமிடிமுரசுங்கொடிமதிலு ங்குளிர்புனலும்பொறியும்பூவு, மொண்டுறையுமூன்றுமு டையகோனிவனிவனதெழிலுங்காணாய். (உகூங)

தழலவர்ந்தாமரையினீரிதழுஞ்செங்குவளைத்தாதும்வாரி, யழலவாஞ்செந்தோகையலங்குபொலங்கதிர்ச்செந்நெல்லைத்

தவாடை, பழனவாய்ப்பைங்கரும்பின்வெண்போதுபவழக் காற்செம்பொன்மாடத், தெழினிவாய்க்கொணர்ந்தசைக்கு மியூலேம்மாங்கதத்துடனிவனேகண்டாய். (உகூச)

காந்தளங்கட்கமழ்குலேயாற்களிவண்டுகளிறகற்றுங்கலிங் கநாடன், பூந்தளவங்கமழ்சாரற்பொன்னறைசூழ்தண்சிலம் பனன்றேபொன்னே, யேந்திளஞ்சிங்காதனத்தினினிதிருந்த விளவரசனிப்பாலானேன், மாந்தளிர்கண்மருங்கணிந்தமணி யருவிக்குன்றுடையமகதைக்கோவே. (உகூரு)

அங்கநாடுடையவர்கோ னவ்விருந்தானிவ்விருந்தானவந் திக்கோமான், கொங்குவார்பொழிலணிந்தகோசலத்தார்கோ மானிக்குவளைவண்ணன், கங்கைதானிருகரையுங்கதிர்மணி யும்பசும்பொன்னுங்கலந்துசிந்தி, வங்கவாய்த்திரையலேக்கும் வளநாடனிவன்போலும்வைவேற்காளை. (உகூசு)

வஞ்சியின்மெல்லிடையவளை வனிலாவளர்முன்றில் வல மாய்ச்சூழ்ந்து,பஞ்சியின்மெல்லடிநோவநடைபயிற்றிப்படை வேந்தர்பலரைக்காட்டி, மஞ்சிவருமாளிகையின்வடமருங்கி ன்மணிமஞ்சமலிரத்தோன்றும், விஞ்சையர்தமுலகாளும்வி றல்வேந்தர்குழாங்காட்டிவிரித்துச்சொன்னாள். (உகூஎ)

மாடிலங்குமழைதவழ்ந்து மணியருவிபொன்னறைமேல் வரன்றிவண்பூந், தோடிலங்குகற்பகமுஞ்சுரபுன்னைவனங்க ளுமேதுதைந்துவெள்ளிக்,கோடிலங்குநெடுவரைமேற்குடை வேந்தரிவர்குணங்கள்கூறக்கேட்பி, னேடிலங்குபூங்கோதா யிமையவரின்வேறுயதிமைப்பேகண்டாய். (உகூஅ)

அங்கவவர்வளநகருங்குலவரவுமவயவமு மறையும்போழ் தின், வெங்கதிரோன்பெயரவனுக்கிளவரசிவ்வேந்தனெனுமு ன்னந்தானே, கொங்கிவருங்கருங்குழலிபெருந்தடங்கணிருங் குவளைபிணையல்போலச், செங்கதிரோனெனவிருந்ததிருந்து வேலிளையவன்மேற்றிளைத்தவன்றே. (உகூகூ)

வேறு.

கடாமிகுகளிநல்யானைக்கவுளிழிஞானவீதி
விடாமிகைசுழன்றுவீழும்விரைகவர்மணிவண்டேபோற்
படாமுகக்களிற்றினான்றன்பவழக்குன்றனையமார்பிற்
றடாமுகையலங்கறன்மேற்றையல்கண்சரிந்தவன்றே. ()

ஏட்டினார்குழலினாளுக்குழையவளின்னனென்று
காட்டினாளாவதல்லாற்காரிகைதன்னின்முன்ன
மோட்டினாணிறையுங்கண்ணுமுள்ளமுங்களித்ததங்கே
பாட்டினாலென்னைபோகபான்மையேபலித்ததன்றே. (உஎக)

விண்டழிநிறையளாகிமெல்லவேநடுங்கிநாணி
வண்டிவர்மாலைநோக்கிமாதராண்மறைதலோடுங்
கொண்டதோர்குமரன்போலக்குங்குமக்குவவுத்தோண்மே
லொண்டொடிமாலைவீழ்த்தாளுலகொலிபடைத்தன்றே. ()

ஆர்த்ததங்கரவத்தானையாலித்தமுரசுஞ்சங்குந்
தேர்த்தனமலருஞ்செம்பொற்சுண்ணமுந்திசைகளெல்லாம்
போர்த்தனபதாகைபொங்கிப்பூமியங்கிழவருள்ளம்
வேர்த்தனவேர்த்துத்தாமேவெய்துயிர்த்தொழிந்தவன்றே. ()

புனைவுதானிகந்தகோதைப்பொன்னனாள்பூமிபாலர்
நினைவுதானிகந்துகாளைவடிவெனுநிகளஞ்சேர
வினைகடாம்விளையுமாறியாம்வேண்டியவாறுவாரா
வினையதால்வினையின்றன்மையெனநினைந்தாறினாரே. ()

நெய்த்தலைப்பாலுக்காங்குநெடுவரையுலகின்வந்த
மைத்துனகுமரன்றன்னைமடமொழிமாலைசூட்ட
வித்தலையரசர்கோமானெரிகதிராழிவேந்தன்
கைத்தலைவேலினாற்குக்கடிவினைமுடிவித்தானே. (உஎரு)

விண்ணகம்புகழுநீர்மைவிழுக்கலம்பரப்பியார
மண்ணகவளாகத்துள்ளமன்னரான்மண்ணுநீர்தந்
தெண்ணகன்புகழினாரையெழிலொளிதுளும்பவாட்டிப்
புண்ணகங்கமழும்வேலான்பொன்மழைபொழிவித்தானே. ()

திருமணன்மணிமுத்தாகத்தண்டுலமியற்றிக்கான்யாற்
றருமணற்றருப்பைசூழ்ந்தங்கதன்மிசைபரிதிபாய்த்திய
பெருமணமன்னற்கேற்றசமிதையாற்பெருக்கப்பட்ட
திருமூண்டியுருவச்செந்தீசெலவத்திற்சிறந்ததன்றே. (உஎஎ)

தீங்கழல்வேழ்விமுற்றித்தையலக்காளையோடும் [ண்ணீா
பொங்கழல் வலஞ்செய்போழ்திற் குழைமுகம்பொறித்ததெ
பைங்கழலமரர்பணடுபடைத்தநீரமிரதப்புள்ளி
யங்கெழுமதியந்தன்மேலருமபியாங்கணிந்தவன்றே. (உஅசு)

மன்னவகுமரனுங்குமடந்தையைப்புணர்ந்துமாடத்
தின்னகிலமளிமேலாவிளமுலைத்தடத்துமூழ்க
வன்னவன்றுதைசெங்கோலாணைவேலருக்கீர்த்தி
தன்னமர்மடந்தைக்கேற்றசயமரமறைவித்தானே. (உஎகூ)

சயமரமறைந்தனன்றட்ட மனியமஞ்சம்பாவி
யியமரந்துவைப்பவேறியிகன்மன்னரிருந்தபோழ்திற்
பயமலைமன்னன்பாவைக்கவரவர்பண்புகூறிக்
கயமலர்நெடுங்கணுளோாகாரிகைகாட்டினளே. (உஅ0)

வரிகழன்மன்னரென்னுமணிநெடுங்குன்றமெலலாஞ்
சுரிகுழன்மடந்தையென்னுந்தோகையமஞ்ஞைநோக்கி
யெரிகதிராழிவேந்தன்றிருமகனென்னுஞ்செம்பொன்
விரிகதிர்விலங்கற்றிண்டோட்குவட்டினைவிரும்பிற்றன்றே. ()

மாதராள்சுதாரைவாட்கண்மலரொடுமணிவண்டார்க்கும்
போதுலாம்பிணையல்வீரன்பொன்வரையகலஞ்சூழ
வேதிலாமன்னர்வாடவிருபுடைக்கிளைஞரெலலாங்
காதலாற்களித்துச்செல்வக்கடிவினைமுடிவித்தாரே. (உஅஉ)

கழல்வலம்புரிந்தநோன்றாட் கடல்வண்ணன்புதல்வன்காமர்
குழல்வலம்புரிந்தகோதைகுழைமுகம்வியர்ப்பவேட்டா
னழல்வலம்புரிந்துசூழ்ந்தாங்கத்தொழின்முடித்தபின்னைத்
தழல்வலம்புரிந்தவேலான்றடமுலைவாரிசார்ந்தான். (உஅங)

மாதரஞ்சாயலாளுமணிவண்ணன்சிறுவன்றானு
மோதநீரின்பமென்னுமொலிகடற்றரங்கமூழ்கச்
சோதியம்பெயரினாளுஞ்சுடரவன்புதல்வன்றானுங்
காதலிற்களித்துத்தங்கள்கனவரையுலகஞ்சார்ந்தார். (உஅச)

வே று.

எரிவிசயங்கோவேந்திமன்னரென்னு
மரிவிசயங்கெடநின்றவாணைவேலான்
திருவிசயன்றிருவன்னசெல்வியோடு
மருவிசயங்கெழுகோயின்மலர்ந்துபுக்கான். (உஅரு)

இனையனவாமிகுசெல்வமிங்குமாக்கிப்
புனைமலர்வானவர்போகம்புணர்க்கும்பெற்றி
வினையதனின்விளைவின்னதென்றுநாளு
நினைமின்மோநெறிநின்றுநீர்மைமிக்கீர். (உஅசு)

சுயம்வரச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - கஅசo.

பதினொராவது

# துறவுச்சருக்கம்.

மன்னியபுகழினான்றன்மகன்வழிச்சிறுவர்வாயி
னின்னகைமழலைகேட்டாங்கினிதினிருந்துபின்னர்ப்
பன்னுமெய்த்துறவிற்புக்கான்பயாபதிமன்னர்மன்ன
னன்னதன்பகுதிதன்னையறியுமாபகர்தலுற்றேன். (க)

திருமகிழலங்கன்மார்பிற்செங்கணான்வணங்கச்செல்வப்
பெருமகிழ்வெய்திவேந்தன்பிரசாபதிபெரியவாட்க
ணுரிமையொடிருந்தபோழ்தினொலிகலனொலிப்பவோடி
யருமைகொடிகிரியாள்வான்சிறுவர்சென்றணுகினாரே. (உ)

ஆங்கவரணைந்தபோழ்தினமிர்துகொப்புளித்தபோலுந்
தேங்கமழ்பவழச்செவ்வாய்முறுவனீர்பருகித்தேங்கி
யீங்கிவையனையதோற்றியின்பமேபெருகநின்ற
வீங்கியதவத்திற்கின்னும்வித்திடற்பாலதென்றான். (ந)

அலகுடன்விளங்குமம்பொற்குடைநிழலரசர்சூழ்
வுலகுடன்வணங்கவோடையுயர்களிற்றெருத்தமேலாற்
புலகுடைபணியச்செல்லும்பண்பிதுநமக்குத்தந்த
நலனுடைத்தளியநங்கணல்வினைத்தெய்வமன்றே. (௪)

தன்னையோரரசனுக்கித்தரங்கநீர்வளாகமாள்வித்
தின்னுயிராகச்செல்லுநல்வினையென்னுமின்ன
முன்னுபகாரிதன்னைமுதல்கெடமுயலுங்கீழ்மை
நன்னரின்மன்னனன்றேநரகங்கட்கரசனுவான். (௫)

சென்றநாள்பெயருமேனுஞ்செல்வமுஞ்செருக்குமாக்கி
நின்றநாணிலவுமேனுநெறிநின்றுவருந்தவேண்டா
வின்றுபோல்வாழ்துமன்றேயிப்படித்தன்றியாங்கள்
பொன்றுநாள்வருவதாயின்வாழ்க்கையோர்பொருளதன்றே.

எரிபுரையெழிலதாயவிளந்தளிரிரண்டுநாளின்
மரகதவுருவமெய்திமற்றதுபசலைகொண்டு
கருகிலையாகிவீழ்ந்துகரிந்துமண்ணுந்தல்கண்டும்
வெருவிலர்வாழ்துமென்பார்வெளிற்றினைவிலக்கலாமோ. (௭)

பிறந்தனர்பிறந்துசாலப்பெருகினர்பெருகிப்பின்னை
யிறந்தனரென்பதல்லாலியாவருமின்றுகாறு
மறைந்துயிர்வாழாநின்றாரில்லையால்வாழிநெஞ்சே
சிறந்ததுதவத்தின்மிக்கதின்மையேசிந்திகண்டாய். (௮)

பிறந்துநாம்புறஞ்செய்கின்றபேதையிவ்வுடலந்தானு
மிறந்தநாள்போல்வதின்றுயிற்றையினுளேவேறாய்ப்
பறைந்துநாம்பற்றப்பற்றப்பற்றுவிட்டகலுமாகிற்
சிறந்தனர்பிறர்கள்யாரேசிந்தைநீசிந்தியென்றான். (௯)

தொகைமலரலங்கல்சூடித்தூநறுஞ்சுண்ணமப்பிப்
புகைகனிகமழவூட்டிப்புறஞ்செயப்பட்டமேனி
சிகைபினோர்சிறுமுட்டீண்டச்சிதைந்தழுக்கொழுகுமாயி
னகைபெரிதுடைத்துநாணுமிதனைநாமகிழ்தனெஞ்சே. (௧௦)

ஒழுகியநடையுநீருமுதலகைமிகப்பவூறு
மழுகலிவ்வள்ளல்யாக்கையகம்புறமாயிற்றாயிற்
கழுகொடுகவருங்காக்கைகைதடிகொண்டுகாத்து
மழகுளசுழலுமன்னோவாயிரச்சாதிமூடதோ. (கக)

வல்வினைவிளைத்தமாந்தர்மற்றதன்வித்துமாட்டிப்
புல்வினைகானமண்டிப்புலியின்வாய்ப்பட்டதேபோ
னல்வினையினிதினூட்டுநல்வினைமுதல்கண்மாறி
யில்வினையின்பம்வெஃகியிறுபவேயறிவிலாதார் (கஉ)

இன்னனபலவுஞ்சிந்தித்திருந்ததுமிகையென்றெண்ணி
மன்னவனுழையர்தம்மான்மந்திரத்தவரைக்கூவிப்
பொன்னவிர்பவழத்திண்காற்புரிமணிக்கூடமெய்தித்
தன்னமரமைச்சரோடுதானமர்ந்திருந்துசொன்னான். (கங)

மலைபயில்களிநல்யானைமன்னரால்வவ்வலின்றாய்க்
நலைபயில்மகளிர்கண்போற்கள்வர்கைப்படாதுநாளு
நிலையினசெல்வக்கூனநிகழ்வனவுரைமினென்றா
னிலைபயின்மகரப்பைம்பூணெரிமணிக்கடகக்கையான். (கச)

ஆள்வினைமாட்சியென்னுமிரண்டினுமரசுகாத்துத்
தோள்வினைக்களவுகாவலுள்வழித்துன்னல்செல்லா
வாள்வினைத்தடக்கைவேந்தேவருவதுமற்றுமுண்டோ
கோள்வினைபயின்றகூற்றங்குறுகலதாயினென்றார். (கரு)

கோள்வினைபயின்றகூற்றவரசனாற்கொள்ளற்பால
கேள்வினைபயின்றநூலிற்கிளந்துநீருரைமினென்ன
வாள்வினைபுரந்ததோளான்மனத்ததையுணர்ந்துமாதோ
நாள்வினைபுரிந்துநங்களுயிர்நிறைகொள்ளுமென்றார். (கசு)

சந்தினாற்றவிர்க்கலாமோசார்பினாலொழிக்கலாமோ
பந்தியாமுன்னந்தாமேபகைத்திருந்துய்யலாமோ
வெந்திறற்காலன்றன்னைமேற்சென்றுவெல்லலாமோ
யுய்ந்துயிர்யாங்கள்வாழுமுபாயநீருரைமினென்றான். (கஎ)

பீழைமைபலவுஞ்செய்துபிணிப்படைபரப்பிவந்து
வாழுயிர்ப்பொழித்துவவ்விவலிந்துயிர்வாங்கியுண்ணுங்
கூழைமைபயின்றகூற்றவரசனைக்குதிக்குஞ்சூழ்ச்சி
பாழியந்தடக்கைவேந்தேபயின்றிலம்யாங்களென்றார். (௧அ)

ஆயினக்காலன்பாணியாம்பிறவரசசெல்வ
மேயினங்களித்தியாங்கள்விழைந்துயிர்வாழும்வாழ்க்கை
பாயியவெழுந்தவேங்கைபாரிக்குமளவிற்பைம்புன்
மாயிருஞ்சுருளைமேயுமான்மறிபோலுமென்றான். (௧௯)

அருங்களியானைவேந்தேயத்துணைப்பாணியுண்டோ
கருங்களிமதநல்யானைவாய்புகுகவளமேபோற்
பெருங்களியாளன்காலன்பிறையெயிறணிந்துநின்ற
விருங்களியாணர்வாழ்விற்கிமைப்பிடைபெரிதுகண்டாய். ()

இன்னுயிரழியும்போழ்துமிறைவனுக்குறுதியல்லான்
முன்னியமுகமன்மாட்டாமுற்றியவுறிவினுரை
மன்னவன்மகிழ்ந்துநோக்கிவாழுயிர்வவ்வுங்காலன்
றன்னையமிகந்துசேருஞ்சரண்பிறிதுரைமினென்றான். (உ௧)

இனியனபோன்றுதோன்றிநுகர்ந்தவற்கிறுதிசெய்யுங்
கனிபுரைகிளவிகேக்கிக்கண்ணனூர்கருத்துட்கொண்டு.
துனிவனகினையுங்காலன்றுணிவனதுணியுஞ்சூட்சி
முனிவரைவணங்கிக்கேட்டுமுயறுமோவடிகளென்றார். ()

குருகயர்வுயிர்க்குஞ்சோலைக்குளிரணிப்பழனநாட
முருகயர்வுயிர்க்கும்பூவார்முறிமிடைபடலைமாலைத்
திருவயர்வுயிர்க்குமார்பற்செறிதவர்சரணமூலத்
தருகயர்வுயிர்ப்பினல்லாலரண்பிறிதாவதுண்டோ. (உ௩)

எரிகின்றசுடரினெய்பெய்திடுதிரிதூண்டியாங்கு
விரிகின்றபுலமைவீரர்மொழிதலும்விசோதியன்னற்
பரிகின்றவுரிமைவல்லபடரொழிமனத்தனனன்
சொரிகின்றமதுவின்மாரித்துவலையினனைந்ததாரான். (உச)

கரும்பண்மொழியினார் தங்கருந்தடங்கண்ணும்வண்டுஞ்
சுரும்புணமுலேயினருந்தொடையலுந்துதைந்தமார்ப
னரும்பணியசோகநீழலடிகளதணிபொற்கோயில்
விரும்பணிவிழவுசாற்றிவியன்முரசறைகவென்றான். (உ௫)

ஒளியவனுலகந்தன்னுட்கரந்தவனுயிர்களுய்யு
மளியவனருள்செய்யாழியுடையவனடிமைசெய்வார்க்
கெளியவனெந்தைபெம்மாற்கியற்றியவிழவின்மிக்க
களியவரென்பசெம்பொற்கதிர்முடிசூடுவாரே. (உ௬)

அருள்புரியழலஞ்சோதியாழியானுதியில்லான்
மருள்புரிவினைகட்கென்றுமறுதலையாயவாம
னிருள்புரியுலகஞ்சேராவியனெறிபயந்தபெம்மான்
பொருள்புரிவிழவுகாண்பார்புண்ணியவுலகங்காண்பார். (உஎ)

கண்ணியவறிவன்செல்வவிழவினுட்களித்தமாந்தர்
பண்ணியத்துகள்களென்னும்பொற்சுண்ணம்புதையவாடிப்
பண்ணியன்மொழியினார்தீங்கருங்கணூற்பருகுநீர்மை
விண்ணியலுருவமெய்திவிளங்கிவீற்றிருப்பரன்றே. (உஅ)

எல்லைசான்முரசிற்சாற்றியின்னனவறைதலோடு
மல்லன்மாநகரங்கேட்டேவானுலகிழிந்ததேபோன்
முல்லைவான்கண்ணிசூடிமுகிணைகைக்கலங்கடாங்கிச்
செல்லும்வாய்தோறுஞ்செல்வவிழவணிதோத்ததன்றே. ()

இன்னிசைமுரசங்கேட்டேமெய்பெரிதினியகேட்டா
மன்னியநங்கள்வாணாள்வாழ்கநம்மிறைவனென்னுப் [த்
பொன்னியன்மலருஞ்சாந்துஞ் சுண்ணமும்புகையும்பொங்க
துன்னியநகரமாந்தர்துறக்கம்பெற்றவர்களொத்தார். (௩0)

வே று.

பூரணமணிக்குடநிரைத்தபொன்னணி
தோரணமெடுத்தனதுதைந்தவெண்கொடி
வாரணிமுரசொடுவீணைகளார்த்தரோ
காரணிகடலொலிகைதவிர்த்ததே. (௩௧)

விரையினுன்மெழுகியவீதிவாயெலாந்
திரையினூர்செழுமணிமுத்தஞ்சிந்திறு
ருரையினுலென்னையவ்வொளிகொண்மாநகர்
புரையினுற்பொன்னுலகிழிந்ததொத்ததே. (௩௨)

கீழுமியகாழகிலாவிகாமரு
செழுமணிமாளிகைச்சென்னிசூழ்வந்து
விழுமணிவிளங்கியவிலங்கன்மீமிசைத்
தழுவியவிளமழைதவழ்வதொத்ததே. (௩௩)

வெண்டுகிலுடுத்துவெண்சாந்துமெய்வழித்
தொண்டிரணமல்லிகையொலியல்சூடினூர்
வண்டிரணமணிமுத்தும்வயிரச்சாதியுங்
கொண்டியலணியொடுகோலந்தாங்கினூர். (௩௪)

வெண்மருப்பிரட்டையவேழமீமிசைக்
கண்மருட்டுறுப்பனகமலப்பூப்பலி
விண்மருட்டுறுப்பனவேந்திவேதியா
மண்மருட்டுரப்பதோர்வகையின்மன்னினூர். (௩௫)

செம்மலர்க்கண்ணியர்செம்பொற்றூரினர்
கொய்மலர்க்குங்குமங்குழைந்தசாந்தினர்
கைமலர்மணிநகைக்கடகம்வில்விட
மெய்ம்மலரணியினர்வேந்தராயினூர். (௩௬)

செங்கிறக்குவளைகைசெய்தசூட்டின
ரங்கிறந்தழுவியவரத்தவாடையர்
மெய்கிறஞ்செய்வனவேழமீமிசைக்
கைகிறமலரொடுகலந்துதோன்றினூர். (௩௭)

பொன்மலர்க்கண்ணியர்பொன்செய்சுண்ணமொய்
மின்மலர்மேனிமேல்விளங்கவப்பினூர்
மென்மலரணிநகைமிளிருங்கோலமோ
டின்மலரிருகிதிக்கிழவரீண்டினூர். (௩௮)

பேரொளிப்பீதகவுடையர்பைம்பொனு
லாரொளிதழுவியவலர்செய்பூப்பலி
போரொளியானைமேனிரைத்துப்போந்தனர்
வாரணிவனமுலையவரொடென்பவே. (௩௯)

நகரமாங்கெழுந்தபினரலுஞ்சங்கொடு
முகரவாய்மணிமுரசதிருமூரிநீர்
மகரமால்கருங்கடன்மருளுந்தானையான்
சிகரமால்யானைமேற்செல்வன்றோன்றினன். (௪௦)

வேல்புரைகண்ணியர்கவரிவீசவெண்
பால்புரைபவழக்காற்குடையினீழலான்
மால்புரைகருங்கடல்வளாகங்காவலன்
கால்புரைபுரவியங்கடலுட்டோன்றினன். (௪௧)

புதமெழுபுரவிகள்புடைபரந்திட
மதமழைபொழிவனவயிரக்கோட்டன
கதமழலெழவுமிழ்தகையகாணில
விதமெழுகளிறுகள்பலமிடைந்தவே. (௪௨)

ஆர்த்தனபல்லியமதிர்ந்தகுஞ்சரந்
தேர்த்தனதேர்க்குழாந்திகைத்தபல்லுயிர்
போர்த்தனகெரிடிமிடைபொழிந்தபூமழை
வேர்த்தனவிளிந்தனவினைகளென்பவே. (௪௩)

விரிந்துயர்வெள்ளிவெண்குடையின்மாடெலாந்
திருந்தியசாமரைதிசைகடேர்த்தன
பரந்தெழுபாற்கடற்பரவைவெண்டிரை
நிரந்தெழுநுரையொடுநிரைத்தவொத்தவே. (௪௪)

பீலியந்தழைபிணித்திட்டவட்டமு
மாலியங்கசைப்பனவாலவட்டமு
மேலியங்கொளியவன்மறையவேய்ந்தரோ
காலியங்கிடவிடங்காண்கிலாரரோ. (௪௫)

ந்தனஞ்செறிந்தனசெப்புந்தண்புகைக்
ந்தமேநிறைந்தனகரண்டகங்களுங்
கொந்துமொய்ம்மலர்நிறைகோடிகங்களு
முந்தியொன்ருென்றிணையூன்றுகின்றவே. (சசு)

நிரந்தனபூப்பலிநிரைகொண்மாரியாய்ச்
சொரிந்தனசுரும்பிவர்துணாகொள்பூமழை
பரந்தனமங்கலப்பதாகையவ்வழிக்
கரந்தனகருவினைக்குழாங்களென்பவே. (சஎ)

பாடுவார்பலாண்டிசைபரவுவார்பரந்
தாடுவாரறிவனைப்பரவியாரகளுங்
கூடுவார்குழுவுமெய்குழுமியெங்கணு
மூடுதான்வியலிடமுள்ளதில்லையே. (சஅ)

நொவ்வகைவினைப்பகையகற்றிநூனெறி
செவ்வகைமொழிந்தவன்செலவச்சேவடிக்
கிவ்வகையெழுவகைவிழவுசெல்வுழி
நெய்வகைவேலவனிலைமைகேட்கவே. (சகூ)

நீர்ப்பலிவிரைப்பலிநிரந்துதேனிமிர்
பூப்பலியெனவிவைநிரைத்துப்புண்ணியன்
சீர்ப்பொலிசினகரஞ்சென்றுசேர்ந்தன
ரார்ப்பொலிதழுவியவரவத்தானையான். (௫0)

கோடுயர்கோபுரவாய்தல்சேர்ந்துதன்
னீடுயர்மழகளிறிருவித்தானிழிந்
தேடுயரினமலரேந்தியீர்ம்பொழின்
மாடுயர்வளநகர்வலங்கொண்டெய்தினன். (௫க)

மன்னவனணைதலுமலர்ந்தவாணிலாப்
பொன்னணிவளநகரகத்துப்பொங்கரி
துன்னியவணைமிசைத்துளங்குஞ்சோதியோ
டன்னணமசோகமரடிகடோன்றினர். (௫உ)

குஞ்சரத்தடக்கையகுழவிச்சென்னிய
மஞ்சிவர்தோற்றத்துமகரவாயொடு
செஞ்சுடர்மணிநிரையழுத்திச்செம்பொனு
லஞ்சுடருமிழ்வதவ்வணையின்வண்ணமே. (ருங)

ஏழிய லுலகிலுள்ளிருளங்கையகன்
ருழியல்வினைகளோடவியவாயிரந்
தாழொளிசுடரவன்றன்னைக்காணவோர்
சூழொளிமண்டிலஞ்சுடரத்தோன்றுமே. (ருச)

கழுமியபானிலாக்கதிரின்கற்றைகள்
செழுமணித்திரண்மிசைச்செறிந்தபோல்வன
வெழுவளர்த்தனையதோளியக்கரேந்தின
தொழுதகையுருவினகவரிதோன்றுமே. (ருரு)

பருகலாம்பானிலாப்பரந்தமாமணி
யருகெலாமணிந்தகடம்பொனார்ந்துமேற்
பெருகலாஞ்சுடரொளிபிறங்கிநின்றதம்
முருகுலாம்பிண்டியான்குடையின்மும்மையே. (ருசா)

அழல்வளர்த்தனையனதழையுமவ்வழற்
றழல்வளர்த்தனையனமலருந்தாமரைப்
பொழில்வளர்வளையமும்பொதுளிவண்டினங்
குழைவளரசோகின்மேற்குளிறுகின்றவே. (ருஎ)

மாமழைக்கண்ணியர்மருங்குபோல்வன
தாமழைவளர்கொடிதுவன்றிப்பத்திகள்
பாமழையுருவுகள்பலவுந்தோன்றவே
பூமழைபொன்னிலம்புதையவீழ்ந்தவே. (ருஅ)

மொய்த்திலங்கலர்மழைமுருகுலாவிய
மைத்தலைவிசும்பிடைமயங்கவானவர்
கைத்தலம்பரவியகாமரின்னிய
மெத்திசைமருங்கினுமிரங்கித்தோன்றுமே. (ருகூ)

மைஞ்ஞலம்பருகியகருங்கண்மாமணிப்
பைஞ்ஞலம்பருகியபருமவல்குலார்
மெய்ஞ்ஞலம்விஞ்சையர்விரவமேலெலாங்
கிஞ்ஞரமிதுனங்கள்கிளர்ந்துதோன்றுமே. (கூ0)

ஏரிமணிநெடுமுடியிமைப்பிற்செங்கணவ்
புரிமணிவண்ணனும்பொன்செயாழியுந்
திருமணிவண்ணனுந்தேவிமார்களு
மருமணிவண்ணனுக்கருகுதோன்றினர். (கூக)

ஒண்டமர்மணிகளுமொளிர்பொற்சாதியுங்
கொண்டனரியற்றியகோலச்செய்கையாற்
கண்டவர்கண்கவர்நகரங்காண்டலும்
விண்டுதிர்வினையினன்வேந்தனாயினன். (கூஉ)

பணியொடுநறுவிரைமெழுகிப்பன்மல
ரணியுடையனையனபலவுஞ்செய்தபின்
மணிமுடிநிலமுறவணங்கிவாமன்மேற்
றுணிபடுவினையினன்றுதிதொடங்கினன். (கூங)

வேறு.

மூவடிவினுலிரண்டுசூழ்சுடருநாண முழுதுலகமூடியெழி
ன்முளைவயிரநாற்றித், தூவடிவினுலிலங்குவெண்குடையினீ
ழற் சுடரோயுன்னடிபோற்றிச் சொல்லுவதொன்றுண்டாற்,
சேவடிகடாமரையின்சேயிதழ்கடீண்டச்சிவந்தனவோசேவ
டியின் செங்கதிர்கள்பாயப், பூவடிவுகொண்டனவோ பொங்
கொளிகள்சூழ்ந்து புலங்கொளாவாலெமக்கெம்புண்ணியர்த
ங்கோவே. (கூச)

கருமாலைவெவ்வினைகள்காறளரநூறிக்கடையிலாவொண்
ஞானக்கதிர்விரித்தாயென்று, மருமாலைநன்னெறியைமுன்ப
யந்தாயென்றுமடியேமுன்னடிபரவுமாறறிவதல்லாற், றிருமா
லேதேனருமரவிந்தமேந்துந் திருவணங்குசேவடியாய்தேவா
திதேவ,பெருமானேநின்பெருமைநன்குணரமாட்டார்பிணங்
குவார்தம்மைவினைப்பிணக்கொழிக்கலாமே. (கூரு)

ஒளியாகியுலகாகிநீவிரிந்தாயென்கோவுலகெலாநின்னொளி யினுள்ளடங்கிற்றென்கோ, வளியாரவுலகநீயாள்கின்றாயென் கோ வமருலகுதானின்னதடியடைந்ததென்கோ, விளியாத மெய்ப்பொருளை நீவிரித்தாயென்கோ நீவிரித்தவாறேமெய்ப் பொருள்விரிந்ததென்கோ,தெளியாமலில்லைநின்றிருவடிகண் மெய்மைதெளிந்தாலுஞ்செவ்வனேதெரிந்துரைக்கலாமே.( )

களியானைநாற்கோட்டதொன்றுடையசெல்வன் கண் ணோராயிரமுடையான்கண்விளக்கமெய்து, மொளியானையூ ழிமுதலானானையோங்கி யுலகளவுமாகியுயிர்தமக்குறுகண்செ ய்யா, வளியானையாரழலஞ்சோதிவாய்சூழ்ந்த வருளாழியா னையிணையடிபரவுவார்கட், கெளியானையெந்தைபெருமானை யேயல்லா விறையாகவீங்கொருவரெண்ணுமாறென்னே. ( )

தெருளாமையால்வினவற்பாலதொன்றுண்டு திருவடிகள் செம்பொனாரரவிந்தமேந்த, விருளாழியேழுலகுஞ்சூழொளி யின்மூழ்கவிமையாதசெங்கண்ணினிமையோர்வந்தேத்த, வு ருளாழியானுமொளிமணிமுடிமேற்கைவைத்தொருபாலில்வ ரவுலகநின்னுழையதாக, வருளாழிமுன்செல்லப்பின்செல்வ தென்னோ வடிப்படாதாய்நின்றவகன்ஞாலமுண்டோ.(கூஅ)

வானோர்தமுலகுடையமானீலவண்ணன் மகிழ்ந்திறைஞ் சுமாலையணிமணிமுடிமேல்வைகா, வூனருமறவாழியோடை மால்யானையுடையான்றனொளிமுடியின் மேலுரையோகிற்க த், தேனருமரவிந்தஞ்சென்றேந்தும்போழ்து திருவடிகள்செ ந்தோடுதீண்டாவேயாகி, லானுவிம்மூவுலகுமாளுடையபெ ம்மா னடியுறுவரின்மைதாமறிவுண்டதன்றே. (கூகூ)

தேனருளிமந்தாரச்செந்தாமந்தாழ்ந்து திரளரையச்செம்ப வளம்வம்பாகவூன்றி, வானருளிமாணிக்கச்செங்கதிர்கள்வீசி மதிமருட்டும்வெண்குடையோர்மூன்றுடையவாமன், யான ருளவேண்டியடியிணைபணியும்போழ்து மிமையவர்கோனாயி ரச்செங்கணான்வந்து, தானருளுமாறென்றுதாள்பணியும்போ ழ்துந் தகையொன்றதேலிறைமைதக்கதேயன்றே. ([illegible])

விண்டாங்கூவெவ்வினைவெரூஉவுதிரநூறிவிரிகின்றமெய் ஞ்ஞானச்சுடர்விளக்குமாட்டிக், கண்டார்கணின்னிலைமைக ண்டொழுகயானின் கதிர்மயங்குசோதியாற்கண்விளக்கப்ப ட்டுத், தண்டார்அமரைமலரின்மேனடந்தாயென்றுந்தமனீ யப்பொன்னணையின்மேலமர்ந்தாயென்றும், வண்டாரசோ கினிழல்வாயமர்ந்தாயென்றும் வாழ்த்தினல்லாராயோவான வர்தங்கோவே. (எக)

கருவார்ந்தபொருணிகழ்வுங்காலங்கண்மூன்றுங் கடையி லாநன்ஞானக்கதிரகத்தவாகி, யொருவாதிங்கவ்வொளியினி ன்னுள்ளமாகி னுலகெல்லாநின்னுள்ளத்தேயொளிக்கவேண் டா, திருவார்ந்ததண்மார்பதேவாதிதேவ திரளரையசெந் தளிரசோகமர்ந்தசெல்வ, வருவாரும்வையகமுநீயும்வேறாகி மணிமேனிமாலையக்குவதிங்கென்னோ. (எஉ)

செங்கணெடுமாலேசெறிந்திலங்குசோதித் திருமுயங்கு மூர்த்தியாய்செய்யதாமரையி, னங்கணடிவைத்தருளுமாதி யாயாழி யறவரசேயென்றுநின்னடிபணிவதல்லா, லெங்கணி டரகலுமாறிங்கிலைமையெய்தி யிருளுலகநீக்குமருட்டருகநீயெ ன்று, வெங்கணிருவினையையறவென்றாய்முன்னின்று விண் ணப்பஞ்செய்யும்விழுத்தகைமையுண்டோ. (எஙு)

வேறு.

என்றுநன்கேத்தியிறைஞ்சியிறைவனைச்
சென்றுயர்சேவடிச்சேடந்தலைவைத்து
வென்றவன்கோயில்வலங்கொண்டுமீண்டுமோர்
பொன்றவழ்வேதிகைமண்டபம்புக்கான். (எச)

ஆங்கொர்முனிவனருந்தவப்பல்குணந்
தாங்கியமாமலையன்னதகையவன்
பூங்கமழ்சேவடிப்போதுதன்பொன்முடி
தாங்கியதாமநுதியாற்றுடைத்தான். (எரு)

ஆற்றிலமைந்தவருந்தவத்தால்வினை
யூற்றுச்செறிந்தவொருபெயர்மாதவன்
மாற்றருமந்திரவாய்மொழியாயிடை
யேற்றனகொண்டாங்கிறைவனிருந்தான். (எசா)

வணங்கிமணிமுடிமன்னனிருப்ப
மணங்கமழ்கண்ணியர்மந்திரமாந்த
ரணங்குமறவழிர்தூட்டியடிகள்
பிணங்கும்பிறவிகள்பேர்த்துய்மினென்றார். (எஎ)

வன்னமணிமுடிமன்னனிருந்திட
வின்னியற்செல்வமெனைப்பலவெய்திய
மன்னனறியுந்திருவறமாண்பினை
யென்னைவினவியதென்னைகொலென்றான். (எஅ)

அடிகளடிசிலமைந்ததயில்வான்
முடியமுயலுமுறைமையறியா
னெடிதினதுவறுநீர்மையுமோரான்
வடிவமர்செல்வன்வகையுமதுவே. (எகூ)

மந்திரமாந்தர்மொழிதலும்வானிடை
யிந்தரம்வாழுமமரர்வழிபடுந்
தந்திரனான்றதவத்திறகரசனு
மிந்திரனன்னாற்கெடுத்துரைக்கின்றான். (அ0)

கதியுங்கதியினுட்டுப்புமத்துப்பின்
விதிசெய்வினையும்வினைவெல்வகையு
மதியவர்காமுறும்வீட்டதுமாண்பு
மதிபதிகேளென்றருந்தவன்சொன்னான். (அக)

ஓடுஞ்சகடத்துருளுமொளிகொள
வீடிலொருவன்விசிறும்வளையமு
மாடுந்துகளுமெனச்சுழன்றாருயிர்
நாடுங்கதியுமைவநான்குளகண்டாய். (அஉ)

நரகர்விலங்குமனிதர்நற்றேவர்
விரவினவர்தம்விகற்பமுரைப்பின்
பெருகுமுரையென்றுபெய்மலர்த்தாரோ
யொருகவொருவாறுறுவனுரைத்தான். (அங)

நரகர்கதித்துன்பம்.

கீழாநரகங்கிளத்தும்படலங்க
ளேழாயிருபத்திரட்டியோடொன்பது.
போழாமவற்றுள்ளவர்கீள்புகலிடம்
பாழாமிலக்கமெண்பஃதுடனுன்கே. (அச)

இருளினிருளுமிருளும்புகையு
மருளிலளறுமணலுமபரலு
மருளின்மணியுமெனவிப்பெயர
பொருளினரகங்கள்போதரக்கொண்ணீ. (அரு)

ஆங்கணரகமடைந்தார்படுதுய
ரீங்கணுரைப்பினெமக்கும்பனிவரும்
வாங்கியவற்றின்முதலதன்வார்த்தைகள்
பாங்கின்மொழிவன்பனிமலர்த்தாரோய். (அசா)

* பத்தடம்பத்தொடுமூன்றுமவற்றிடை
யொத்தவுறையுளிலக்கமோர்முப்பது
கொத்தெரிவெம்பவர்கும்பிக்குழியவை
யித்துணையென்பதொரெல்லையிலவே. (அஎ)

பேழைப்பிளவும்பிலத்தின்முகங்களுந்
தாழிப்பதலையும்போலுந்தகையன
வாழப்பரந்தவழுகலளறவை
பீழைப்பதகர்பிறக்குமிடமே. (அஅ)

குழிபடுகும்பிக்கருவாய்பெருகி
யழுகலுடம்பிவையங்குநிறைந்தால்
வழுவியனல்படுபாறைக்கண்வைகிப்
புழுவினுருள்வபொரிவபொடிவ. (அகூ)

புழுவினுருண்டுபொடிந்தவர்பொங்கி
யெழுவர் † புகையைந்தெழுந்தபின்மீட்டும்
வழுவிலர்வீழ்வர்மறிந்துமவ்வாறே.
யொழிவிலாதேனையுள்ளளவெல்லாம். (கூ0)

* பத்தடம் - படலை. † புகை - யோசனைதூரம்.

அந்தோர்வறனேயெனவழைப்பார்களை
வந்தோமெனச்சொல்லிவாங்குபவரில்லை
வெந்தேவிளிந்துமொழியார்விழுத்துயர்
முந்தேவினையமுயன்றனர்புக்கார். (கூக)

அன்னணம்வேதனையெய்துமவர்களைத்
துன்னியுளர்சிலர்தூர்த்தத்தொழிலவர்
முன்னதிற்செய்தவினையின்முறைபல
வின்னணமெய்துமினென்றிடர்செய்வார். (கூஉ)

தங்கிருட்போதிற்றலைச்சென்றயன்மனை
யங்குமகிழ்ந்தாளவளிவள்காணெனச்
செங்கனலேயெனவெம்பியசெம்பினிற்
பொங்கனற்பாவைகள்புல்லப்புணர்ப்பார். (கூங)

கொள்ளுமிவையெனக்கூட்டில்வளர்த்ததம்
வள்ளுகிர்ப்பேழ்வாய்ஞமலிவடிவுக
ளள்ளிக்கதுவவலறியயலது
முள்ளிற்புனைமரமேறமுயல்வார். (கூச)

மேயப்பருவம்விரும்பியமீனினங்
காயப்பெருந்தடிகாண்மினிவையெனத்
தீயைப்பருகியசெப்புத்திரளவை
வாயைப்பெருகப்பிளந்துமடுப்பார். (கூரு)

மறிப்பலகொன்றுமடப்பிணைவீழ்த்துங்
கறிப்பலவெஃகிக்கறித்தவர்தம்மை
யுறுப்புறுப்பாகவரிந்தரிந்தூட்டி
யொறுப்பர்சிலரையவருமொருபால். (கூசா)

இடைப்பலசொல்லியெளியவர்தம்மை
யுடைப்பொருள்வெஃகியொறுத்தபயத்தான்
முடைப்பொலிமேனியைமுண்மத்திகையாற்
புடைப்புநடுங்கிப்புரள்வரொருசார். (கூஎ)

வெறுப்பனவேசெய்துமேலாயவரைக்
குறிப்பலசொல்லியநாவைக்கொடிற்றுற்
பறிப்பர்பரியவயிரமுட்கொண்டு
செறிப்பருகிர்வழியேறச்சிலரே. (கூஅ)

பொரிப்பர்சிறைசெய்துபொங்கெரிமூட்டிக்
கரிப்பரகல்படுகாரகலேற்றித்
திரிப்பர்பலரையுஞ்செக்குரலுட்பெய்
துரிப்பருடலையவருமொருபால். (கூகூ)

பூழப்பலபற்றிப்பறிப்பர்பதைப்ப
மழுப்பலகொண்டவர்மார்பம்பிளப்பர்
கழுப்பலவேற்றியகைப்பர்கடிதே
விழுப்பெரும்பூணாய்வினையின்விளைவே. (க00)

பறிப்பர்பலரவர்கைகளைப்பற்றிச்
செறிப்பர்விரல்களைச்சிவுவர்மேனி
நெறிப்பரெலும்புநிரந்துடன்வீழ
மறிப்பர்மலைமிசைமற்றுமொருசார். (க0க)

சாவகலிந்திடுந்தண்ணீர்ப்பிணிபெரி
தாவென்றலறுமவரையருநஞ்சின்
வாவிகள்காட்டலின்மண்டிமடுத்துண்டு
நாவுமழுகநரல்வரொருசார். (க0உ)

அழலிவையாற்றேமெனவழன்றோடி
நிழலிவையாமெனநீள்பொழிற்புக்காற்
றழல்வளிதாமேதலைவழிசிந்தக்
கழல்வனர்வீழ்ந்துகரிவரொருசார். (க0௩)

முல்லைமுகைமலர்த்தாரோய்முதற்புரை
யல்லலெனப்பலவாயிரகோடிகூ
ளல்லையிறுன்பமிவீற்றினிருமடி
புல்லினர்கீழ்க்கீழ்புரைபுரைதோறும். (க0ச)

விளிவிறுயரொடுமேற்பொங்கிவீழ
மளவுமவர்கண்முறையும்பிறவு
மளவிலகீழ்க்கீழிரட்டியறைந்தே
னுளரொளிஞானமஃதொன்றுமொழித்தே. (கoரு)

பெய்யாவருநஞ்சும்பேரழற்குட்டமுஞ்
செய்யாக்குழிகளுஞ்சீர்த்தடங்களு
நையாநரகரிடமிவைநாறினு
முய்யாபிறவுயிரோசனைக்கண்ணே. (கoசா)

எழுவின்முழமூன்றறுவிரலென்ப
வழுவின்முதலதன்கீழ்ப்புரைவாழ்வா
ரொழிவிலபொங்குவரோசனையேழ்மேன்
முழுவிலைஞ்ஞூற்றிருடுமுக்காவதமே. (கoஎ)

ஆண்டுச்சிறுமைபதினாயிரமுள
நீண்டவர்வாழ்நாணிறைவு * கடலெல்லை
யீண்டிதன்கீழ்க்கீழ்ப்பெருகிவருமெங்கும்
வேண்டிற்சிறுமைதம்மேலோர்நிறைவே. (கoஅ)

மூன்றுமொரேழுமொழிபஃதும்பத்தினோ
டேன்றநல்லேழுமிருபத்திரண்டுமென்
றூன்றவிலைகடன்மூப்பத்துமூன்றுமென்
றூன்றினகீழ்க்கீழுயர்ந்தனவாழ்நாள். (கoகூ)

மூடைகொண்முழுச்செவிமொண்பற்பதக
ருடையந்தலியிருப்புண்பதுநஞ்சே
புடையவர்காணியபோர்நனிமூட்ட
மிடைவர்படுகொண்டுவேதனைமிக்கார். (கக0)

வேவாரழலுள்விளியாரளற்றினு
ளோவார்புகையுளுகையாவுழல்பவ
ராவாவளிநரகர்படுதுய
ரோவாசிலையாயிரங்குந்தகைத்தே. (ககக)

---

* கடல்—சமுத்திரம், அஃதோரெண்.

ஆங்குண்டெனப்பமொழ்துயர்வீழ்பவர்
தேங்கொண்டபைந்தார்த்திறன்மன்னயாரெனிற்
றூங்கொண்டதாரமறுத்துப்பிறன்வரைப்
பூங்கொண்டைமாரைப்புணருமவரும். (கக௨)

உள்ளங்கொடியாருயிர்க்கொலைகாதலர்
வெள்ளங்கொடியனமேவிப்பிறன்பொருள்
கொள்ளுங்கொடுமைக்குணத்தின்மனித்தரு
நள்ளலர்ச்சாய்த்தோய்நரகமடைவார். (கக௩)

நல்லறங்காய்ந்துநலிந்துபொருள்படைத்
தில்லறஞ்செய்யாதிறுகுபவர்களும்
புல்லறம்புல்லாப்புலவுணவைதுரைத்
தல்லறஞ்செய்யுமறிவில்லவரும். (ககச)

தெண்டிரைவாழுந்திமிலுங்கலங்களுங்
கொண்டிரையாகவுயிர்கொல்லுஞ்சாதியுங்
கண்டிடுகாதனைநின்றுற்செயப்படுந்
தண்டிகடம்மொடுஞ்சார்த்தினைகொண்ணீ. (ககரு)

ஆறுநரகவழலினுளாழ்பவர்
தேறுர்திருவறந்தேறினுநல்வத
மேறுர்சிலர்நனியேறினுநில்லலர்
வேறுயினிச்சொல்லவேண்டுவதுண்டோ. (ககசு)

விலங்குகதித்துன்பம்.

விலங்குடன்சாதிவிரிப்பிற்பெருகு
முலங்கொண்டதோண்மன்னவோரறிவாதி
புலங்கொண்டவைம்பொறியீறுப்புணர்ந்த
நலங்கொண்டஞாலத்தினுடியுணர்நீ. (ககஎ)

நின்றுவருந்து * நிகோதப்பிறவியு
ளொன்றறிவெய்தியுழக்குமுயிர்பல
வன்றிச்சிறிதுண்டவற்றினுமவ்வழிச்
சென்றுபெயர்வசிலவீளகண்டாய். (ககஅ)

---

* நிகோதம்—விலங்கு.

ஓரறிவாகியுழக்குமுயிர்களைப்
பேரறிவாரும்பிறரில்லையின்னவை
யாரறிவாரழியுந்திறம்யாதெனிற்
கூரறிவில்லவர்கொன்றிடுகின்றார். (௧௧௯)

உயிர்த்தொகையாறனுளொன்றொழித்தேனைப்
பெயர்த்தொகைபெற்றபிறவிகடம்மைப்
பயிர்த்தலுமின்றியுலகம்பதைப்பச்
செயிர்த்தவர்போலச்செகுத்திடுங்கண்டாய். (௧௨௦)

ஏனையொழிந்தவியங்குநற்சாதிக
ளானைமுதலாவளியவிலங்குகண்
மானுடர்பற்றிவலிந்துநலிந்திட
வூனெய்யுருகுமுழக்குமொருபால். (௧௨௧)

ஊர்ந்துமுழுதுமுறுபாரமேந்தியுஞ்
சாய்ந்தவிலங்குகடாளுண்டந்தாழ்தர
வீர்ந்துமறுத்துமிறைச்சியுவப்பவர்
தேர்ந்துசெகுப்பவுந்தேயுஞ்சிலவே. (௧௨௨)

தடிவிலைவாழ்நர்தடிந்திடப்பட்டு
முடிவிலைவாழ்நர்முருக்கமுரிந்துங்
கொடுவிலெயினர்கள்கொல்லக்குறைந்தும்
விடலிலவேதனைவேந்தவிலங்கே. (௧௨௩)

அந்தோவளியவிலங்குகள்யார்கண்ணு
நொந்தோமெனச்சென்றுநோக்கினுனிப்போடு
வந்தோமெனநின்றமாண்புடையார்களு
முய்ந்தோய்ந்தொழியமுயன்றிடுகின்றார். (௧௨௪)

கன்னியர்வேட்கைகடவுளரும்பிணி
துன்னியதுன்பவிலங்கின்சுடுதுய
ரென்னுமிவற்றினையெம்போல்பவரன்றி
முன்னுணரறிபவர்மற்றில்லைமன்னே. (௧௨௫)

வலியமுழங்கினூநாறினும்வட்கி
நலியுமிவையெனநையுமொருபாற்
பலிபெறுதெய்வங்கண்மேலிட்டுப்பாற்றுங்
ஓர்கையுட்கழியுமொருபால். (கஉ௪)

கண்களிறேக்கியுங்காதலினுள்ளியு
மண்களிடைவிட்டுவைகியும்புல்லியுந்
தண்கமழ்தார்மன்னதாயர்வளர்ப்புழி
யெண்களையின்றிடரெய்துமொருபால். (கஉ௭)

இன்னனதுன்பமொடிவ்விலங்காகுந
ரென்னவரென்னினிவைநனிகேளினி
மன்னியமாதவமேற்கொண்டுமாயங்கள்
பின்னைமுயல்வார்பிறப்புமதுவே. (கஉ௮)

பொருளிடைமாயம்புணர்த்தும்பிறரை
மருளிகளாகமயக்குமவரு
மிருளுடையுள்ளமொடேதங்களெண்ணு
வருளிலவருமவைநனியாவார். (கஉ௯)

பற்றொடுபெற்றிமுனிந்தார்பலபல
செற்றநவின்றூர்செறுப்பொடுசென்றவர்
சுற்றமழிக்குந்துவர்ப்பகைதுன்னினர்
மற்றிவ்விலங்கெய்துமன்னுயிர்மன்னு. (க௩௦)

இல்லையுயிரென்றுமில்லைபிறப்பென்று
நல்லனதீயனநாடிலிலவென்றும்
பல்லனசொல்லிப்படுத்துண்ணும்பாவிக
ணில்லாதுசெல்வர்நிகோதகதியே. (க௩க)

மக்கட்கதித்துன்பம்.

மாகமழைவண்கைமன்னவமக்களு
மேகக்கதியினரேயவிகற்பினர்
சேகர்மிலேச்சர்மனிதர்கடிப்பியர்
போகமனிதரெனப்பொருட்பட்டார். (க௩உ)

பத்துவகையபரதவிரேவதத்
தத்தகுகாலவிழிவினகத்தவர்
சித்தந்தெளிவிலர்சீலமுமடைவிலர்
செத்தவறிவினர்சேகரவரே. (சுகூஉ)

தீவினுள்வாழுங்குமானுடர்தேசத்து
மேவியுறையுமிலேச்சரெனப்பெய
ராவரவருண்மிலேச்சரவரையும்
வீவருந்தாரோய்விலங்கினுள்வைப்பாம். (கநூச)

வாலுநெடியர்வளைந்தவெயிற்றினர்
காலுமொரோவொன்றுடையர்கலையிலர்
நாலுஞ்செவியர்நவைசெய்மருப்பினர்
சீலமடைவிலர்தீவினுள்வாழ்வார். (கநூரு)

மக்கட்பிறப்பெனுமாத்திரமல்லது
மிக்கவெளிற்றுவிலங்குகளேயவர்
நக்கவுருவினர்நாணுவொழுக்கினர்
தொக்கனர்மண்ணேதுளைத்துண்டுவாழ்வார். (கநூசா)

பூவும்பழனுநுகர்ந்துபொழின்மர
மேவியுறையுமிலேச்சர்மிகப்பல
ரோவலர்வாழ்வதொரு * பளிதோபமென்
றேவல்சிலேமன்னவெண்ணியுணர்நீ. (கநூஎ)

தேசமிலேச்சரிற்சேர்வுடையாரவர்
மாசின்மனிதர்வடிவினராயினுங்
கூசின்மனத்தர்கொடுந்தொழில்வாழ்க்கையர்
நீசரவரையுநீரினிழிப்பாம். (கநூஅ)

கூடன்மிலேச்சர்குமானுடரென்றிவ
ரேடவிழ்தாரோயெவராபவரெனிற்
கோடிக்குதர்க்கமுரைத்துக்குணங்களை
நாடினர்கொள்ளாநலமிலவரும். (கநூகூ)

* பளிதோபம்—பல்லம், அஃதோரெண்.

அடங்காமரபினவர்கட்கடங்கார்
விடங்கார்மணுந்தவிடக்கும்பிறவு
முடங்காய்ந்துணக்கொடுப்பாருமுயர்ந்தோர்
தொடங்காவினைகடொடங்குமவரும். (க௪0)

அன்னபிறவியுளாங்கவராபவ
ரின்னுஞ்சிலவரிழிகதிப்பாற்பட்டுத்
துன்னியபோழ்தேசுருங்கியொழிபவ
ரென்னும்பிறர்களறிவிற்கிகந்தார். (க௪க)

மக்கள்வதியுமிரண்டரைத்தீவினுட்
டக்கநிலத்துப்பிறந்தவர்தம்முளு
முக்குலத்தாரொடுங்கூடாமுயற்சிய
ரொக்கலைப்போல்வார்பலருமுளரே. (க௪உ)

முக்குலத்தாரொடுமூடத்தொழுதியா
தக்கதகாவென்பதோராத்தகையவா
மக்களெனப்படுவாரலர்மற்றவர்
பக்கங்கிடக்கும்பதரெனக்கொண்ணீ. (க௪ங)

நல்லநிலங்கணலங்கொள்வடிவுக
ளில்லையமர்ந்துழித்தோன்றலெனவிவை
யெல்லையில்யோனிகளெல்லாமிகந்தெய்த
லல்லியந்தாரோயரிதுபெரிதே. (க௪௪)

* அண்ணையலிகுருடாதியவர்களை
மண்ணுயர்ஞாலத்துமானுடராகவைத்
தெண்ணுநர்யாருளரெல்லாமமையினும்
பெண்ணின்பிறவியும்பீடுடைத்தன்றே. (க௪௫)

எண்பத்துநான்கெனுநூறாயிரமுள
பண்பொத்தசாதிப்பவமென்பமற்றவை
கண்பற்றுந்தாரோய்களிப்பதொர்நல்வினைத்
திண்பற்றுடையவரிவ்வுடல்சேர்வார். (க௪௬)

* அண்ணை—பேடி.

சார்ந்தபொழுதேதலைநாட்கருவினுள்
வார்ந்துவழுவாதமைந்துவளரினும்
மீர்ந்தண்கமழ்நறுந்தாரோயிடர்பல
கூர்ந்துவருபயாங்கூறவுலவா. (கசஎ)

குழவியருஞ்சுரஞ்சென்றுகுமர
வழுவவடவியரிதினிகந்தாற்
கிழவெனுமெல்லைகெழீயினர்சார்ந்து
வழுவினர்செல்வதுமற்றோர்கதியே. (கசஅ)

ஆனைதுரப்பவரவுறைபாழ்குழி
நாநவிர்பற்றுபுநாலுமொருவனோர்
தேனினழிதுளிநக்குந்திறத்தது
மானுடரின்பமதித்தனைகொண்ணீ. (கசகூ)

அன்பும்பிறவுமமைந்தாங்ககத்திருந்
தின்பங்கருதுமிருவர்க்கிடைபல
துன்பங்கடோன்றுந்தொடர்ப்பாடுளவெனின்
முன்பவையில்லெனின்முற்றுந்தொழிலே. (க௫௦)

இன்னநிலைமையிதனுட்பிறந்தவர்
மன்னுமொன்றுண்டுவரத்தாற்பெறுவது
பொன்னியல்சேர் * கற்பபோகநிலங்களிற்
றுன்னுமுயற்சிதுணியுந்திறமே. (க௫க)

துன்னுமுயற்சிதுணியுந்திறமவை
பன்னியுரைப்பிற்பலவாய்ப்பெருகினுந்
தன்னியறானந்தவமொடுபூசனை
யென்னுமிந்நான்கெனவெண்ணியுணர்நீ. (க௫உ)

தலையுமிடையுங்கடையுமாச்சாற்று
நிலைமையதானநிழன்மணிப்பூணோ
யுலைவிலேற்போனுடனீபவனீயு
மலைவில்பொருளின்னமாட்சியமன்றே. (க௫ங)

* கற்பபோகநிலம், போகநுகரும் பதினாறுகற்பலோகம்.

* ஐமையமைந்தார்க் † கெழுமையமைந்தவ
ரிம்மையினியா ‡ ரிமையுதமீவழி
¶ மும்மைக்கு ೦ மும்மடங்காயமுறைமையிற்
செழுய்மையில்புண்ணியம்போர்க்கும்புகுந்தே. (கருச)

திறவியடக்கைபிறர்க்குநன்றுற்ற
லுறவினர்க்கோம்புதன்மெய்த்தலைப்பாடென்
றறிவரறைந்தாங்கறைந்தனன்றானங்
குறைவிலனேற்பவற்கேற்றகுணனே. (கருரு)

போதிசைவாற்றல்பொன்றுதறுகட்ப
மீதற்கிவறுதலேற்பவர்மாட்டெழு
காதல்கழிபற்றிலாமைதெரிந்தறி
வேதமின்றீவான்குணமிவையேழே. (கருசா)

தானுமடங்கியடங்கினர்க்கேந்திய
வூனமுயிர்களுக்கெல்லாமுணர்வது
ஞானவொழுக்கம்பெருகுநலத்தகை
யீனமிலின்பகிலங்கட்குவித்தே. (கருஎ)

கடைநின்றவருறுகண்கண்டிரங்கி
யுடையதம்மாற்றலினுண்டிகொடுத்தார்
படைகெழுதானையபல்களியானைக்
குடைகெழுவேந்தர்களாகுவர்கோவே. (கருஅ)

ஊறுபலசெய்துயிர்கட்கிடர்செய்யும்
வீறில்பொருளைவினையவர்க்கீந்தவ
னேறும்பயனிஃதென்றினியான்சொல்லி
ஞறிணர்த்தாரோய்நகுவதுடைத்தே. (கருக)

தன்கைப்பொருளுமிழந்துதனக்கொரு
புன்கட்கதிசெல்லும்வாயில்புணர்ப்பவன்
வன்கட்வதகர்க்குவான்பொருள்கைக்கொடுத்
தென்கைப்பணிகொண்மினென்பவனைத்தான் (கசா೦)

* விடயம். † சப்தகுணம். ‡ ஆகாரம்.
¶ காரணம். ೦ நவக்கிரமம்.

ஒத்தகுணங்களமைந்தாங்குறுவர்க்குத்
தத்துவந்தேறியவன்செய்ததானங்கண்
* முத்திறத்துள்ளும்படாதுமுடிமன்ன
வுத்தமமேதவருளுய்க்குமுணர்நீ. (கசுக)

மிக்கவிரதம்விரிபலவாயினுந்
தொக்கன † வைந்திற்சொலு ‡ மூன்றி ¶ னுன்கினி
லொக்கவவற்றினுறுபயஞ்சொல்லிடிற்
றக்கவர்க்கொத்ததிற்றன்னங்குறைவே. (கசுஉ)

எல்லாவிரதமியல்பொக்குமாயினு
o மல்லாவிரதமனையாயவர்கட்குக்
கொல்லாவிரதங்குடைமன்னவாமெனின்
வெல்லாவகையில்லையீங்கெழிற்றோளாய். (கசுங)

தம்மையுடையவர்தாங்குந்தவத்திய
லெம்மைவினவினெமக்குமுரைப்பரி
தும்மையுலகத்தொளிபடுமூக்கமோ
டிம்மையிகந்தார்க்கிசையுமதுவே. (கசுச)

தவஞ்செய்துவந்தார்தவநிலைநிற்பா
ரவஞ்செய்துவந்தார்க்கரிதுபெரிதும்
பவஞ்செய்துமாக்கள்பரியுமதுதா
னெவன்செய்துமென்னையீர்மலர்த்தாரோய். (கசுரு)

தெருண்டவர்மேற்கொளுஞ்செய்தவச்செல்வ
மிரண்டும்பலவுமியலாய்ப்பெருகு
மருண்டினியென்னவைவந்தபொழுதே
முரண்டருதோண்மன்னமுற்றவுணர்நீ. (கசுசு)

உலகங்கண்மூன்றுமுடையபெருமாற்
கலகையில்பூசனையாற்றமுயன்றூற்
றிலகமிவரெனத்தேவர்களாவர்
விலகுஞ்சுடரொளிவீங்கெழிற்றோளாய். (கசுஎ)

* கர்ப்பம், உபவாதம், சம்மூர்ச்சனம். † அணு. ‡ குணம்.
¶ சிக்ஷை. o விரதமல்லாதது, அசீது ஏகேந்திரியசீவர

புண்ணியவாயிலெனநாம்புகழ்ந்துரை
கண்ணியநான்காயடங்கினுங்காவல
நுண்ணியநூல்வழிநோக்கிநுனித்தவ
ரெண்ணியவாயில்களின்னுமுளவே. (௧௬௮)

அருளுந்தெருளுங்குணத்தினுணர்வும்
பொருளொன்றுசேரும்புகழ்ச்சிநிகழ்வு
மருளிறவமும்வாலியஞானமு
மிருளறுதியானநிகழ்வுமென்றேழே. (௧௬௯)

ஆருயிர்யாதொன்றிடருறுமாங்கதற்
கோருயிர்போலவுருகியுயக்கொள்ள
நேரினதுமுடியாதெனினெஞ்சகத்
தீரமுடைமையருளினியல்பே. (௧௭௦)

வையினும்வாழ்த்தினும்வாளாவிருப்பினும்
வெய்யமுனிதல்குளிர்தல்வெறுப்பொடு
மையன் * மும்மூடப்பகுதிமயக்கின்மை
செய்யமனத்தோர்தெருளின்றிறமே. (௧௭௧)

அறிவரடிமுதலார்வம்பெருக்க
லுறுவரொழுக்கமுவத்தன்முதலா
விறுதியில்பல்குணநோக்கமென்றின்ன
செறிதலிலார்வங்கள்செல்வந்தருமே. (௧௭௨)

ஆற்றல்வகையாலருந்தவமேற்கொண்டு
நோற்றுநுனித்தலொழுக்கந்தலைநிற்றல்
போற்றியுரைத்தல்புகழ்ச்சிநிகழ்விஃ
தேற்றுமிருவிசும்பீர்மலர்த்தாரோய். (௧௭௩)

அற்ற † துவர்ப்பினராகுமருநிலை
யுற்றவர்க்கிவ்வாறொழுக்கந்தலைநிற்ற
னற்றவமென்றிங்குநாங்கண்மொழிந்தது
மற்றிதுவானுலகாள்விக்குமன்றே. (௧௭௪)

---

* லோகமூடம், தேவமூடம், பாசண்டிமூடம். † அறுவகைத்துவர்ப்பாவன ஆசியம், இரதி, அரதி, சோகம், பயம், சுகுச்சை.

நூற்பொருள்கேட்டுநுனித்தோருணர்வது
மாற்படைகூட்டுமயங்கிருடீர்ப்பது
மேற்படைமெய்ம்மைவிளக்கும்விளக்கது
நாற்படையோய்நல்லஞானநிகழ்வே. (கஎரு)

சென்றுபெருகுந்தியானநிகழ்ச்சியு
மொன்றவுரைப்பினொரு * நால்வகைப்படு
நன்றியின் † மாற்றினைநல்குமிரண்டல்லன
வென்றிவிசும்பொடுவீடுந்தருமே. (கஎசு)

போற்றியபுண்ணியப்பொற்சுண்ணமுன்புகழ்
வாற்றிமுயல்வார்க்ககநிழ்வாமவை
மாற்றியவற்றைமறுதலையாக்கொளிற்
பாற்றியுழப்பிக்கும்பாகநிகழ்வே. (கஎஎ)

காட்சியெனும்பெயர்க்கதிர்விளக்கேற்றிய
மாட்சியுடையார் ‡ வதமிலராயினு
மாட்சிகரிதன்றமருலகல்லது
மீட்சியில்பேரின்பவெள்ளத்துழவே. (கஎஅ)

மெய்ப்பொருடேறுதல்காட்சிவிளக்கது
செப்பூடுமாயின்வினையென்னுந்தீயிரு
ளெப்படிமானுநிலையன்றதனைநின்
கைப்பொருளாக்கொள்கதிர்மணிப்பூணோய். (கஎகூ)

தெய்வமனிதரவரைத்தெளிவுறி
னையவிசயனுமாழிவலவனு
மெய்தவிவர்முதலீரொன்பதின்மரிவ்
வையமருளவருநருளரே. (கஅ0)

ஆழியிழந்தவயகண்டனுதியாப்
பாழிவலவன்பகைவர் ¶ மும்மூவரும்
வீழவுரைத்தேன்வியன்பெருஞாலத்து
ளூழிதொறூழியுலப்பிலகண்டாய். (கஅக)

---

* ஆர்த்தம், ரௌத்திரம், தர்மம், சுக்கிலம். † மாற்று—ஜனனமரணம். ‡ விரதம். ¶ நவப்பிரதிவாசுதேவர்.

தேயவினைவெல்லுந்தெய்வமனிதரு
ணீயுமொருவனைநின்குலத்தாதிக்கட்
டாயவிழுச்சீர்ப்பரதனையுள்ளுறுத்
தாந்திகிரியவருமவரே. (கஅஉ)

தீர்த்தஞ்சிறக்குந்திருமறுமார்பரும்
பேர்த்துப்பிறவாப்பெருமைபெறுநரு
மோர்த்திவ்வுலகினுளுத்தமர்மற்றவர்
தார்த்தங்குமார்பதவத்தின்வருவார். (கஅங)

வேறு.

தக்கமிகுதானமுதலாயதலைநிற்கு
மக்களிவராவர்மதயானைமறவேலோய்
புக்கவருளேபடுவர்போகநிலஞ்சார்ந்தா
ரொக்கவவர்தன்மையுமுரைக்கவுலவாவே. (கஅச)

உத்தமர்களேனையிடையோர்கள்கடையோரா
முத்தகையராவரவர்மூரிநெடுவேலோய்
பத்துவகை * பாதவமியற்றியபயத்தா
லத்தகையசெய்கையுமவர்க்கனையகண்டாய். (கஅரு)

அங்கிருவர்தம்பதிகள்செய்கையையறைந்தா
லிங்கிருவர்செய்கைதமையெண்ணியறிவாய்நீ
தங்குரவரோடிருவர்மாறிருவர்தாமா
யிங்கிருவர்தேவர்கள்வளர்ப்பவியல்கின்றார். (கஅசு)

நக்ககுழவிப்பருவநாற்பதினொடொன்பா
னொக்கவருநாள்கள்கலையோடுடனிறைந்தான்
மிக்கவொளிசூழ்ந்துமிளிர்மேனியவராகித்
தக்கவிளமைப்பருவமெய்தினர்கடாமே. (கஅஎ)

கொம்பழகுகொண்டகுழைநுண்ணிடைநுடங்க
வம்பழகுகொண்டமணிமென்முலைவளர்ந்தாங்
கம்பவழவாயுள்ளணிமுள்ளெயிறிலங்கச்
செம்பவளமேனியவள்கன்னிமைசிறந்தாள். (கஅஅ)

* பாதவம்—கற்பகவிருக்ஷம்.

நீலமணிக்கண்டனையகுஞ்சிகணிறைந்தான்
ஞாலமணிகொண்டகளிர்தாமரைமுகத்தான்
கோலமணிமால்குவடுகுங்குமமடுத்தாற்
போலுமணிமேனியொடுகேளைபொலிவுற்றான். (௧௨௯)

தாதுபடுசெண்பகமிகந்தநறுமேனிக்
காதுபுனைகாமர்குழைபெற்சுருளைமின்ன
மீதுபடுகற்பகவிளந்தளிர்மிலேச்சிப்
போதுபுனைகோதையவள்பூம்பொழிலணைந்தாள். (௧௩௦)

பவழவரையன்னதிரடோட்பரவைமார்பன்
றவழுமணியாரமொடுதார்மணிதயங்கக்
* கவழமனைமேவுகளியானையெனவந்தாங்
கவிழுமலரீர்ம்பொழிலுளையனுமணைந்தான். (௧௩௧)

கன்னியவண்மேலிளையகாளையிருகண்ணு
மின்னுகமழ்தாமரையின்வாயிதழலங்கல்
பின்னியெனவீழ்ந்தபிணையன்னவவள்கண்ணுந்
துன்னுமிருநீலமெனவந்தெதிர்துதைந்த. (௧௩௨)

நையுமெனநின்றவிடையாள்குணமோர்நான்கும்
வையமகிழ்காளையிவன்மாண்டகுணநான்கு
மையெனவகன்றனவணைந்தனர்கனிந்தார்
மெய்யுமிடைவுற்றவிதுவர்ல்விதியின்வண்ணம். (௧௩௩)

அன்றுமுதன்மூன்றளவுபல்லமுடிகாறுஞ்
சென்றுபெருகிக்களிசிறந்துநனிகாம
மென்றுமிடையின்றியிமையாரினுகர்வார்க்கு
நின்றதுபிராயமதுவேகிழலும்வேலோய். (௧௩௪)

கங்குலவணில்லைகலியில்லைநலிவில்லை
யங்கவர்களுளிடைகழிந்தமிர்தயின்று
லெங்குமிலவின்பவெழிலெய்தறருமீதாற்
றங்கியதவத்தரசர்க்கீந்தபயன்றனே. (௧௩௫)

* முகரவுகரப்போலி.

அன்னமிகுபோகமவரெய்திவிளையாடி
முன்னமுடிபல்லமவைமூன்றுடன்முடித்தார்
பின்னுமவர்தம்வழிபிறந்தவரைநோக்கி
மன்னுமினிதேறுவதுவானுலகமன்னா. (ககசு)

பல்லமுதலோர்பகுதிமூன்றிரண்டுமொன்று
மல்லவிருவர்க்கமிர்துமம்முறையினேறு
நல்லநிலங்காலமுயர்வென்றிவைகணுடிச்
சொல்லவுலவாவிவர்கள்செய்கைசுடர்வேலோய். (ககஎ)

செம்பவழம்வெண்பளிங்குபைந்தளிர்சிறக்கும்
வம்பழகுகொண்டமணிமேனியவர்பூவார்
கொம்பவிழுஞ்சண்பகங்கண்முல்லையிணர்க்கோங்க
மம்பவழமுண்ணமுதலானவர்மெய்நாற்றம். (ககஅ)

நலங்கண்மிகுநம்முலகினன்மைமிகுநீராற்
புலங்கண்மிகுபோகமொடுபோகநிலத்துள்ளால்
விலங்கொடுளவாழ்பறவையவ்வுடம்புவிட்டாற்
கலங்கண்மிகுகற்பநிலமேறுவனகண்டாய். (ககக)

வேறு. தேவர்கதித்துன்பம்.

பூவிரியுநறுமேனிப்பொன்னிலங்குமிர்சோதித்
தேவர்கடந்திறமுரைத்தறேவருக்குமரிதெனினு
நாவிரவிநாமுரைப்பநால்வகையாய்விரியுமவை
யோவரியபெரும்புகழாயொருவகையாலுரைப்பக்கேள். ()

ஈரைவர்பவணர்களுமிருநால்வர்வியந்தரரு
மோரைவர்சோதிடருமொருபதின்மேலுறுவரெனுங்
காரையமுறுவகையாய்கற்பகருமீயுலகிற்
சீரையமில்லாததிருமலர்த்தார்த்தேவரே. (உ௦க)

உற்றவர்க்குமேலவர்க * ளொன்பதின்ம † ரொன்பதின்மர்
மற்றவர்க்குமேலவ ‡ ரைவகையரவர்மேலவர்க
ளிற்றவரதெண்வகையாமிவர்க்கென்றுமில்லாது
செற்றநோய்செயிர்பகையென்றிவைமுதலசெலவுணர்நீ. ()

* நவக்கிரைவேயகம். † நவானுதிசை. ‡ பஞ்சானுத்தரம்.

அருமணியினொளிநிழற்றுமாயிரமாம்பணமணிந்த
திருமணிசேர்முடியவருந்தீயொழுகுசிகையருமாப்
பருமணியபடலஞ்சேர்பவணத்துப்பதின்மர்களொண்
குருமணிகொணெடுமுடியாய்கூறுபாடுடையவரே. (௨௦௩)

கின்னரர்கண்முதலாயவியந்தரரைக்கிளந்துரைப்பி
னின்னரருலகத்துளெவ்வழியுமுளராகி
மென்னரம்பினிசைகேட்டும்வெறியயர்வுகண்டுவந்து
மன்னவரைவணங்கியுந்தம்மனமகிழ்வரொருசாரார். (௨௦௪)

குலகிரியுமலையரசுங்குளிர்பொழிலுநளிர்கயமும்
பலகிரியுந்தீவகமும்படுகடலும்படிநகரு
முலகிரியவெளிப்பட்டுமொளிகரந்துமுறைந்தியல்வ
ரலகிரியும்பலகுணத்தோயமரர்களேனைப்பலரே. (௨௦௫)

சந்திரருஞ்சூரியருந்தாரகையுநாண்மீனும்
வெந்திறல்கோட்களுமாமெனவிளங்கிவிசும்பாரு
மந்தரத்தைவலஞ்சூழ்ந்துவருபவருநிற்பவருஞ்
சுந்தரஞ்சேர்மணிமுடியாய்சுடர்பவருஞ்சோதிடரே. (௨௦௬)

எண்ணியமுத்தேவர்களுமிவர்மடந்தையவருமாய்க்
கண்ணியநூற்காட்சிக்கதிர்விளக்குத்தூண்டினார்
நண்ணுப்வோவெஃகினனண்ணார்நல்விரதந்தலைநின்று
புண்ணியங்கள்படைத்தாரக்குழுவினிடைப்பொலிவாரே. ( )

காதலரிற்பிழையாராய்க்கள்ளூன்றேன்கடிந்தகற்றி
யீதலோடில்லிருக்குமிளம்பிடியார்முதலாயா
ரோதினமுத்தேவராயுயர்ந்தவர்க்குளுயர்ந்துளராய்ச்
சோதியும்பேரெண்குணனுந்துப்புரவுந்துன்னுவரே. (௨௦௮)

மந்தரமாநெடுமலையின்மத்தகத்துமேற்கூற்றி
னந்தரப்பேருலகத்துளமரரைமற்றறையுங்கா
லிந்திரவில்லெனஓவெளிப்பட்டிமையவர்கடொழுதேத்தச்
சுந்தரநன்மணிப்படிவமெனச்சுடர்ந்துதோன்றுவரே. (௨௦௯)

அலர்மாரிமேற்சொரிவாரமிர்தநீராட்டுவார்
பலமாண்டகலனணிந்துபலாண்டிசைப்பார்பாடுவார்
மலர்மாண்டமணிக்கவரிமருங்கசைப்பார்மடந்தையரைச்
சிலர்மாணச்சேர்த்துவார்தேவராய்தும்பொழுதே. (உக0)

ஆடாதுமொளிதிகழுமாரணங்குதிருமேனி
வாடாதகண்ணியினர்மழுங்காதபூந்துகில
ரேடார்ந்ததொங்கலராயின்பநீர்ப்பெருவெள்ள
நீடாரக்குளித்தாடுநிலைமையரேயவரெல்லாம். (உகக)

பொன்மாடநெடுநிலத்தார்புகலமளியணைமேலார்
கன்மாடுபொன்வளருங்கதிர்மணிக்குன்றதன்மேலார்
மின்மாடுமிளிர்ந்திலங்குவிமானத்தாரெனினல்லாற்
சொன்மாடுபிறிதில்லைச்சுவர்க்கஞ்சேர்ந்தவர்கட்கே. (உகஉ)

கந்தருவக்கோட்டியுள்ளார்கண்கனியநாடகங்கண்
டிந்திரனோடினிதினிருந்திளம்பிடியார்பாராட்டச்
சுந்தரமாமணிமாடச்சூளிகையரெனினல்லா
லந்தரமேற்பிறிதில்லையமரருலகடைந்தவர்க்கே. (உகங)

கந்தாரங்களித்தனையபனிமொழியார்கண்கவர
மந்தாரவனத்திடையாமணிமுழவினிசைவரங்க
மந்தாரமணியரங்கினெனும்வார்த்தையவையல்லாற்
செந்தாரோய்தேவர்கள்செய்திறற்றொழின்மற்றுடையரே.()

* தீர்த்தங்கடிறந்தவர்க்குச்சிறப்போடுதிசையெல்லாந்
தேர்த்தங்கவொளிபரப்பச்செல்பொழுதுந்தம்முலகிற்
கார்த்தங்குமயிலனையார்காமஞ்சேர்கனிகோட்டி
தார்த்தங்குவரைமார்பதம்முருவினகலாரே. (உகரு)

இமையாதசெங்கண்ணரிரவறியார்பகலறியா
ரமையாதபிறப்பறியாரழலறியார்பனியறியார்
சுமையாகிமணிமாலைசுடர்ந்திலங்குநெடுமுடியா
ரமையாதநல்லுலகினைகைமணிப்பூணமரரே. (உகசு)

---

* தீர்த்தகரபரமதேவர்கள்.

அணுவளவாய்ச்சிறுகுதன்மற்றதிநுட்பமிகப்பெருக [ப்
னணியவர்போனினைத்துழியேகண்ணுறுதல்விழைதகைமை
பணியினமைத்திடல்குறிப்பிற்பலவுருவுநனிகோட
றுணிவமையுநெடுவேலோய்சுரருடையகுணங்களே. (உகஎ)

அளிதருஞ்செங்கோலுடையோயமரருக்குமந்தரமுண்
டொளியோடுபேரின்பமுயர்ந்தவர்க்கேயுயர்ந்துளவாந்
தெளிதருநற்காட்சியதுதிருந்தியமேனெடுந்தகையோர்க்
கெளிதகவும்பெரும்பாலும்பெறலேனோர்க்கரியவே. (உகஅ)

கனைகதிராக்கதிர்கலந்துகண்ணிலங்குதிருமூர்த்தி [ன்மேல்
புனைகதிரொண்மணிப்படிவம்பொழிந்ததுபோற்பொலிந்தத
வனைகதிரின்மணிமுடியும்மாணிக்கக்கடகமுமென்
றினமுதலாச்சுடர்ந்தினிதினியல்பாய்நின்றெரியுமே (உககூ)

செழுந்திரட்பூம்பாவைகளுந்திகழ்மணியின்சுடர்க்கொழுந்து
மெழுந்திலங்குமேனியராயெரியுமணிக்கலந்தாங்கி
மொழிந்துலவாக்காரிகையார்முலைமுற்றாவிளமையா
ரழிந்தலராக்காரிகைமாரமரரசர்தேவியரே. (உஉ0)

இன்பமேபெரிதாகியிடையறவின்றிமைப்பளவுந்
துன்பமொன்றில்லாததுறக்கத்திற்பெருஞ்செல்வ
மன்பெருமாதவத்தினல்வருமொருநாளீறுடைய
* தன்டைதன்கண்மிசையேயென்றடிகடருபொருடெளிந்தார்.

பவணத்தார்க்கொருகடலாமிகையமரும்பல்லமொன்று
மிவணுத்தவமரருக்குமிருவிசும்பிற்சுடரவர்க்குஞ்
சிவணுத்தவுயர்வாழ்நாள்சென்றபினர்ச்செல்கதியு
மவணுத்ததத்தமதுவிதிவகையாமதிபதியே. (உஉஉ)

இரண்டாகுமுதல்வர்கட்கேழீரைந்தீரேழாய்த் [டா
திரண்டிரண்டாய்மூவுலகத்தொழிந்தவர்சேர்பிரண்டிரண்
யரண்டக்வந்தேறிப்பின்னரணவச்சுதருலகின்
மருண்டாயமணிமுந்நீர்பதினொன்றற்கிருமடியே. (உஉங)

---

* ஐம்பதுபல்லம்.

ஆங்கவர்மேலமரரசர்மும்மூவர்க்கோரோவொன்று [ர்
யோங்கினர்மேலொன்பதின்மர்க்கொன்றொன்றாயவர் மேலா
பாங்கினுநீப்பெறுகுவனபதினொந்திற்கிருமுடிமேல்
வாங்கோலிசீரொருமூன்றுவாழ்வெண்பமணிமுடியாய். ( )

ஆயிடையவமரரசர்திறம்வினவின்ணங்கனையார்
வேயிடைமென்பணைப்பொற்றோள்விழைவின்றிப்பெரிதாகி
யேயிடையோரறவின்றாவின்பஞ்செய்திருமூர்த்தி
சேயிடையொள்ளொளிநிழற்றச்செம்மாந்தாரிருந்தாரே. ( )

ஊனிலாவுறுப்பமையவொளியமாயுலகெல்லாம்
பானிலாப்பரந்தெறிப்பப்பளிங்கினதுபடிவம்போன்
மேனிலாமுணியனையார்வெண்சங்கே * ரிலைச்சையாங்
கோனிலாவவரின்மிக்கவரில்லைக்குடைவேந்தே. (உஉசு)

அப்பால † தத்திநியாமதனிலமைந்தாலூணின்
றொப்பாரும்பிறிதிவணின்றாழிநாட்டுபெயர்ந்திழிவின்
றெப்பாலுந்திரிவின்றோரியல்பாயவின்பத்தான்
மெய்ப்பாலதவ்வரைசார்வீற்றிருக்கும்வியனுலகே. (உஉஎ)

கதிநான்குங்கடிசேரும்வாயிலுமிவ்விவையதனால்
விதிமாண்டநரகமும்புன்விலங்குகளுஞ்சேராமை
மதிமாண்டநற்காட்சிவழிநின்றுதவந்தாங்கி
னிதிமாண்டபெருஞ்செல்வநீங்காதவியல்பென்றான். (உஉஅ)

உறுதிகணன்குரைக்குங்காலுபசாரமுறைப்படுதோ
வறுதியில்போருளீரென்றரசனுங்கடிதொழலு
மிறுதியிலாப்பேரின்பமெய்துமாறெடுத்துரைத்தான்
மறுதரவில்கதிபடருமாதவத்துவரம்பாயோன். (உஉகூ)

துறவுச்சருக்கம் முற்றிற்று.

ஆ. விருத்தம் - உ[illegible]



* இலச்சை—வர்ணம். † அத்திதி—அஸ்தித்துவம்.

பன்னிரண்டாவது

# முத்திச்சருக்கம்.



இருவகைவினைகளுமில்லதிவ்வழி
வருவகையிலாததுமறுவின்மாதவர்
பெருவழியாச்செலும்பெயர்வில்சூளிகைக்
கொருவழியல்லதிங்குரைபபதில்லையே. (௧)

பிறந்தவன்பொறிப்புலக்கிவருமப்புலஞ்
சிறந்தபின்விழைவொடுசெற்றஞ்செய்திடு
மறைந்தவைவாயிலாவினைகளீட்டிறு
னிறந்தவன்பின்னுமவ்வியற்கையெய்துமே. (௨)

பிறவிச்சக்கரமிதுபெரிதுமஞ்சினன்
றுறவிக்கட்டணிகுவன்றுணிந்துதூயனு
யுறவிக்கணருளுடையொழுக்கமோம்பினன்
மறவிக்கணிலாததோர்மாட்சியெய்துமே. (௩)

காட்சியுஞானமுங்கதிர்த்துத்தன்பொறி
மாட்சியைவெலீஇமனந்தூயனுயபி
னுட்செய்துநவிற்றியதியானவீதியான்
மீட்சியில்வீட்டுலகெய்தும்வீரனே. (௪)

கடையிலெண்குணத்ததுகாமராகர்க
ளிடைநனியிலாததில்லியற்கையில்லது
மிடையொடுவிழைவுவேறுத்தவீரர்க
ளடைவதோர்நிலைபிறர்க்கறியலாகுமோ. (௫)

மணிமலர்ந்துமிழ்ழொளிவனப்புஞ்சந்தனத்
துணிமலர்ந்துமிழ்தருந்தண்மைத்தோற்றமு
நணிமலர்நாற்றமுமென்னவன்னதா
லணிவருசிவகதியாவதின்பமே. (௬)

வடுவறுமாதவனுரைப்பமாண்புடை
யடிகளதற்வமிர்துண்டவாற்றலான்
முடிபூகொளுலகெய்தமுயல்வனென்றனன்
விரிகதிர்மணிமுடிவென்றிவேந்தனே. (௭)

மிக்கெழுபோதிகைவிலக்கறக்கதன்
ஞெக்கான்றுடன்படவுலகுமேன்றெனத்
தக்கவாய்மொழித்தவத்தரசனேர்ந்திலன்
றொக்கவான்புகழவற்கமைச்சர்சொல்லினர். (௮)

இருட்பிலத்தரும்படரெய்திப்பல்புகழ்
வருட்டதையிலனலிந்துண்ணவாழ்பவன்
பொருட்டகுவாயில்பெற்றுய்ந்துபோம்வழி
யுருட்டுவாறொருவனையுவந்துநாடுமோ. (௯)

அருஞ்சிறைப்பிணியுழந்தலைப்புண்டஞ்சுவான்
பெருஞ்சிறைதனைப்பிழைத்துய்ந்துபோயபின்
கருஞ்சிறைக்கயவர்கைப்பட்டுவெந்துயர்
தருஞ்சிறைக்களமதுசென்றுசாருமோ. (௧௦)

பிணிபடுபிறவிநோய்பெயர்க்குமாதவந்
துணிபவன்றன்னொடுதொடர்ச்சிநோக்குமோ
வணிமுடிதுறமினெம்மடிகளென்றனர்
மணிமுடிமன்னவற்கமைச்சரென்பவே. (௧௧)

எனவவர்மொழிதலுமெழுந்துபோதியின்
சினைமலரிலங்குவேற்சிறுவர்தங்களை
வனமலர்க்கண்ணியான்கூவிமற்றவர்க்
கினலிலானிவ்வுரையெடுத்துச்செப்பினன். (௧௨)

பொருளிலார்க்கிவ்வழிப்பொறியின்போகமு
மருளிலார்க்கறத்திறம்பயனுநூல்வழி
யுருள்விலாமனத்தவர்க்குணர்வும்போன்மனந்
தெருளிலார்க்கிசைவிலடிருவின்செல்வியே. (௧௩)

திருமகணிலைமையுஞ்செல்வர்கேட்டிரேன்
மருவியமனிதரையிகந்துமற்றவள்
பொருவறுபுகழினர்புதியகாமுறு
மொருவர்கண்ணுறவிலளுணர்ந்துகொண்மினே. (௧௪)

புண்ணியமுலர்ந்தபின்பொருளிலார்களைக்
கண்ணிலர்துறந்திடுங்கணிகைமார்கள்போ
லெண்ணிலளிகந்திடும்யாவர்தம்மையு
நண்ணியநண்பிலணங்கைவண்ணமே. (௧௫)

உற்றுநன்கொருவர்கண்ணிற்குமாய்விடின்
மற்றவர்குணங்களைமறைத்துமாண்பிலாச்
செற்றமுஞ்சினங்களுஞ்செருக்குஞ்செய்திடுங்
கற்றவர்தம்மையுங்கழறநோக்குமே. (௧௬)

அம்பெனுநெடியகட்கணிகையார்தமை
நம்பியவிளையவர்பொருளினையுமால்
வம்பினமணிவண்டுவருடுந்தாமரைக்
கொம்பினைமகிழ்ந்தவர்குணங்களென்பவே. (௧௭)

ஆதலாலவடிறத்தன்புசெய்யன்மி
னேதிலாரெனவிகழ்ந்தொழியும்யாரையுங்
காதலாராபவர்கற்றமாந்தரே
போதுலாமலங்கலீர்புரிந்துகேண்மினே. (௧௮)

நிலமகணிலைமையுநெறியிற்கேட்டிரேற்
குலமிலர்குணமிலரென்னுங்கோளிலள்
வலமிக்குசூட்சியார்வழியண்மற்றவ
ளுலமிகுவயிரத்தோளுருவத்தாரினீர். (௧௯)

தன்னுயர்மணவினும்பலர்கடன்னல
முன்னுகர்ந்திகந்தவர்மூரித்தானையீர்
பின்னும்வந்தவரொடுஞ்சென்றுபேர்ந்தில
ளின்னுமஃதவடனதியற்கைவண்ணமே. (௨௦)

வெற்றிவேன்மணிமுடிவேந்தர்தம்மொடு
முற்றதோருரிமைகளில்லள்யாரொடும்
பற்றிலஃபிற்றினர்பாலளன்னதான்
முற்றுநீர்த்துகிலுடைமுதுபெண்ணீர்மையே. (௨௧)

அடிமிசையரசர்கள்வணங்கவாண்டவன்
பொடிமிசையப்புறப்புரளவிப்புற
மிடிமுரசதிரவொரிளவறன்னொடு
கடிபுகுமவளதுகற்பின்வண்ணமே. (௨௨)

இன்னனவிவடனதியற்கையாதலா
லன்னவள்பொருளெனவார்வஞ்செய்யன்மின்
மன்னுயிர்காவனும்மக்கடாங்கினாற்
பின்னைநுங்கருமமேபேணற்பாலிரே. (௨௯)

ஈனிவர்விரிதிரைவேலிகாவன்மே
லானிவர்வேலினீருங்கள்பாலதால்
யானினியெனக்கரசாக்கலுற்றனன்
றேனிவரலங்கலீர்செவ்விகாண்மினே. (௨௪)

உற்றநாள்சிலவுமக்கென்னொடல்லது
மற்றநாள்பலவவைவருவவாதலாற்
கற்றமாண்சிந்தையீர்கவற்சிநீங்குமி
னிற்றையான்றுணிந்ததென்றிறைவன்செப்பினான். (௨௫)

என்றலுமிளையவரிறைஞ்சிக்கைதொழு
தின்றியாமடிகளைப்பிழைத்ததென்னென
வொன்றுநீரிலீரெனவுரையொழிந்தரோ
வன்றவர்க்கயலவனுகிச்செப்பினான். (௨௬)

ஆவியாயரும்பெறலமிர்தமாகிய
தேவிமார்தங்களைக்கூவிச்செவ்வனே
காவியாய்நெடுங்கணீர்கருதிற்றென்னென
மேவினார்தவமவர்வேந்தன்முன்னரே. (௨௭)

இமைப்பதும்பெருமிகையினியிருந்தென
நமைப்புறுபிறவிநோய்நடுங்கநோற்கிய
வமைச்சருமரசர்தோனருளின்ற்றமு
சுமைப்பெரும்பாரத்தின்றொழுதிநீக்கினார். (௨௮)

அணிமுடியமரர்தந்தாற்றப்பாற்கடன்
மணிமுடியமிர்தநீராடிமாதவர்
பணியொடுபொன்மணிக்கலன்கணீக்கினன்
றுணிவொடுசுரமைநாடுடையதோன்றலே. (௯௯)

அருமுடிதுறந்தனனரசனுயிடைத்
திருமுடிமணித்துணர்தேவர்கொண்டுபோய்ப்
பருமுடிநிரையனபரவைப்பாற்கடற்
பெருமுடியமைகெனப்பெய்யப்பட்டதே. (௩0)

முரைசதிர்முழங்கொலிமூரித்தானைபுந்
திரைசெறிவளாகமுஞ்சிறுவர்க்கீந்துபோ
யரைசருமாயிரரரைசர்மேரொடு
விரைசெறிமணிமுடிவிலங்கநீக்கினர். (௩௧)

முடிகளுங்கடகமுமுத்திரமுஞ்
சுடர்விடுகுழைகளுந்துளும்பூண்களும்
விடுசுடர்க்கலங்களும்விட்டெறிந்தவை
படுசுடர்தாமெனப்பரந்திமைத்தவே. (௩௨)

வரிவளைவண்ணனுமறங்கொணேமியத்
திருவளர்மார்பனுஞ்செல்வன்சென்னிமே
லெரிவளர்மணிமுடியிழியுமாயிடைப்
புரிவளைக்கடலெனப்புலம்புகொண்டனர். (௩௩)

காதலராயினுங்காதல்கையிகந்
தேதிலராயினமடிகட்கின்றென
வூதுலைமெழுகினின்றுருகினரவர்
போதலர்கண்களும்புனல்படைத்தவே. (௩௪)

முடிகெழுமன்னர்முன்னிறைஞ்சநம்மைத்தங்
கடிகமழகலத்துக்கொண்டகாதலெம்
மடிகளுமிலவர்போலவாயினர்
கொடிதிதுபெரிதெனக்குழைந்துபோயினர். (௩௫)

தாதுகவகலத்துத்தாமம்வாங்கியு
மீதுவந்தேறியுமேவல்செய்யுநங்
* கோதுகமியாவர்கொண்டாடுவாரெனப்
போதுகமுடியினர்புலம்பொடேகினர். (௩௬)

நின்றிலாநிலைமையினீங்கிநின்றதோர்
வென்றியாலுலகுடன்வணக்கும்வீரிய
மின்றுகோன்புரிந்ததற்கிரங்கல்வேண்டுமோ
வென்றுதானிளையரைமுனிவர்தேற்றினர். (௩௭)

அணங்குசாலடிகளதருளதாய்விடிற்
பிணங்கிநாம்பிதற்றியபேதைவாய்மொழி
குணங்கடாமல்லகோன்குறிப்புமன்றென
வணங்கினர்மணிமுடிமானவீரரே. (௩௮)

திருவுடையடிகடஞ்சிந்தைக்கேதமாம்
பரிவொடுபன்னிநாம்பயிற்றிலென்றுத
மெரிவிடுசுடர்முடியிலங்கத்தாழ்ந்துபோய்
மருவுடைவளநகர்மன்னர்துன்னினர். (௩௯)

பாற்படுசெல்வமும்பரவைஞாலமுங்
காற்பொடியாகவுங்கருதிற்றின்மையா
லேற்புடைத்தன்றுநம்மடிமையீண்டென
வேற்படைவீரனைத்தொழுதுமீண்டதே. (௪0)

வேறு.

வேற்படைவிடுத்துவீரத்தவ்வரசதனைமேவி
நூற்படைமுனிவர்கண்ணுனோக்கியநயத்தனுகிப்
பாற்படுவிரதகோன்மைப்படைப்பெருந்தலைவரைவர்
மேற்படைசெய்யச்செல்லும் வினைவரைவிலக்கவைத்தான்.

குணப்படையிலக்கமெண்பான்குலவுநான்காகுஞ்சீலக்
கணப்படைபதினெட்டாகுமாயிரங்கருவியாகத்
துணைப்படைபிறர்க்குச்செய்யுந் † துன்னயத்தளவுநீக்கி[ன்.
மணப்புடைசிந்தையென்னு மடந்தையைச்செறியவைத்தா

* கோதுகம்—சீராட்டு. † துன்னயம்—மித்தியாநயம்.

செறிவெனப்படுவமூன்றுசெழுமதில்செறியச்செய்து
பொறியெனும்வாயிலேந்துபொற்கதவடைத்துமாற்றி
யறிவனமசிங்ஙகஞ்தயின்மாட்டகம்படியுழையராக்கிக்
கணையி * வீரறுவர்நிற்பவிறைவராக்காக்கவைத்தான். (௪௩)

-கெழுபுரிசைவெல்வார்புறநின்று † பதின்மர்காக்க
டயவர்தம்முளாரேயுழைய ‡ ரீரறுவராக
டையதன்னுலகமூன்றுமொருவழிப்படுக்கலுற்று
டைகெழுவினைவர்தானைமெலியமேற்சென்றுவிட்டான். ()

பின்னணியோகுநான்மையபரகாத்திரம்பெற்றனைத்
தன்னவயவங்கண்முற்றித்தயங்குநான்மனங்களோவா
துன்னியதிசையினுய்க்குமுணர்வெனும்வயிரத்தோட்டி
யின்னியன்ஞானவேழத்தெழிலெருத்தேறினானே. (௪௫)

தருக்கெயில்காப்புவாங்கத்தடக்கைமால்யகடுநுந்த
திருக்கிளர்குணமேற்சேடிச்செழுமலைக்குவட்டினோட்டி
முருக்கியவுருவுவெட்கைமுனைபுலமகற்றிமுற்றிச்
செருக்கியவினைவாவாழுந்தின்குறும்பழிக்கலுற்றான். (௪௬)

நிறையிலார்பொறுத்தலாற்றாநிலையிதுநிறைநதொன்மைக்
கறையி () வீராறுக்கொத்தகண்ணியர்கவரிவீச
முறையினுற்பெருகுமுள்ளச்சமாதிநீர்முறுகவுண்ட [ன்.
குறைவிலாத்தியானமென்னுங்கொற்றவாளுருவிக்கொண்டா

விண்கடாஞ்செய்யும்வெய்யவினைவர்கட்காணமாகிக், கண
கடாமறைக்குமோரேழ்கடிவினைபொடிசெய்திட்டுக், கொண
கடாநவின்ற ¶ வீரெண்கொடிமதிற்கோட்டைகுட்டி, யெண
கடாமுடைய ० வெண்மர்குறும்பரையெறிந்துவீழ்த்தார். ()

ஈடிலர்வெகுளியுள்ளிட்டெண்மரையெறியத்தீயுட், ** பே
டுவந்தொன்றுபாய்ந்து முடிந்ததுமுடிநதபின்னை, யோடிவந்
†† தொருத்திவீழ்ந்தாளுழையவ ‡‡ ரறுவர்பட்டார், ராட
வன்றானன்போழ்துகழித்துவந் ¶¶ தொருவனுழ்ந்தான். ()

---

* பிராணிவிஷயசம்யுங்கள். † தசதர்மம். ‡ துவாதசானுப்பி
ரேக்ஷை. () பாகியாபியந்தரதபங்கள். ¶ சோடசகர்மம். ० பிர
த்தியாப்பிரத்தியாக்கியானம். ** நபுஞ்சகவேதம். †† ஸ்திரி
வேதம். ‡‡ அறுதுவர்ப்பு. ¶¶ புருடவேதம்.

பின்னுமோர்நால்வர் * தெவ்வர்முறைமுறைபிணங்கிவீழ்ந்
ரன்னவர்தம்முளானேகுறைப்பிணமொருவனாகித் [தா
தன்னைமெய்பதைப்பநோக்கியவனையுந்தபுப்பநோனார்
துன்னியதுயிலுமேனைத்துளக்குஞ்செய் † திருவர்பட்டார்.

ஆங்கவரழிந்தபின்னையரச ‡ ரையிருவரோடுந்
தாங்கியீரிருவர்தாக்கித்தலைதுணிப்புண்டபின்னை
வீங்கியவனந்த o ஞான்மைவிழுமிதுமுழுதுங்கைக்கொண்
டோங்கியவுலகிற்கெல்லாமொருபெருங்கிழவனானான். (௫௧)

நெடிதுடனாயதெவ்வர் ¶ நால்வரைநீறுசெய்திட்
டடிகள்பின்முடிவென்பாளையகப்படுத்தனையராக
விடிமுரசதிருந்தானையரசரோடிங்கணீண்டிக்
கடிகமழமரர்வீரன்கடிவினைமுடிவித்தாரே. (௫௨)

கொடிகளுங்குடையுங்கோலக்கவரியுமமரர்தங்கண்
முடிகளுமடந்தமாருமுகிழ்நகைக்கலங்களுஞ்செற்
[illegible]யிறின்முகிழ்முடியாகாயமெல்லாங்
[illegible]கமழ்மலருஞ்சாந்துஞ்சுண்ணமுங்கலந்தவன்றே. (௫௩)

பொன்னரிமாலைபூவின்பொழிமதுப்பிணையன்முத்தின்
மின்னிவர்விளங்குந்தாமமெனவிவைவிரவிவீசித்
துன்னியவினைவர்கூட்டந்துணித்துவீற்றிருந்தகோனைப்
பன்னியதுதியராகியமரர்கள்பரவுகின்றார். (௫௪)

வேறு.

கருமால்வினையரசுகாறளரநூறிப்
பெருமான்முடிவென்னும்பெண்ணரசிதன்னை
யொருவாமைவேட்டெய்தியூழிபெயர்ந்தாலும்
வருமாறிலாதவளநகரம்புக்கானே. (௫௫)

சிந்தைமடவாடொடுத்ததியானவாள்
வெந்துவினைவேந்தர்வீடியபின்விட்டெறிந்து
முந்துமுடிவென்னுங்கன்னிமுலைமுயங்கி
வந்துபெயராவளநகரம்புக்கானே. (௫௬)

* சஞ்சுவலனம். † நித்திராநித்திரை—பிரசலை. ‡ உணர்வு, ரு. பேறு, ரு. காட்சி. o ஞானம், தெரிசனம், சுகம். ¶ ஞானாவரணீயம், அந்தராயம், தெரிசனாவரணீயம், மோகனீயம்.

அலகில்பெருங்குணத்தோனாவரணநீக்கி
யுலகமலோகமுடனேவிழுங்கிப்
புலவன்முடிவென்னும்பூங்கொடியுந்தானு
நிலவுசிவகதியுணீங்காதுநின்றார். (௩௭)

வேறு.

இனையனபலபரவியிறைஞ்சியேத்தியிமையவர்கள்
கனையெரிமிகுவேள்விகலந்துசெய்துகளிப்பெய்தி
யனையவ்வாறவாழியமிர்தநீங்காதகத்தாடிப்
புனையவிர்சுடரொளியார்புகழ்ந்துதத்தமிடம்புக்கார். (௩௮)

களங்காண்வகையுடைந்துகாலர்காமர்கையகல
துளங்காத்திசையின்றிவிளங்கவீரன்மெய்ப்பொருளை
யுளங்காண்கேவலப்பேரொளியர்விம்பருலகெல்லாந்
துளங்காதுயர்ந்துலகின்முடிக்கோர்சூளாமணியானான். (௩௯)

அருமால்வினையகலவமரர்நாளுமடிபரவப்
பெருமான்பிரசாபதிபிரமலோகமினிதாளத்
திருமால்பெருநேமிதிகழ்ந்தசெந்தாமரைத்தடக்கைக்
கருமால்கடல்வரைத்தகண்ணார்ஞாலங்காக்கின்றான். (௪௦)

தங்கோனமருலகமினிதினாளத்தரங்கநீர்ப்
பொங்கோதமதுடுத்தபூமியெல்லாம்பொதுநீங்கிச்
செங்கோலினிதோச்சித்தேவர்காப்பத்திருமாலு
மங்கோல்வேலரசரடிபாராட்டவாள்கின்றான். (௪௧)

வலம்புரிவண்ணனுமகரமுந்நீர்மணிமேனி
யுலம்புரிதோளினனுமுலகமெல்லாமுடன்வணங்கச்
சலம்புரிவினைவென்றதங்கோன்செந்தாமரையடிக்கீழ்
நலம்புரிவிழவியற்றிநாளுநாளுமகிழ்கின்றார். (௪௨)

முத்திச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ௨,௧௩௧.



சூளாமணி முற்றுப்பெற்றது.

